

# ஸ்ரீ திரு.வி.க. நகர் பெனி:பிட் :பண்டு லிமிடெட்

ஸ்தாபிதம் : 1989

தலைமை அலுவலகம் : 10, 2வது தெரு, ஆண்டாள் அவின்யு, (திரு.வி.க. நகர் பஸ் நிலையம் அருகில்), சென்னை – 600 082. போன்: 610390

பாரீஸ் கிளை : 49, வெங்கடாசல முதலி தெரு, முதல் மாடி, (கந்தசாமி கோயில் அருகில்), பார்க் டவுன், சென்னை – 600 003. போன்: 565760

## பென்ஷனர் டெபாசிட்

| குறைந்த பட்ச டெபாசிட் | காலம் | வட்டி விகிதம் |
|---|---|---|
| ரூ. 10,000 | 1 வருடம்<br>2 வருடங்கள்<br>3 வருடங்கள் | 21% |

★ இத்திட்டத்தின் கீழ் ஓய்வு பெற்றோர், 50 வயது அடைந்தோர், விதவைகள், உடல் ஊனமுற்றோர் மற்றும் கல்வி, சமய அறக்கட்டளைகளும் பயன் பெறலாம்.

★ பிரதி மாதம் வட்டி வழங்கப்படும்.

★ வட்டிக்குரிய காசோலைகள் முன்னதாகவே அளிக்கப்படும்

## வைப்பு நிதி

| காலம் (மாதங்கள்) | வட்டி விகிதம் | |
|---|---|---|
| | ரூ.10,000 க்கு கீழ் | ரூ.10,000மும் அதற்கு மேலும் |
| 12 | 17% | 18% |
| 24 | 18% | 19% |
| 36 | 19% | 20% |

★ குறைந்த பட்ச டெபாசிட் ரூ.1,000

★ பிரதி மாதம் வட்டி வழங்கப்படும்.

★ குறைந்த பட்சம் ரூ.10,000 டெபாசிட் செய்தால் வட்டிக்குரிய காசோலைகள் முன்னதாகவே அளிக்கப்படும்.

## மறுமுதலீட்டுத் திட்டம்

| டெபாசிட் தொகை | காலம் | கால இறுதியில் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 12 மாதங்கள் | 1,185 |
| | 24 மாதங்கள் | 1,430 |
| | 36 மாதங்கள் | 1,760 |
| | 44 மாதங்கள் | 2,000 |

## ஐஸ்வர்யா டெபாசிட்

| டெபாசிட் தொகை | காலம் | கால இறுதியில் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 10 வருடங்கள் | 6,919 |
| | 15 வருடங்கள் | 18,885 |
| | 20 வருடங்கள் | 52,827 |
| | 23 வருடங்கள் | 95,760 |

★ மாதாந்திர சேமிப்புத் திட்டத்தில் பிரதி மாதம் ரூ.25 செலுத்தி 12 மாதங்கள் கழித்து ரூ.330 பெறுங்கள்.

★ சேமிப்புக் கணக்கில் உள்ள நிலுவை தொகைக்கு நாள் தோறும் 12% P.A. வட்டி வழங்கப்படும்.

★ நகையின் பேரில் ஒரு சவரனுக்கு ரூ.2,600 வரை கடன் வழங்கப்படும்.

★ சென்னை நகர வீடுகளின் பேரிலும் கடன் வழங்கப்படும்.

★ பங்குதாரர்களுக்கு மட்டும் ★ ரூ.6 செலுத்தி பங்குதாரர் ஆவீர்.

★ இது சீட்டு நிறுவனம் அல்ல.

வார விடுமுறை : தலைமை அலுவலகம் : செவ்வாய், பாரீஸ் கிளை: ஞாயிறு.

Ideal/93

A.M.O. ஹரிஹரேஸ்வர ராவ், B.Com., B.L.,
நிர்வாக இயக்குனர்.

✿ பாதுகாப்பான முறையில் சேமித்து வளருங்கள் ✿

ஜூலை 93 | மலர் : 46
ஸ்ரீமுக - ஆடி | இதழ் : 3

# அமுதசுரபி

எங்கள் தமிழ் மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே - பாரதியார்



● விலை ரூ.5/- ● ஆண்டுச் சந்தா ரூ.60/- ● பதிப்பாளர் : ஏ.வி.எஸ்.ராஜா ● கௌரவ இலக்கிய ஆலோசகர் : என்.வி. சுப்பிரமணியன் ஐ.ஆர்.டி.எஸ்., ● ஆசிரியர் : கலைமாமணி விக்கிரமன் ● இதழ் ஆப் செட் அமைப்பு : சிவகுமார் ● மேலட்டையில் : யோகிராம் சூரத்குமார்

# மன்னிக்கவும்
















– உமாபதி

## கன்யா

'சிக்' ஷாம்பு, மீரா ஹெர்பல் சிகக்காய் தூள் தயாரிப்பாளர்களான 'பியூட்டி காஸ்மெடிக்ஸ் (பி) லிட்' தற்போது மூலிகைகளாலான பேன் கொல்லி மருத்தைத் தயாரித்திருக்கிறார்கள். 'கன்யா' என்ற பெயரில் அறிமுகம் செய்யப்பட்டுள்ள பேன், ஈறு தொல்லையில் இருந்து நிவாரணம் பெற உதவும் 'டி.பெனோத்ரின்' என்ற பல நாடுகளிலும் புகழ் பெற்ற பேன் கொல்லி மருந்து, மூலிகை நிறைந்த சிகக்காய், பூங்காங்காய், துளசி, கசகசா, செம்பருத்தி, கருவேம்பு கலவையில் சேர்ந்திருப்பதால் சிறுவர்களுக்கும் தீங்கு விளைவிக்காத நிலையில் தயாரிக்கப்பட்டுள்ளது. இது ஒரு தடவை உபயோகிக்கக் கூடிய 8 கிராம் 'சாஷே'யில் விற்பனைக்கு வந்துள்ளது குறிப்பிடத்தக்கது. விலை ரூ. 2-தான். இவர்கள் தயாரிப்பான 'நைலி' மூலிகை ஷாம்பு துளசி நெல்லி, துளசி சிகக்காய், துளசி பூங்காங்காய் கலவையில் மனம் நிறையும் மணத்துடன் வட இந்தியாவில் மட்டும் விற்பனைக்கு ஆரம்பித்துள்ளார்கள். "வெகு விரைவில் எல்லா நகரங்களிலும் விற்பனையை விரிவுபடுத்த உள்ளோம்" என மானேஜிங் டைரக்டர் திரு. சி.கே. ரங்கநாதன் கூறினார்.

## ஸ்ரீ ஸத்குரு ஸங்கீதாலயா

ஸ்ரீ ஸத்குரு ஸங்கீதாலயாவின் வருடாந்திர விழா குசலாம்பாள் கல்யாண மண்டபத்தில் வெகு விமரிசையாக நடந்தது. இந்தியன் வங்கியின் தலைவர் திரு.எம். கோபால கிருஷ்ணன் நிகழ்ச்சிகளுக்குத் தலைமை தாங்கினார். ஸங்கீதாலயாவின் பிரின்ஸ்பால் திருமதி. அன்னபூர்ணா நாகராஜன் வரவேற்றுப் பேசினார். சேலம் டாக்டர் எஸ். ஜயலக்ஷ்மி மாணவ மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கினார். பிறகு மாணவ மாணவிகளின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.






திருமதி ஹேமலதா - திரு ஆர். ராமசந்திரன் மகள் குமாரி அபர்ணா பிளஸ் டூ மாணவி. திருமதி நளினி - திரு.டி. ரவீந்திரன் மகள் குமாரி ரஜனி பிளஸ் ஒன் மாணவி. இவர்கள் இருவரும் நாட்டியாச்சார்யா திரு எஸ். அரவிந்தன் - திருமதி வஸந்தா அரவிந்தன் தம்பதியிடம் 'கூத்தம்பலம்' நடனப்பள்ளியில் முறைப்படி ஐந்து வருடங்கள் நடனம் பயின்றவர்கள். பரத நாட்டிய அரங்கேற்றம் சென்னை, ராணி சீதை அரங்கில் மிகச் சிறப்பாக நடந்தேறியது. சென்னை வானொலி நிலைய இயக்குநர் திரு. வி. திருவேங்கடம் தலைமையில் நடந்த இந்நிகழ்ச்சியில் திரு. டி.எஸ். பார்த்தசாரதி கலைஞர்களைப் பாராட்டிப் பேசினார்.

# விரைந்து வளரும் விவேகானந்தா கல்வி நிலையம்

**1981**ஆம் ஆண்டு முதல் 1991ஆம் ஆண்டு வரை பத்து ஆண்டுகளில் விவேகானந்தா கல்வி நிலையத்தின் மூலம் எளிய முறையில் ஆங்கிலப் பயிற்சி பெற்று பயனடைந்தவர்களின் எண்ணிக்கை ஒரு லட்சமாகும்.

பயிற்சி பெறும் மாணவர்களின் எல்லாவித குழப்பங்களுக்கும் பதிலளித்து - பாடங்கள் அனைத்தையும் மிக எளிய முறையில் அமைத்து - வெற்றி நடை போடும் விவேகானந்தா கல்வி நிலையம் கடந்த இரண்டே ஆண்டுகளில் இரண்டு லட்சம் மாணவர்களைப் பெற்றுள்ளது நிச்சயம் பெருமைப்பட வேண்டிய விஷயம்தான்.

தொடங்கிய பன்னிரண்டு ஆண்டுகளில் இரண்டு லட்சம் மாணவர்களைப் பெற்று இமாலயச் சாதனைப் புரிந்துள்ளதையொட்டி - சென்னை, அடையாறு பார்க் ஷெரடன் ஓட்டலில் பயிற்சி வகுப்பில் சேர்ந்த இரண்டு லட்சமாவது மாணவிக்குப் பயிற்சி பாடப்புத்தகங்கள் வழங்கும் விழா நடந்தது.

பிரபல பின்னணிப் பாடகி ஸ்வர்ணலதா இறை வணக்கம் பாடினார். விவேகானந்தா கல்வி நிலைய முதல்வர் திரு வி. ராஜகோபாலன் வரவேற்றுப் பேசினார்.

விவேகானந்தா கல்வி நிலையத்தைப் பற்றி எல்.ஆர். சுவாமி தயாரித்த ஒரு சிறிய வீடியோ தொகுப்பு ஒளிபரப்பப்பட்டது.

திரு நல்லி குப்புசாமி செட்டியார் தலைமையுரை ஆற்றினார். எழுத்தாளர் திருமதி அனுராதா ரமணன் சிறப்புரை வழங்கினார். நடிகர் கமல்ஹாசன் சிறப்பு அழைப்பாளராகக் கலந்து கொண்டு கோவையைச் சேர்ந்த இரண்டு லட்சமாவது மாணவி கீதா குமாரிக்குப் பயிற்சிப் பாடபுத்தகங்கள் வழங்கிப் பாராட்டிப் பேசினார்.

விவேகானந்தா கல்வி நிலைய நிர்வாக அதிகாரி கீதா பிரபு நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்க, இயக்குநர் வி. கணேஷ்ராம் நன்றி கூறினார்.

— நாகராஜ்

# தெய்வ தரிசனம்

## கர்மயோகி

ஒரு புது ஊருக்குத்திருட வந்தவன், பாகவதப் பிரசங்கம் நடப்பதில் உட்கார்ந்தான். பிரசங்கி கிருஷ்ணன் போட்டிருந்த நகைகளை வர்ணித்தார். அன்றிரவு அவர் வீட்டில் புகுந்தான். அவரை எழுப்பினான். அந்த நகைகளைக் கேட்டான். அதைப் போட்டிருப்பவர் எங்கிருக்கிறார் என்றான். பாகவதர் கிருஷ்ண பரமாத்மாவின் விலாசத்தைக் கொடுக்க நினைத்து பிருந்தாவனத்தைச் சொன்னார். கொஞ்ச நாள் கழித்து, திருடன் பாகவதரைப் பார்க்க வந்து, நிறைய நகைகளைக் கொடுத்து, இது உன் பங்கு, பாதி என்றான், பாகவதருக்குப் புரியவில்லை. நீ சொன்ன இடத்திற்கு போனேன், நகை போட்டுக் கொண்டு அங்கு அவரிருந்தார். அதை எடுத்து வந்தேன் என்றான். பாகவதர் கண் கலங்கினார். உனக்கு இருக்கும் பக்தி எனக்கில்லை. நம்பிக்கையோடு போய் கிருஷ்ண தரிசனம் செய்து விட்டாய்; எனக்கும் காண்பி என்றார். இருவரும் போனார்கள். தரிசனம் கிடைத்தது. பரமாத்மா திருடனைப் பார்த்து உனக்கு என்ன வேண்டும் என்றார். "நான் தினமும் உன்னை ஒரு முறை தரிசிக்க வேண்டும்" என்றான் திருடன். தெய்வம் தரிசனம் தந்தபின் திருடனுக்கும் மனம் வேறெதையும் நாடாது.

கன்வு, சூட்சுமப் பார்வை, ஞானதிருஷ்டி, hallucination, ஆலயதரிசனம், கவிஞர் இயற்கையை அகக் காட்சியாகப் பார்ப்பது ஆகியவை நாம் அறிந்தது. ஆவி வேறு, ஆன்மா வேறு. இறந்தவர் ஆவி கொஞ்சநாள் அதே இடத்தை சூழ்ந்திருக்கும். அதைப் பார்ப்பவர்களுண்டு. நாளைக்கு வர இருப்பவர் இன்று கண்முன் நிதர்சனமாகத் தெரிவது சூட்சமப் பார்வை. கவிஞனின் மனம் விரிந்து இயற்கையில் தெய்வத்தைக் கண்டு அதனால் அவனுக்கு கவி எழுகிறது. (Wordsworth)வேர்ட்ஸ்வொர்த் என்ற ஆங்கிலக் கவிஞர் மலை உயிர்பெற்றெழுந்து நகருவதைக் கண்டேன் என்றார். இந்த பார்வை பல்வேறு காரணங்களால் பல வகைப்பட்டவர்க்குண்டு. ஞான திருஷ்டி உயர்ந்தது. ஞானத்தால் ஏற்படும் திருஷ்டி. தெய்வ தரிசனத்தைப் பெற்றுத் தரவல்லது.

Life Divine என்ற நூலில் சச்சிதானந்தத்தில் சத்து எனக் குறிப்பிடுவதைப் பற்றி ஓர் அத்தியாயம் உள்ளது. அதில் அறிவு, புலன்களிலிருந்து விடுபட்டால் ஞானம் ஏற்படுகிறது என்று குறிப்பிடுகிறார். அதுபோன்ற பக்குவம் உடையவர்கள் உண்டு. ஏதோ வேலையாக இருக்கும்பொழுது மனக் கண்முன் உள்ள திரை விலகி உலகம் ஒரு க்ஷணம் பளிச்சென்று திருவுள்ளப்படி காட்சியளிக்கும் என்கிறார்.



பலரும் இதை ஏதோ ஒரு சமயம் கண்டிருப்பார்கள். யோகத்தை மேற்கொண்டவர்க்கு அடிக்கடி இந்தக்காட்சி தரிசனமாகக் கிடைக்கும். பக்குவமான ஆத்மாவுக்கு பவித்திரமான நேரத்தில் வாழ்வில் ஒருமுறை இந்த தரிசனம் கிடைக்கிறது. இது தெய்வ தரிசனம். உலகம் மாயையில்லை. இறைவனின் திருவுருவம் என்பது நிதர்சனமாகிறது.

பக்குவமானவர்களுக்கு பவித்திரமான நேரத்தில் வாழ்வில் ஒரு முறை கிடைக்கும். தெய்வ தரிசனத்தை அன்னை அவர் பக்தர்கள்

அனைவருக்கும் நெஞ்சம் நெகிழ்ந்த போதெல்லாம் அருளுகிறார். அனுதினமும் இதை அனுபவிப்பவர்களும் உண்டு. அழைப்பை மேற்கொள்பவர்கள் கண்ணை மூடினால், தரிசனம் கிடைக்கிறது என்பார்கள்.

வானில் தெய்வம் கோபுரம் போல் உயர்ந்து அடிக்கடி காட்சி கொடுப்பதுண்டு. காட்சி வேறு உருவத்திலும், சாந்தியாகவும், மௌனமாகவும் வருவதும் உண்டு.

புரந்தரதாசர் மனைவிக்கு வந்த இழுக்கினை அகற்ற இறைவன் விஷத்தில் வைர மூக்குத்தியை தந்தார். அதனால் புரந்தரதாசர் மனம் மாறினார். கணவனை அறியாமல் ஏழைக்கு வைர மூக்குத்தியை தானம் செய்தவர், அவன் தன் கணவன் கடையில் அதை விற்கப் போவான் என நினைக்கவில்லை. கணவன் விழித்துக்கொண்டு, மூக்குத்தி எங்கே என்றார். மனைவி ஆபத்திலிருந்து தப்ப விஷத்தை நாடினாள். இறைவன் விஷத்தினுள் வைரமூக்குத்தியாக வந்தார். ஆபத்து விலகியது. கருமியான புரந்தரதாசர் பக்தராகினார். காரைக்கால் அம்மையாருக்கு தெய்வம் மாம்பழமாக காட்சி அளித்தது. தெய்வம் எந்த ரூபத்திலும் காட்சியளிக்கும்.

ஆகஸ்ட் 15, தரிசனத்திற்கு வருவதற்கு முன் டாக்டர் ஓர் ஆபரேஷன் செய்தார். தரிசனத்திற்குக்கிளம்பினார். என்னை இப்படி விட்டு விட்டுப்போகிறீர்களே என வியாதியஸ்தர் மனம் உடைந்தார். மறுநாள் அவருக்கு சிறு நீர் பிரியவில்லை. டாக்டரை மன்னிக்க மனமில்லை. நொந்து கொண்டார். அது சமயம் யாரோ ஒருவர் வந்து படுக்கை அருகில் நின்றார். இவர் கால் கட்டை விரலைப் பிடித்து உலுக்கினார். உபாதை மறைந்தது. நீர் பிரிந்தது. தரிசனம் முடிந்து டாக்டர் வந்தார். நடந்தது கேள்விப்பட்டு யார் இதைச் செய்தது என்று எல்லோரையும் விசாரித்தார். தெரியவில்லை. வியாதியஸ்தரை விளக்கமாக வந்தவர் அடையாளம் கேட்டு ஸ்ரீ அரவிந்தர் படம் ஒன்றைக் காட்டியும் கேட்டார்கள். இவர்தான் வந்தார் என்றார் வியாதியஸ்தர். பக்தன் விட்டுவிட்டு வந்த வியாதியஸ்தரைக் கவனிக்க தெய்வம் வந்து தரிசனம் கொடுத்தது.

அன்னையை தரிசனம் செய்தபின் அடுத்தாற்போல் பகவான் தரிசனம் என முதலில் ஏற்பாடு செய்தபொழுது, அன்னையை ஏற்றுக்கொள்ள முடியாத பக்தர் தலைவிதியே என கியூவில் வரும்பொழுது அன்னையின் பாதங்கள் பொற்பாதங்களாக அவருக்குக் காட்சியளித்தன. தெய்வம் திருவடியாகத் தந்த காட்சியது.

வாழ்வில் பெரும்பாலோர் நமக்கு அப்படியொன்றும் தெரியவில்லையே என்பார்கள். அன்னை பக்தர்களில் பலர் அன்னை தரிசனத்தைப் பல ரூபத்தில் கண்டுள்ளார்கள்.

### தரிசனம் என்றால் என்ன?

ஜீவன் என்றும் ஜோதியாக இருக்கிறான். ஆனால் அவன் உள்ளே மறைந்து புதைந்திருக்கிறான். மேலெழுந்தவாரியாக திரை படிந்துள்ளது திரை விலகுவதில்லை. ஜீவன் எழுச்சியடையும் நேரம், திரை விலகும் நேரம் மின்னலாக தரிசனம் கிடைக்கிறது. இது உள்ளுறை ஜீவனின் தரிசனமாகவே அமையும். பகவான் அன்னை பிறந்த நாளில் புறச்சூழ்நிலை கனிந்து முதிர்ந்திருப்பதால், சூழ்நிலை நம்முள் நுழைந்து தரிசனம் தருவதுண்டு. கப்பல் ஓம் என உறுமியதை அன்னை கேட்டார். தரிசனம் பெறும் பக்குவமுள்ளவர்க்கும் ஒரு நேரம் வாழ்க்கை பிரச்னையாக இருந்தால் தரிசனம் பிரச்னை தீருவதாக அமையும், "இப்பொழுது, இதுதான் வேண்டும்" என மனம் நினைத்தால் தெய்வ தரிசனம் வாழ்க்கைப் பலனாக அமையும்.

நாம் கனிந்து பெறும் தரிசனம் பக்தியால் கிடைப்பது. அன்னை நம்மை நினைத்துச் செயல்படுவதால் கிடைக்கும் தரிசனம் அருளால் நாம் பெறுவதாகும்.

# இலவசமாக காந்த சிகிச்சை

ஹோமியோபதி, அலோபதி, இயற்கை மருத்துவம் போன்ற சிகிச்சை முறைகளுக்கு மத்தியில் தற்போது காந்த சிகிச்சை முறையும் பலரையும் பரவலாகக் கவர்ந்துள்ளது. டில்லி, பம்பாய், கல்கத்தா, பெங்களூர் போன்ற பெருநகரங்களில் மட்டுமே பரவி வந்த இந்த சிகிச்சை முறை தமிழ்நாட்டிலும் தற்போது வேகவேகமாகவே பரவி வருகிறது. ஏற்கனவே, காந்த சிகிச்சை முறையில் கைதேர்ந்த நாடுகளான ரஷ்யா, ஜப்பான் ஆகியவற்றில் காந்த சக்தியால் மட்டுமே எண்பத்து ஐந்து சதவிகித நோயைக் குணப்படுத்த முடியும் என்று நிரூபித்துள்ளனர்.



காந்த சக்தி சிகிச்சைக் கருவிகள்



டாக்டர். அண்ணாதுரை

எண்ணூரைச் சேர்ந்த டாக்டர் அண்ணாதுரையின் "விட்ரீட் யூ மெடி மேக்னட்" என்ற மருத்துவமனை இந்த சிகிச்சை முறையை இலவசமாகவே செய்துவருகிறது. மக்கள் சரியாக அறிந்திராத முறையை முதலில் அறிமுகப்படுத்த வேண்டும் என்ற நோக்கமும் இந்த இலவச சிகிச்சை முறைக்குக் காரணமாக அமைகிறது. இந்த சிகிச்சை முறையை நேர்த்தியாகச்செய்து வரும் டாக்டர் அண்ணாதுரை ஹோமியோபதி, இயற்கை வைத்தியம் ஆகியவற்றையும் தெரிந்து வைத்திருக்கிறார்.

முதலில், "அது என்ன காந்த சிகிச்சை முறை; அது பற்றிச் சொல்லுங்கள்" என்று நாம் கேட்டதும், இரண்டு வட்டமான கையளவிலான காந்தங்களை எடுத்து நம் முன் வைத்தார். 'இதுதான் அஸ்திவாரமே' என்ற பீடிகையோடு ஆரம்பித்தார்.

"வியாதிகள் வருவதற்கு இரண்டு அடிப்படைக் காரணங்கள் உள்ளன. உடலில் கிருமிகள் சேருவதாலும், ரத்த ஓட்டம் சீராக நடைபெறாததால் உடல் பலவீனம் அடைவதாலும் தான் வியாதிகளே வருகின்றன. கம்ப்யூட்டரில் சர்க்யூட்டுகள் இருப்பதுபோல உடம்பிலும் இதயம், மூளை போன்ற முக்கிய பகுதிகள் உள்ளன. இதில் எந்தப்பகுதி எப்படி பாதிக்கப்பட்டாலும் காந்த சிகிச்சையால் சரி செய்துவிட முடியும். ஏனென்றால், கிருமிகளை அழிக்கவும், ரத்த ஓட்டத்தை சீர் செய்யவும் காந்த சிகிச்சை அதாவது சக்தி பயன்படுகிறது" என்று கூறிய டாக்டர் அண்ணாதுரையிடம் காந்த சக்தி உடலுக்குள் எப்படி ஊடுருவுகிறது என்று கேட்டோம்.

அதற்கு அவர், "உடலின் வலதுபுறம் வெப்பமாயும், இடதுபுறம் குளிர்ச்சியாகவும் இருக்கிறது. ஒன்று கூடினாலோ, குறைந்தாலோ வியாதிகள் ஏற்படுகின்றன. இவற்றை காந்த சக்தி பேலன்ஸ் செய்து சமாளிக்கிறது அதற்கு வட துருவம், தென்துருவம் என்ற இரண்டு வகை காந்தங்கள் உள்ளன. இதில் வடதுருவம் குளிர் தன்மை உடையது. தென் துருவம் வெப்பத் தன்மை உடையது. குளிர்சக்தி, வெப்ப சக்தி இவைகளை உடல் அமைப்புக்கு ஏற்றபடி செலுத்துவதுதான் காந்தத்தின் முக்கிய சேவை. பாதிக்கப்பட்ட உறுப்பை நடுவில் வரும்படி செய்துகொண்டு இரு



மின் காந்தப் படுக்கை

புறமும் காந்தத்தை வைத்து விடுவோம். ஒருநாளைக்கு அதிக பட்சம் பதினைந்து நிமிடம் போதும். ஒரு வாரத்திற்குள் குணப்படுத்தி விடுவோம்" என்றார்.

இதில் குடிக்கும் நீரில் காந்த சக்தியை செலுத்தி அதைச் சாப்பிடுவதன் மூலமும் வியாதிகள் குணமாகின்றன. அதாவது ஒரு பாட்டில் குடிநீரை எட்டுமணி நேரத்திற்கு வடதுருவ, தென்துருவ காந்தங்களுக்கு . இடையில் வைக்க வேண்டும். பிறகு அதைக் குடிக்கும்போது நிலைமை சீரடைகிறது. இந்த முறையில் கடுமையான ஜுரங்கள்கூட சரியாகி உள்ளன.

"மூட்டுவலியில் ஆரம்பித்து அல்சர், இதயநோய் எல்லாவற்றையுமே இது குணப்படுத்துகிறது. ஆஸ்துமாவையும் இதனால் சீக்கிரமாகவே குணப்படுத்த முடியும். கண் வியாதிகளை ஆபரேஷன் செய்யாமலேயே சரி செய்கிறோம். நீரிழிவு நோயும் இதில் குணமாகிறது. இளம்பிள்ளை வாதத்திற்கு மின்காந்த சிகிச்சை முறையைத் தனியாகத் தருகிறோம். மருந்தில்லாமல் வேறெந்த விதமான தொந்தரவும் இல்லாமல் எளிமையாக காந்தத்தால் மட்டுமே சிகிச்சை தருவதுதான் இதன் சிறப்பம்சம்" என்றார்.

அவரே தொடர்ந்து, "மின் காந்தப் படுக்கை, மூட்டுவலிப் பட்டை, காந்தக் -கண் கண்ணாடி, காந்த மணி மாலை, ரத்த அழுத்த கடிகாரம், நீரிழிவுப் பட்டை, தலைவலிப் பட்டை மின்காந்தக் கருவி" என்று சிகிச்சை செய்யும் கருவிகளை ஒவ்வொன்றாக அடுக்கிக் கொண்டே போனார்.

இவற்றில் காந்த மணி மாலையும், இரத்த அழுத்த கடிகாரமும் சுவாரஸ்யமான ஒன்று. ஆஸ்துமா வியாதிக்காரர்கள் குளிக்கும் நேரம் தவிர மீதிநேரங்களில் காந்த மாலை அணிய வேண்டும். அதேபோல, இரத்த அழுத்தக்காரர்கள் அதற்கான கடிகாரத்தைக் கையில் கட்டிக் கொண்டால் போதும்.

"இந்தத் துறையைப் பிரபலப்படுத்த அரசு மருத்துவமனைகளில் இந்தக் கருவிகளை வாங்கி வைத்தாலே போதும் குறைந்தது ஐந்தாயிரம் ரூபாய் மட்டுமே செலவாகும். ஆறு வருடம் இது பிரயோஜனப்படும். ஒரு நாளைக்கு நூறு பேருக்கு மேல் சிகிச்சை பெறவும் முடியும்" என்று நம்பிக்கையோடு பதில் சொன்னார் அண்ணாதுரை.

இந்த முறையில் மிகப் பெரிய உபயோகம் என்னவென்றால் நாம் டாக்டர்களைத் தேடி ஒவ்வொரு முறையும் போகவேண்டியதில்லை. ஒரு தடவை சென்று வந்து கருவிகளை வாங்கிக் கொண்டு உபயோகிக்கக் கற்றுக் கொண்டாலே போதுமானது.

தமிழ்நாட்டில் உள்ள எட்டு இடங்களில் இலவச காந்த சிகிச்சை செய்வதற்காக டாக்டர் அண்ணாதுரை தானாகவே கருவிகளை இலவசமாக வழங்கியுள்ளார்.

இவ்வளவு செயல்களையும் ஆர்ப்பாட்டம் இன்றிச் செய்து வரும் அண்ணாதுரை, டெலிதெரபி, வண்ண மருத்துவம், காந்த சிகிச்சை போன்ற முக்கிய நூல்களையும் எழுதியுள்ளார்.

— எஸ்.எல். நரசிம்மன்



# 60 மணி விழா காணும் டாக்டர் ச. மெய்யப்பன்

**1961** ஆம் ஆண்டு சிறிய புத்தக நிலையமாக சிதம்பரத்தில் தோன்றிய 'மணி வாசகர் நூலகம்' இன்று சென்னை, மதுரை, கோவை, திருச்சி மாநகரங்களில் கிளைகளைக் கொண்டு 500க்கும் மேற்பட்ட தரமான நூல்களை வெளியிட்டிருக்கிறது. அவற்றுள் பல, பரிசுகள் பல பெற்றுள்ளன.

ஆண்டொன்றுக்குப் பல்லாயிரக்கணக்கான பிரதிகளுக்கு மேல் விற்பனையாகும் பள்ளி மாணவர்களின் 'வெற்றித் துணைவன்' இவர்களின் வெளியீடே. அந்த வெற்றி நூலின் உரிமையாளர் டாக்டர் ச. மெய்யப்பன்.

புதுக்கோட்டை மாவட்டம் கடியாபட்டி, இராமச்சந்திரா புரம், வயிரவன் கோயிலைச் சேர்ந்த தவத்திரு சண்முகனார் - மீனாட்சி ஆச்சியின் தவப் புதல்வராக 1933ஆம் ஆண்டு பிறந்தவர் பதிப்புச் செம்மல் டாக்டர் ச. மெய்யப்பன். 16.7.93 அன்று பதிப்புச் செம்மல் ச. மெய்யப்பனுக்கு 60 அகவை நிறைவடைகிறது. மணி விழாவை மிகச்சிறப்பாகக் கொண்டாட நூலாசிரியர்கள், பதிப்பாளர்கள் இலக்கிய அன்பர்கள் ஏற்பாடு செய்து வருகிறார்கள்.

கலைத் தந்தை கருமுத்து தியாகராசர் நிறுவிய விசாலாட்சி கலாசாலையில் பள்ளிப் படிப்பும், கோடி கொடுத்த கொடையாளர் அழகப்பரின் கல்லூரியில் இளநிலைக் கல்வியும், தமிழிசைக் காவலர் அண்ணாமலையரசரின் பல்கலைக் கழகத்தில் தமிழ் முதுகலையும், பின்னர் முனைவர் பட்ட ஆய்வும் பெற்ற டாக்டர் மெய்யப்பன் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தைப் பெரிதும் நேசிக்கிறார்.

அவரைச் சந்தித்து உரையாடுவதே தனி இன்பமாக இருக்கும். அவ்வளவு இனிய பேச்சு. தான் பிறந்த சமூகத்தைப்பற்றி அவர் கூறும்போது, "நெடுங்காலம் தன வணிக சமுதாயமாக மட்டுமே அறியப்பெற்ற இனத்தில் இன்று மிகப் பெரிய பேராசிரியர்கள், சாதனையாளர்கள், நீதியரசர்கள், துணை வேந்தர்கள், கல்விச் சிந்தனையாளர்கள், பொறியாளர்கள், மருத்துவர்கள், கணக்காய்வாளர்கள் எனப் பல்வகைச் செம்மல்கள் தோன்றி வருவது சிறப்பான கல்வி வளர்ச்சியைக் காட்டுகிறது. நகரத்தாரின் கல்விக் கொடை பெரிது. வெளிநாட்டுத் தொடர்பு கூட வணிகச் சார்பிலிருந்து கல்வி மற்றும் பணிச் சார்புடையதாக மாறி வருகிறது" என்கிறார்.

"காகித வணிகத்தில் 50 சதமும், பதிப்புத் துறையில் 75 சதமும் ஈடுபட்டுள்ள நகரத்தார் சமூகத்தில், எழுபதுகளில் இருந்து புதிய கோடீஸ்வரர்கள் பலர் உருவாகி வருவது அந்தச் சமூக பொருளாதார மறுமலர்ச்சியைக் குறிக்கிறது" எனக் கருதுகிறார்.

கல்வி பெற்றுத் தொழில் முனையும் ஆர்வம் மிக்கோர் நவீன அச்சுத் தொழில் நுட்பங்களின் துணையுடன் ஈடுபட்டால் பதிப்புத் தொழிலில் மிகச் சிறந்த வாய்ப்புகள் இருப்பதாகவும், அகில இந்திய மற்றும் உலகச் சந்தைகளில் சாதனைப் படைக்க இயலும் எனவும், ஏற்றுமதி வருவாய் பெறுவது சாத்தியம் எனவும் வருங்கால வாய்ப்புகள் பற்றிய கேள்விக்குப் பதிலுரைக்கிறார். இந்தப் பதிப்புலகச் செம்மல்.

'நம்பிக்கை நட்சத்திரங்கள்', 'நாளையத் தலைவர்கள்', 'நாற்றங்கால்', 'வளர்ப்புப் பண்ணை', 'பயிற்சிக்களங்கள்' எனப் பலவாறாக இளைஞர்களை உயர்வாக அழைக்கும் இவர் நகரத்தார் இளைஞர் சங்கங்கள் நகர்தோறும் தோன்றி, தாய்ச் சங்கங்களுடன் இணைந்துச் செயலாற்ற வேண்டும் என்று அறைகூவல் விடுக்கிறார்.

சிதம்பரம் சுழற்கழகத்துடன் தன்னை இணைத்துக் கொண்டிருக்கும் திரு. மெய்யப்பன்

# மனம் விட்டுப் பேசுவோம்

1990 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் தொடங்கிய கலைமாமணி விக்கிரமன் எழுதி வந்த 'கங்காபுரிக் காவலன்' தொடர்கதையின் இரண்டாம் பாகம் சென்ற (ஜூன்) மாதம் இதழில் முடிவடைந்துள்ளது. திருபுவனத்தைச் சேர்ந்த திருமிகு. தாமரைச் செல்வி சுந்தர், கங்காபுரிக் காவலனின் ஒவ்வோர் எழுத்தையும் படித்து ரசிக்கும் வாசகர். உடனுக்குடன் கடிதம் எழுதுபவர். இவர் இம்மாதம் எழுதியுள்ள நிறைய கடிதங்களில் ஒரு கடிதத்தில், 'நிலவின் குளிர் வந்து நெஞ்சைத் தழுவினாற்போல், மாதா மாதம் எங்கள் மனசை தீண்டி கங்கை போல் பிரவாகமாய் எழும் எழுத்து எனும் மயக்கும் ஆற்றல் மிகுந்த கங்காபுரிக் காவலனின் இரண்டாம் பாகம், நெஞ்சில் நிறைந்து நிற்கிறது. மூன்றாம் பாகத்தை எதிர் நோக்கி எங்கள் உள்ளம் ஏங்குகிறது'– என்று தன் ஆவலைத் தெரிவித்துள்ளார். இந்த வாசகர் மட்டுமில்லை; நிறைய வாசகர்கள் 'கங்காபுரிக் காவலனைப்' பாராட்டி கடிதம் எழுதியுள்ளனர். மேலகிருஷ்ணன் புதூர், ஆர்.கே.லிங்கேசன், ஜெயா வெங்கட்ராமன் எழுதியுள்ள, 'உறவுகள் நெஞ்சை நெருடும் ஆழமான சிறு கதை என்றும் கவியரசு காம ராசனின் 'மனிதத் தாய்' உணர்ச்சிப் பூர்வமான கவிதை என்றும் குறிப்பிட்டுள்ளார்.

'தமிழில் தவறுகளை அறிவோம்' கட்டுரையைப் படிக்க படிக்க மலைப்பாக இருக்கின்றது இ(எ)வ்வளவு தமிழ் அறிந்தும் இன்னமும் பல இடங்களில் நாம் தமிழைப் பிழையாகவே உச்சரித்தும், எழுதியும் வருகிறோம் என நினைக்கும்போது உண்மையில் வெட்கப்பட வேண்டியதுதான்' என்று ஒப்புக் கொண்டு, 'நம்மை நாமே திருத்திக் கொள்ள ஒரு பயனுள்ள பகுதியைத் தொடர்ந்து வெளியிட்டு வருவதற்கு' நன்றியும் தெரிவித்துள்ளார் மதுரையைச் சேர்ந்த திருமதி சுகந்தி நாராயணன்.

கொளுத்தும் கோடை வெயிலுக்கு இரண்டு பக்க கவிதைப் பூங்கா இதமான தென்றலைத் தந்து மகிழ்வித்ததாம், வியாசர் காலனி – சிம்ம வாஹினிக்கு.

இந்தியாவை ஆண்ட மொகலாயர்கள் பிற மதத்தினரிடமும், நாட்டு மக்களிடமும் எவ்வளவு மதிப்பும் மரியாதையும் வைத்திருந் தார்கள் என்பதை ரகமி எழுதிய 'பாபரின் உயில்' மூலம் தெரிந்து கொண்டேன். இந்தக் கட்டுரை இன்றைய மத துவேஷர்களுக்குத் தெளிவைத் தரும் என குமரி மாவட்டம், களியலைச் சேர்ந்த திரு. அ. செபாஸ்டின் நம்பிக்கை கொண்டுள்ளார். இந்தக் கட்டுரைக்கு நிறைய வாசகர்கள் தங்கள் பாராட்டுகளைத் தெரிவித்துள்ளனர். அதில் வேப்பத்தூர், வை.சிப்பிக்குள் ராமனும் – தாமரைச் செல்வி சுந்தரும் குறிப்பிடத்தக்கவர்கள்.

சட்டநாதபுரம், ராஜா; கிண்டி ப.ஜானகி, சென்னை 97, விஜயசுந்தர்; இராயுதுப் பாளையம், அன்பானவன் போன்றவர்களும் தங்கள் கருத்துகளை மனதில் படும்படி விவரித்துள்ளனர். இதில் பெயர் விட்டுப் போன வாசகர்கள் மன்னிக்கவும். அடுத்த மாதம் நிச்சயம் உங்களுடன் 'மனம் விட்டுப் பேசுவோம்!'

ரோட்டரி (சுழற் கழகம்), லயன்ஸ் (அரிமா) கிளைகள் பலவற்றில் நகரத்தார்கள் செயல் வீரர்களாகவும் விளங்குவது பற்றிப் பெருமைப்படுவதுடன், கட்டமைப்பு, விதி முறைகள், நோக்கங்களை நன்கறிந்து செயல்படுவதே இதற்கான காரணம் என்கிறார்.

நகரத்தார் இளைஞர்கள் உலக அளவிலோ, இந்திய அளவிலோ, தமிழக அளவிலோ சாதனைப் படைத்த அனைவரின் வரலாறுகளைக் கற்றறியாவிட்டாலும் நம்மினத்துப் பெரியவர்கள் பலருடைய வரலாறுகளையாவது படித்துப் பயனுற வேண்டும் என்று வலியுறுத்துகிறார் பலரது வாழ்க்கை வரலாறுகளைக் கற்ற திரு. மெய்யப்பன்.

சென்ற தலைமுறையின் சிறந்த சாதனையாளர்களாக தமிழிசைக் காவலர் செட்டிநாட்டரசர் அண்ணாமலைச் செட்டியார், வள்ளல் அழகப்பர், கலைத் தந்தை கருமுத்து தியாகராசர் மற்றும் இந்தியாவிலேயே முதன் முதலாக ரேயான் தொழில் துவக்கிய எம்.சி.டி.எம். முத்தையா செட்டியார் ஆகியோரைக் குறிப்பிடும் திரு மெய்யப்பன் தனக்குத் தூண்டுதலாக அமைந்தவர் திரையுலக மேதை ஏவி. மெய்யப்ப செட்டியார் என்கிறார். நூல்கள், களஞ்சியங்கள் தொகுப்பதில் சோம. லெ.யும், உலகப் பயணங்கள் மேற்கொள்ள ஏ.கே. செட்டியாரும் தனது வழிகாட்டிகள் எனவும், தன்னை வழி நடத்திச் செல்லும் உணர்வுகள் மொழி, சமுதாயம், வணிகம் ஆகியன எனவும் உரைக்கிறார் திரு. மெய்யப்பன்.

"தொடர்ந்து கற்றல், திட்டமிட்ட வாழ்வு, காலம் போற்றுதல், பிரயாணங்கள், கடிதப் போக்குவரத்து, புதுமை நோக்கு, தொழிலாளர் நல்லுறவு, வாங்கும் வசதிக்கேற்ற விலைக் கொள்கை, விளம்பர உத்தி, வாடிக்கையாளர் உபசரிப்பு, நேரடி மேற்பார்வை, நேரடி ஈடுபாடு ஆகியவையே என் வெற்றியின் ரகசியம்" என்கிறார் இயற்கையிலேயே இரக்க சுபாவம் மிகுந்த மெய்யப்பன்.

செட்டி நாட்டுத் திருமணங்கள், குட முழுக்கு வைபவங்கள், சுபநிகழ்ச்சிகள் என்றால் வெற்றிச் சிந்தனைகள், பக்திப் பாமலர்கள், விழா மலர்கள் தவழும். இவற்றிற்குச் சொந்தக்காரராக விளங்கும் மணிவிழா தம்பதியர் திரு ச. மெய்யப்பன் – திருமதி மீனாட்சி ஆச்சி இறையருள் பெற்று நீடு வாழ்ந்துச் சிறக்க மணிவிழா நன்னாளில் 'அமுதசுரபி' மனமார வாழ்த்துகிறது. ⚬⚬



# மறக்கலாகாது

## ருக்மிணி பார்த்தசாரதி

**அமரர் சின்னி கிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற சிறுகதை**

'அகன்ற கருவிழிகள்... அளவான மூக்கு... ரோஜா மொட்டைப்போல் இதழ்கள். தந்த நிறம்... பூமாதான் எத்தனை அழகு?' என்று நினைத்துக் கொண்டாள் அம்மா.

பூமாவோ தெருவையே பார்த்துக் கொண்டிருந்தாள். அப்பா திரும்பி வரும் நேரமாகிவிட்டது.

"உன் அப்பா திரும்பிவர நேரமாச்சு, பூமா! நல்ல சேதியோடுதான் வருவார், பாரேன்!" என்றாள் அம்மா.

"எப்படி உன்னால் நிச்சயமாய்ச் சொல்ல முடியும், அம்மா?"

"ஏன் முடியாது? நீ புகுந்த வீடு போக நாள் குறித்துக் கொண்டு வரத்தானே உன் அப்பா சம்பந்தி வீட்டுக்குப் போயிருக்கார்? அநேகமாக இந்த மாசத்துக்குள் நீ கிளம்ப வேண்டி இருக்கலாம்... எப்படியோ, "பெண்ணை நாளைக்கே கொண்டு வந்து விடுங்கள்!" என்று அவர்கள் அவசரப்படாவிட்டால் சரி. எனக்குத்தான் கொஞ்சம் பட்சணம் பண்ண, ஜவுளி வாங்க டைம் வேண்டாமா?" அம்மா சிரித்தாள். அவள் அப்படிச் சிரிப்பதைப் பார்க்கவே பூமாவுக்கு மகிழ்ச்சியாக இருந்தது.

பூமா - வேணுவின் திருமணம் நடந்தேறியபோது பூமா ப்ளஸ் - டூ மாணவி... வேணு எம்.ஏ. இறுதியாண்டு கல்லூரி மாணவன். படிப்பு முடிந்து வேணு வேலையில் அமர்ந்த பிறகு பூமா புகுந்த வீடு வருவது என்று இரு சாராருக்குமிடையே வாய் வார்த்தையாக ஒப்பந்தமாகியிருந்தது. இதோ, ஓராண்டு கழிந்துவிட்டது. வேணுவுக்குத் தன் சித்தப்பாவின் சிபார்சினால் உடனேயே வேலை கிடைத்துவிட்டது. இனி பூமா புகுந்த வீடு செல்வதில் தாமதம் தேவையில்லை.

"அதோ, அப்பா வந்தாச்சு!" என்றாள் பூமா. தெருக்கோடியில் அவருடைய உருவம் தெரிந்தது.

அம்மா ஆவல் மயமாக அவரை எதிர்கொண்டழைக்கத் தயாரானதைப் பார்த்துவிட்டுப் பூமா உள்ளே சென்றாள்.

சாதாரணமாக அம்மாவின் முகத்தைப் பார்த்தாலே அப்பாவின் முகம் மலரும்... இன்றோ அவளைப் பார்த்தவர் முறுவலிக்காமலேயே உள்ளே வந்தார். கையிலிருந்த துணிப்பையைக் கோபமாக வீசி எறிந்தார். இதில்தான் இன்று காலை பழங்களை வாங்கி நிறைத்துக் கொண்டு அவர் சம்பந்தி வீட்டுக்குச் சென்றிருந்தார்... "உஸ்... அப்பாடா!" என்று மேல் துண்டால் முகத்தைத் துடைத்துக் கொண்டார்... அம்மாவைப் பார்த்து, "குடிக்க செம்பு நிறைய ஜில்லுனு தண்ணீர் கொண்டு வா!" என்றார். அவள் கொண்டு வந்த நீரை முழுவதுமாகக் குடித்தார்... பின், "வெட்கம் கெட்ட மனிதர்கள்... பகல் கொள்ளைக்காரர்கள்!" என்றார்.

"என்ன நடந்தது? விவரமாய்ச் சொல்லுங்கள்!" என்றாள் அம்மா.

கோபமும் ஆற்றாமையும் பொங்கி எழச் சொல்லித் தீர்த்தார் அப்பா.

அவர் சம்பந்தி வீட்டை அடைந்தபோது வேணு அலுவலகம் சென்றிருந்தான்.

அவன் பெற்றோர் இருவரும் வீட்டில்தான் இருந்தார்கள்... அவர் எடுத்துச் சென்ற பழங்களை வாங்கிக் கொண்டார்கள்... "வீட்டில் எல்லோரும் சௌக்கியமா?" என்று விசாரித்தார்கள்.

பூமா புகுந்த வீடு செல்லத் தேதி குறிப்பிடுமாறு அப்பா வேண்டியபோதுதான் சம்பாஷணையில் சுருதிபேதம் தோன்றிற்று. வாய் கூசாமல் அவர்கள் சொன்னதன் சாராம்சம் -

'வேணு - பூமாவின் திருமணம் நடந்தபோது அவன் வெறும் கல்லூரி மாணவன்... இப்போது நல்ல உத்தியோகத்தில் இருக்கிறான்... கை நிறையச் சம்பாதிக்கிறான்... தன்னோடு வேலை செய்பவர்கள் அழகான பெண்களை நிறையச் சீர்வரிசையோடு மணப்பதைப் பார்த்து, தன்னோடு ஒப்பிட்டுப் பார்க்கிறான்... இது இயற்கைதானே! பூமா பார்க்க லட்சணமா இருந்தால் போதுமா? பெருமையாகச் சொல்லும்படி என்ன சீர் கொண்டு வரப் போகிறாள்? சமூக அந்தஸ்தில் தமக்கு மிகமிகக் கீழே இருப்பவர்களோடு அவர்கள் சம்பந்தம் செய்ததே குற்றம்தான்... பெண் அழகாக இருக்கிறாளே, ஜாதகம் பொருந்துகிறதே என்று நினைத்து ஏழைக் குடும்பத்தில் பெண் எடுத்தது தப்புதான்... சரி... நடந்தது நடந்துவிட்டது. இனி நடக்க வேண்டியதைப் பார்ப்பது தான் புத்திசாலித்தனம்... பூமா புகுந்த வீடு வரவேண்டுமானால் அவர்கள் குறித்துக் கொடுக்கும் சில பொருள்களைப் பூமாவின் பெற்றோர் வாங்கித் தர வேண்டும். இல்லாவிட்டால் அவருடைய அருமையான செல்ல மகள் பிறந்த வீட்டோடு இருக்க வேண்டியதுதான்...

அப்பா சொல்லி முடித்து விட்டுத் தம் ஷர்ட் பாக்கெட்டிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து அம்மாவிடம் நீட்டினார்... "அவர்கள் கொடுத்த லிஸ்ட்... என்னென்ன வேணும்னு எழுதிக் கொடுத்திருக்கிறார்கள்... உரக்கப் படி!"

அம்மா படித்தாள்... "ஒரு மோட்டார் பைக், ஒரு கலர் டி.வி., நல்லதாக ஒரு வி.ஸி.ஆர்., பையனுக்கு மைனர் செயின், வைர மோதிரம்... மற்றபடி... கட்டில் மெத்தை, துணிமணிகள் சம்பிரதாயப் படி..."

"இப்படிக் கேட்க அவர்களுக்கு எப்படி மனசு வந்தது? எழுபது, எண்பதாயிரம் இருந்தால்தானே இதையெல்லாம் வாங்க முடியும்?"

"ஆமாம்!"

"நம்மிடம் அத்தனை பணம்..."

"இல்லை!"

"பின்னே என்னதான் செய்யறதாக உத்தேசம்?"

"தெரியலை! இதையெல்லாம் நாம் ஆறு மாசத்துக்குள் வாங்கித் தரணுமாம்... அதற்கு மேல் அவர்கள் பொறுக்க மாட்டார்களாம்!"

"பொறுக்காமல்?"

"பெண்ணிடம் ஏதோ குறைன்னு பழி சுமத்தி டைவர்ஸ் வாங்கறது கஷ்டமா என்ன, பணக்காரர்களுக்கு? எதிர்த்து வழக்காட நம்மிடம் பணம் இருந்தால் லிஸ்ட் சாமானையே வாங்கிடலாமே?"

"இப்படியெல்லாம் அபசகுனமாகப் பேசாதீர்கள். பூமாவின் மனசு என்ன பாடு படும்?"

அப்பா மௌனமானார்.

அதன் பிறகு பல நாட்கள், பல முறை விஷயத்தை அலசி அலசித் தீர்த்தனர் பூமாவின் பெற்றோர். பலன் என்னவோ பூஜ்யம்தான்.

"நான் வேலையிலிருந்தாலாவது ஆபீஸில் கடன் உடன் வாங்கலாம். நானோ ரிடயராகி மூணு வருஷமாகிறது..."

"பூமாவின் கல்யாணத்துக்குப் பட்ட கடனையே இன்னும் முழுசாக அடைக்கலே!"

"ஆமாம்!"

"வசதியான நிலைமையில் இருந்து கொண்டு கடன் தருகிற மாதிரி நமக்கு உறவுக்காரர்களும் கிடையாது!"

"ஒரே வழிதான் இருக்கு!"

"என்ன?"

"இந்த வீட்டை விற்றால் ஒரு லட்சம் தேறும்!"

"அப்புறம்? என் பென்ஷனில் வாடகை வீட்டிலும் இருந்து கொண்டு வயிற்றுப் பாட்டையும் சமாளிக்க முடியுமா?"

"கஷ்டம்தான்..."

"முக்கியமான பாயின்ட் அதில்லை... இப்படி அடாவடித்தனமாகப் பணத்தாசை பிடிச்சு இதைக் கொடு அதைக் கொடுன்னு கேட்கிறவர்கள் இதோடு நிறுத்திக் கொள்வார்கள் என்று என்ன நிச்சயம்? இதற்கு நாம் இடம் கொடுக்கலாமா?"

"நியாயப்படி, தர்மப்படி பார்த்தால் இடம் கொடுக்கக் கூடாது... ஆனால் பெண்ணைப் பெற்ற ஒரே காரணத்துக்காகப் பிள்ளை வீட்டார் குட்டக் குட்டக் குனியறதுதானே இங்குள்ள நிலைமை?"

"அப்போது என்னதான் செய்யலாம்?"

"அதுதான் சொன்னேனே? இந்த வீட்டை விற்கிறதுதான் ஒரே வழி. பூமா வசதியாய் வாழணும்னுதானே கடனை வாங்கி நம் அந்தஸ்துக்கு மேல் பட்ட இடமாகப் பிடித்தீர்கள்?

இப்போது பின்வாங்க முடியுமா?"

**மா**தங்கள் மறைந்தன.

பெற்றோரின் வேதனை அவளை வதைத்தது... ஒரு நாள் அப்பாவிடம் சென்று, "நான் புகுந்தவீடு போகமாட்டேன் அப்பா! இப்படி அடாவடியாக லிஸ்ட் கொடுப்பவர்கள் வீட்டில் என்னால் எப்படி நிம்மதியாக வாழ முடியும்? உங்களைக் கசக்கிப் பிழிந்து சுருட்டி எடுத்துக் கொண்டு தான் நான் வாழ வேண்டுமானால், அந்த வாழ்க்கை எனக்கு வேண்டவே வேண்டாம்!" என்றாள். அப்பா ரௌத்திரமூர்த்தியானார்... "வாயை மூடிக் கொண்டிரு, பூமா... பெற்ற



தகப்பனுக்கே புத்தி சொல்லற அளவுக்கு நீ மேதாவியாகி விட்டாயா? உனக்கு எது நல்ல துன்னு எங்களுக்குத் தெரியும்... நாங்கள் சொல்றபடி செய்... அதுதான் உன்னாலான பெரிய உபகாரம்!"

பூமா தன்னுள் சுருண்டு மௌனமானாள்.

ஆனால் தந்தை வேறு, தாய் வேறு. தந்தை புரிந்து கொள்ளாததைத் தாய் புரிந்து கொள்வாள்.

"அம்மா! நீயும் அப்பாவும் படற வேதனையை என்னால் சகிச்சுக்க முடியலை... இந்த அநியாயத்தைத் தட்டிக் கேட்க யாராலும் முடியாதா?"

"இப்படிச் சங்கடப்படாமல் பொறுமையாயிரு பூமா! பொறுத்தார் பூமியாள்வார்னு கேட்டதில்லையா? உன் பெயரே பூமாதானே! பெயருக்கேற்றபடி நீ பொறுமையாக இருக்க வேண்டாமா?"

"அநியாயத்தைக் கண்டும் பொறுக்கணுமா அம்மா? வேணுவுக்கு நான் பொறுத்தமில்லாதவளாகப் போனது பணத்தால்தான்... இதனால் தானே அவரால் என்னை நிராகரிக்க முடியறது? நான் அவரை நிராகரிக்க முடியும் படியான சந்தர்ப்பம் ஏற்பட்டால், அப்படி ஏற்பட்டு நான் அவரை நிராகரிக்கவும் செய்தால்?"

"வெட்கம் கெட்ட இந்த சமூகத்துக்கு அப்போதும் சுரணை வராது பூமா! அந்த நிலையிலும் பெண்ணைத்தான் குற்றவாளியாக்கும்... "அகம்பாவம் கொண்டு கணவனை உதறினவள்" என்று முத்திரை குத்தும்... பூமா, இதெல்லாம் வீண் பேச்சு... ஏதாவது வழி பிறக்கும், பார்த்துக் கொண்டேயிரு!"

■

**மா**தங்கள் தேய்ந்தன... நாலு, ஐந்து... வேணுவின் பெற்றோர் கொடுத்த காலக்கெடு ஆறுமாதம்தானே!

ஆறாவது மாதம் பிறந்த போது, மறுபடியும் ஒருமுறை பிள்ளை வீட்டுக்குச் சென்று மன்றாடிப் பார்ப்பது என்று தீர்மானித்தார் அப்பா... ஆனால் அதற்குள்...

ஓர் அதிசயம் நிகழ்ந்தது.

அன்று காலை அவர்கள் வீடு தேடி வந்தது, யார்? வேணுவின் தந்தையா? ஆம்! அவரேதான்!

வந்தவரின் முகம் தன் வழக்கமான சிடுசிடுப்பை மறந்து புன்னகை மயமாக இருந்தது.

மனத்தின் இன்பம் முகமெல்லாம் வழிய சம்பந்தியை வரவேற்றார் பூமாவின் அப்பா. வந்தவர் வெறுங்கையோடு வரவில்லை... வெற்றிலை, பாக்கு, புஷ்பம், பழங்கள்... ஒரு தட்டு கொண்டுவரச் சொல்லி அதில் அழகாக அடுக்கி வைத்தார். பூமாவிடம் கொடுத்தார்... அவள் நமஸ்கரித்த போது, "தீர்க்கசுமங்கலியாயிருக்கணும்!" என்று வாழ்த்தினார்.

பின், நேரடியாகவே விஷயத்துக்கு வந்தார். "வருகிற வெள்ளிக்கிழமை நாள் நன்றாயிருக்கு. சம்பந்தி அன்று பூமாவை எங்கள் வீட்டுக்குக் கொண்டுவந்து விடுங்கள்!"

"என்ன? என்ன? வந்து..."

"புரியலியா? இதில் புரியறதுக்கு என்ன இருக்கு? எங்கள் வீட்டு மாட்டுப்பெண் எங்கள் வீட்டுக்கு வரவேண்டியது தானே முறை?"

"ஆனால்... முன்பு நீங்கள் சொன்னது... அதாவது... நீங்கள் கொடுத்த லிஸ்ட்...

"ஓ, அதுவா?" வேணுவின் தகப்பனார் சிரித்தார். "அந்த லிஸ்டைக் கிழித்துப் போடுங்கள். எங்களுக்கு வேண்டியது பூமா மட்டும்தான்... அவளுடைய நியாயமான இடத்துக்கு அவள் வரணும் - அதாவது, புகுந்த வீட்டுக்கு".

"எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியலை!" பூமாவின் அப்பா தடுமாறினதைக் கண்டு வந்தவர் முறுவலித்தார்.

"நீங்கள் ஒன்றும் சொல்ல வேண்டாம். பூமாவைக் கொண்டு வந்து விடுங்கள், போதும். சீர் வரிசை எதுவும் முக்கியமில்லை... அவள் வருவதுதான் முக்கியம்... இதை மட்டும் அவள் எப்போதும் மறக்கக்கூடாது - அவளுடைய இடம் வேணுவின் அருகில் தான்... அவளுடைய வாழ்க்கை லட்சியம் அவனுடைய இன்பம் தான்! என்ன சம்பந்தி, நான் சொல்றது சரிதானே?"

"நூற்றுக்கு நூறு சரி!" என்று அப்பா ஆமோதித்தபோதே, "இவர் ஏன் இப்படியெல்லாம் தத்துவம் பேசுகிறார்? முறுவலிக்கவே மாட்டாரே, இப்போதோ வார்த்தைக்கு வார்த்தை முறுவலிக்கிறார்!' என்று குழம்பினார்.

சம்பாஷணையின் நடுவில் வேணுவின் தந்தை, "உங்களுக்கு தெரியாதுன்னு நினைக்கிறேன்... வேணு கொஞ்சநாள் உடம்பு சரியில்லாமல் ஆஸ்பத்திரியில் இருந்தான்... கவலைப்படும்படி எதுவுமில்லை... இப்போது குணமாகி வீட்டுக்கு வந்துவிட்டான்... ஆனால் அவன் அம்மா இருக்கிறாளே, சுத்த கர்நாடகம்... அவன் வேலையில் சேர்ந்த வேளை சரியில்லையாம். அதனால்தான் உடம்புக்கு வந்ததாம்! அவளைச் சந்தோஷப்படுத்த வேணு அந்த வேலையை ராஜினாமா செய்து விட்டான். இப்போது சொந்தமாக ஒரு கடை நடத்தறான்...

அதனால் இப்போது உங்கள் மாப்பிள்ளை பிறரிடம் சேவகம் செய்யற சாதாரண மனிதனில்லை... முதலாளியாக்கும், முதலாளி!" என்று பெருமையோடு சொன்னார்.

வந்தவர் விடைபெற்றுச் சென்ற பிறகு அம்மா, "இதென்னடியம்மா அதிசயம்!" என்றாள்.

"உடம்புக்கு வந்து மகன் ஆஸ்பத்திரிக்குப் போனபோது அவர்களுக்கு ஞானோதயம் பிறந்திருக்கணும். என்னிடம் அப்படிப் பேசி லிஸ்ட் கொடுத்தது எத்தனை கொடுமைன்னு புரிஞ்சிருக்கணும்... அதற்குப் பரிகாரமாகத்தான் சீர்வரிசையே வேண்டாமென்கிறார்" என்றார் அப்பா.

"எப்படியோ, பூமாவுக்கு விடிவுகாலம் பிறந்ததே. அதைச் சொல்லுங்கள்".

அதன் பிறகு எல்லா ஏற்பாடுகளும் துரிதகதியில் நடந்தன... நெய்யும் முந்திரியுமாகச் சமையலறை மணத்தது. பட்சணங்கள் செய்யும்போது அம்மாவின் முகத்தில் பூரிப்பு, பரவசம். தனக்குத் தானே மெல்லப் பாடியவாறு அவள் வேலையில் லயித்திருந்த காட்சி அழியாச் சித்திரமாக பூமாவின் நெஞ்சில் பதிந்தது... பூதாகாரமான பிரச்னை எதிர்பார்ாமல் தீர்ந்துவிட்டது. அப்பா அம்மாவின் சித்திரவதை முடிந்தது பற்றி பூமா மகிழ்ந்தாள். ஆனால், "வேணுவின் தந்தை எதனால் மாறினார்? என்ன நடந்தது?" என்ற கேள்விகள் அவள் இதயத்தில் விடையின்றி மீண்டும் மீண்டும் சுழன்றன...

புது ஜவுளியோடு ஒரு மைனர் செயினையும் வாங்கினார் அப்பா.

"அவர்கள்தான் எந்தச் சீரும் வேண்டாம் என்றார்களே!" என்றாள் பூமா.

"பரவாயில்லை... எங்கள் மாப்பிள்ளைக்கு நாங்கள் போடறோம்... அதில் என்ன தப்பு?" என்று அப்பா அவளையே திருப்பிக் கேட்டார்!

வெள்ளிக் கிழமையன்று பூமா புகுந்த வீட்டுக்கு அழைத்துச் செல்லப்பட்டாள்... பட்டுப்புடைவை... நீண்ட கூந்தலில் மல்லிகைச் சரங்கள்... அழகென்றால் அப்படியோர் அழகு! அம்மா முன்ஜாக்கிரதையாக அவள் கன்னத்தில் திருஷ்டிப் பொட்டு வைத்திருந்தாள்!

வேணுவின் பெற்றோர் அவர்களை எதிர்கொண்டழைத்தனர்... இரண்டு சுமங்கலிப் பெண்கள் ஆரத்தி எடுத்த பிறகு, "வலது காலை எடுத்து வச்சு உள்ளே வாம்மா, பூமா!" என்றாள் மாமியார், அன்பொழுக.





## சந்த்யா ராஜன்

அழகிய முகமும், நீண்ட விழிகளும் பாவங்களை எளிதில் சித்திரிக்கும் பாங்கும் தரமான பாதவேலைகளையும் கொண்ட சந்த்யா ராஜனின் பரத நாட்டியம் அண்மையில் ராணி சீதை ஹாலில் இடம் பெற்றது.

ஒன்பது வயதில் அரங்கேறிய பேபி சந்த்யா ராஜன், புகழ் பெற்ற நாட்டியப் பள்ளியான சிதம்பரம் நாட்டியப் பள்ளியின் மாணவியாவார். குரு கலைமாமணி சித்ரா விஸ்வேஸ்வரனின் மாணவியான பிரியதர்ஷிணி ராம்சந்த் நாட்டிய அரங்கேற்றத்துக்கு நட்டுவாங்கம் செய்தார்.

வயதுக்கேற்ற வர்ணமாக "பெரியசாமித் தூரன்" அவர்களின் பைரவி ராக "நந்தகோபாலனை" எடுத்து வர்ணமாகச் சித்திரிக்கையில் எத்தனை விதமான கண்ணனை நம் கண்முன் கொண்டு வந்தாள் பேபி சந்த்யா!

ஆபோகி ராக பதமான "மீனாட்சிதாயே"கே.என்.தண்டாயுதபாணி பிள்ளையின் பதம். 'பாவை' மீனாட்சி நம் கண்முன் தோன்றிப்பரவசப்படுத்தினாள் என்றால் மிகையில்லை.

அருமையான, அற்புதமான ஆட்டம். வளமான எதிர்காலம் உண்டென்றால் மிகையில்லை.

— தங்கம்

பூமா வீட்டுக்குள் பிரவேசித்தாள். வேணு ஹாலில் அமர்ந்திருந்தான். என்ன வசீகரத் தோற்றம்! பட்டு ஜிப்பா, தழையத் தழையக் கட்டிய கரைபோட்ட பாலியெஸ்டர் வேஷ்டி...

கொண்டு வந்திருந்த பழங்களை, துணிமணிகளை, பட்சணங்களை அடுக்கி வைத்தார் பூமாவின் அப்பா... பின் ரோஜா நிற டிஷ்யூ காகிதப் பொட்டலத்தை எடுத்துப் பிரித்து, பளபளக்கும் புது மைனர் செயினை வெளியே எடுத்தார்.

"என்ன சம்பந்தி இது?" என்றார் வேணுவின் தந்தை.

"மாப்பிள்ளைக்கு எங்கள் அன்புப் பரிசு... ஏதோ என்னாலானது..."

"எதுவுமே வேண்டாம்னு நான் சொன்னேனே! பரவாயில்லை... உங்கள் ஆசைக்கு நீங்கள் செய்தால் நான் தடுத்து நிறுத்தலாமா? உங்கள் கையாலேயே உங்கள் மாப்பிள்ளைக்குப் போட்டு விடுங்கள்!"

கையில் செயினோடு வேணுவினருகே சென்றார். அப்பா... சட்டென்று நின்றார்... முகம் அதிர்ச்சியில் உறைந்தது. வேணுவின் நாற்காலிக்கருகே ஒரு ஜோடி ஊன்றுகோல்கள். நெஞ்சில் முள் தைக்க, அவனுடைய கால்களைப் பார்த்தார்... வலது பக்கத்தில் முழங்காலுக்குக் கீழே வேஷ்டியில் ஒரு தொய்வு...

வேணுவின் அப்பா சர்வ சாதாரணமாகச் சொன்னார். "என்ன பார்க்கிறீர்கள், சம்பந்தி? வேணு ஆஸ்பத்திரியில் இருந்தான்னு சொன்னேனே, என்ன காரணம் தெரியுமா? அவன் ஸ்கூட்டருக்கும் ஒரு லாரிக்குமிடையே ஆக்ஸிடென்ட்... வலது கால் சட்னியாகிவிடவே, வெட்டிவிட்டார்கள்... குழந்தை, பாவம், ரொம்பக் கஷ்டப்பட்டான்... ஏதோ உயிர் போகாமல் தப்பினானே, உங்கள் பெண்ணின் தாலி பாக்கியம்தான்!" அவர் முறுவலித்தார்... ஒட்ட வைத்ததுபோல் செயற்கையான முறுவல்.

இப்போது பூமாவுக்குப் புரிந்தது... முழுவதுமே புரிந்தது... இனியும் ஏதாவது காரணம் காட்டி பூமாவை ஒதுக்கிவிட்டு வேணுவுக்குப் பணக்காரப் பெண்ணாகத் தேடிப் பிடித்து மணமுடிப்பது சாத்தியமில்லை... கால் போன இந்த நிலையில் வேணுவுக்கு ஒரு நர்ஸ் வேண்டும்... கூடவே இருந்து, இருபத்து நாலு மணி நேரமும் அவன் தேவைகளைக் கவனித்துப் பூர்த்தி செய்ய விசுவாசமான, பணிவான, இன்முகம் கொண்ட ஒரு நர்ஸ் வேண்டும்... அந்த நர்ஸ் பூமாவாக இருந்துவிட்டால்...

ஆழமாக யோசித்துக் கச்சிதமாக முடிவெடுத்திருக்கிறார்கள் வேணுவின் பெற்றோர்.

முன்பொரு நாள் அம்மாவோடு நடத்திய சம்பாஷணையை நினைத்துக் கொண்டாள் பூமா...

"வேணுவை நான் நிராகரிக்க முடியும்படியான சந்தர்ப்பம் ஏற்பட்டால்? அப்படி ஏற்பட்டு அவரை நான் நிராகரிக்கவும் செய்தால்?"

பூமாவின் அப்பா மாப்பிள்ளையின் கழுத்தில் சங்கிலியை அணிவித்தார்... பின், மகளைப் பார்த்தார். அவருடைய முகத்தில், கண்களில், அதென்ன? யாசிக்கிறாரா?

திரும்பித் தாயைப் பார்த்தாள் பூமா. அந்த அன்பு முகத்திலும் அதே உணர்ச்சி!

அவர்களுடைய ஒரே குழந்தை அவள்... ஏங்கிப் பிறந்த அருமைக் குழந்தை... புதையல் போன்றவள்... இதை அவள் மறக்கலாகாது.

"பூமா! வீட்டுக்கு மகாலட்சுமி நீ வந்துட்டே! பூஜையறைக்குப் போய் உன் கையால் விளக்கேற்று!" என்றாள் வேணுவின் தாய்.

தன் தாய் தந்தையரைப் பார்த்து மெத்தென்று முறுவலித்துவிட்டுப் பூஜையறையை நோக்கி நடந்தாள் பூமா.

---

யானைகளின் முன்னங்கால்களின் பாதங்கள் பூமியில் பதிந்திருந்தால் அந்த அடிச் சுவடுகளைக் கொண்டு அந்த யானையின் உயரத்தைச் சொல்லி விடலாம். முன்னங்கால் பாதங்களின் சுற்றளவை அளந்து, அதை இரண்டால் பெருக்கினால், யானையின் உயரம் வரும்.



எலிகளுக்கு உள்ள அறிவுகூட மனிதர்களுக்கு இல்லை என்று நினைக்கும்போது கடவுளின் சிருஷ்டியை வியக்கத்தான் தோன்றுகிறது. ஒரு சமயம், ஒரு நதிக் கரையில் எலிகள் வளைகள் தோண்டிக் குடியிருந்தன. அதனால் பக்கத்தில் வசித்து வந்த ஒருவர், எலிகள் தொந்தரவு இன்றி, வசித்து வந்தார்.

ஒரு நாள் எல்லா எலிகளும் இவர் வீட்டை நோக்கிப் படையெடுக்க ஆரம்பிக்கவே, "இன்னும் இரண்டு நாட்களில் நதியில் பெரிய வெள்ளம் வரப்போகிறது" என்றார்.

அப்படியே இரண்டு நாட்களில், பெரிய வெள்ளம் வந்தது. எங்கேயோ பெய்த மழையை எலிகள் இரண்டு நாட்களுக்கு முன்னரே தெரிந்து கொண்டு, தங்கள் வளைகளைக் காலி பண்ணிவிட்டு ஓடிவந்துவிட்டன!

—நாடோடி

டாக்டர் கி. வேங்கட சுப்பிரமணியன்

# அண்ணாமலையில் ஓர் அருட்தீபம்

**மா**க்ஸ் முல்லர் என்னும் பெயர் பெற்ற ஜெர்மானியச் சிந்தனையாளர் கூறுகிறார்: "உலகின் எல்லா மதங்களையும், அரிஸ்டாடில் முதல் இமானுவல் காண்ட் வரை வழிவழியாக வந்துள்ள சிந்தனையாளர்களையும் கணக்கில் கொண்டு பார்த்தால் இந்து மதமும், அதன் மாபெரும் ரிஷிகளும், ஞானிகளும், யோகியர் பெருமக்களும் மனித நாகரிகத்துக்குச் செய்திருக்கும் தொண்டு அளவிடற்பாலது என்பது தெரியவரும். உண்மையில் உலகம் இந்தியாவிற்குப் பெரிதும் கடன் பட்டிருக்கிறது".

இந்தப்பேரறிஞரின் கூற்றை உலகம் முழுதுமாக ஒப்புக் கொண்டுள்ளது. அன்று முதல் இன்றுவரை அலையலையாக, அணிஅணியாக மற்றைய கண்டங்களிலிருந்து மேலை நாட்டாரும் கீழை நாட்டாரும் இங்கு சாரி சாரியாக வந்து கொண்டிருக்கிறார்கள் என்றால் அதற்குக் காரணம் நம் யோகியர்களே. "இந்தியாவே சித்தர்கள் அடங்கிய பூமி" என்பார் சங்கரதாஸ் சுவாமிகள். திருமூலர் முதல் இன்று வரை எத்துணை எத்துணை சித்தர்கள்! "கல்லா அரசனில் காலன் மிக நல்லவன்" என்ற திருமூலரின் வாக்கியம் இன்றைய அமெரிக்கக் குடியரசுக் காவியம் போல் ஒலிக்கவில்லையா? இவர்தம் சொற்கள் மணிவாசகர் மொழியில் "அமுதம் மயிர்க்கால் தோறும்" தேங்கிடச் செய்யவில்லையா?

"கூடும் அன்பினில் கும்பிடவே என்று வீடும் வேண்டாவிறல்" கொண்ட இஞ்ஞானியர்தாம், இந்தியாவின் அழியாத சொத்து; விலை மதிப்பற்ற பொக்கிஷம்" என்றார் விவேகானந்த அடிகளார். சிகாகோவில் இந்துமத சித்தாந்தம் பற்றி அன்னார் ஆற்றிய பொழிவின் தாக்கம் இன்னும் உலக மக்கள் சிந்தனையைப் பாதிக்கிறது என்பார் தத்துவ மேதை இராதா கிருஷ்ணன்.

அந்தச் சித்தர் வழி வந்த சீரிய சித்தர்களின் செம்மல், ஞானத்தவ யோகி இன்று திருவண்ணாமலையில் அமர்ந்து அருள்பாலித்து வருகிறார்கள். நான் 1967ஆம் ஆண்டு முதல் யோகியின் திருவடி சார்ந்து நின்று வருகின்றேன். குற்றாலத் தேனருவிக்குள் நிற்கும் போது ஏற்படும் குளுமை யோகியவர்களைப் பார்க்கும்போது ஏற்படுகிறது. அவரது ஒளிப் பிழம்பான கண்கள் அமிர்தத்தைச் சுரக்கின்றன. அவரது சிறு தழுவல் உங்களை மூவேழு உலகங்களுக்கும் இட்டுச் செல்கிறது. அவரது முறுவல் உங்களை மேலே மேலே ஏற்றுகிறது. அவரது வெடிச்சிரிப்பு ஆனந்த வாரிதியில் நம்மைத் தள்ளுகிறது. அவரே அன்பு மழை, அருட்குன்று, இருள்கற்றும் சுழல் விளக்கு. நேற்று, இன்று, நாளையைக் கண் முன் நிறுத்தும் இந்த யோகி, இப்புனிதர், இவ்வருட்பிரான் நம் தலைமுறையில் நம்முன் நிற்பது நாம் செய்த பாக்கியம்.

அவரைத் தரிசித்த உடன் நாம் யோக மழையுள் நனைந்து விடுகிறோம். உடலெங்கும் மின்சாரம் பாய்கிறது. கண்முன் தலைப்பாகையுடன் கூடிய வெண்தாடி வேந்தரின் முகத்தையன்றி வேறெதுவும் தெரிவதில்லை. சுற்றி பெரிய பெரிய அரசு அலுவலர், ஹைகோர்ட் ஜட்ஜுகள், வருமான வரித்துறை கமிஷனர்கள், பெரும் பத்திராதிபர்கள், வழக்குரைஞர்கள்,



டாக்டர்கள், கும்பலாக அமர்ந்திருக்கிறார்கள். ஆனால், நம் கண்ணுக்குத் தெரிவது யோகி ராம் சூரத் குமாரின் திரு உருவம் மட்டுமே. உலகமே அவருள் ஒடுங்கியது போன்ற தோற்றம்.

20ஆம் நூற்றாண்டின் அற்புதம் திருவண்ணா மலை சந்நிதித் தெருவில் உள்ள சந்தில் ஒரு சிறு குடிலில் அமர்ந்திருக்கிறது. உலகம் உய்ய, வையம் வாழ.

அவரைக் கண்டால் பயம் பறந்தோடும். அச்சம் அடியோடு அகலும். அவர் உன் கை பற்றினால் பிறகு உனக்கு வேறு பலமே வேண்டாம்.

எனக்குத் தெரிந்த ஒருவர் மிகவும் பயந்தவர். பாவபுண்ணியங்களில் பெரும் நம்பிக்கை கொண்டவர். சொல்லப்போனால் அப்பாவி - இவரது மனைவியோ, இந்த அப்பாவியையே கடவுளாக நம்பி வாழ்ந்த ஓர் அப்பாவி. பாவமே செய்யாத இந்த அப்பாவிகளை அவர்கள் உற்றத்தாரும் சுற்றத்தாரும் அச்சுறுத்தத் தொடங்கினார்கள். பயத்தினால் சுற்றத்தாரின் ஆக்ஞைகளுக்கெல்லாம் அடி பணிந்து, இவர் இருவரும் தம்முடைமைகளை எல்லாம் இழந்து பயமென்னும் நாசத்தில் வாழ ஆரம்பித்தனர். சொந்தத் தாய் தந்தையரும், அண்ணன், தம்பியரும் "புட்பாலை" (FOOT BALL) உதைப்பதுபோல் இவரை உதைத்தனர்.

பல பேர் இருக்கும்போது இவரது மனைவியே கீழ்த்தரமானவேலைகளை வீட்டில் சமையல்காரி போல் செய்ய வேண்டும். மனம் புழுங்கித் தவித்துத் தேய்ந்து கொண்டே வந்த இவர் இருவரையும் திருவண்ணாமலை முனி வரிடம் கூட்டிப்போய் யோகி ராம்சூரத் குமாரின் காலடியில் கிடத்தினேன். யோகியாரின் காலில் இவர்கள் தலைகள் பட்ட நிமித்தம், ஹைகோர்ட் வரை செல்லும் தைரியம் இவர்கட்கு ஏற்பட்டு, இன்று இவரைக் காலில் போட்டு மிதித்த சுற்றத்தார் இவரைக் கண்டவுடன் சிம்ம கர்ஜனை கேட்ட மான் போல் மருளுகிறார். எல்லாம் யோகியின் செயல்.

"நாளை நமதே" என்ற நம்பிக்கை நம் மிடையே இருப்பதனால்தான் நாம் முன்னேற முடிகிறது. இந்த நிலையற்ற வாழ்க்கையில் நமக்குச் சில பிடிப்புகள் தேவைப்படுகின்றன. குற்றாலப் பேருவியில் "வழுக்கி விழாது" நம்மைக் காக்க ஆங்காங்கு இரும்பு கைப் பிடிகள் உள்ளதுபோல், நயாகரா நீர்வீழ்ச்சி யில்கூடப் பெரும் வளையங்களைப் பொருத்தி உள்ளார்கள். தீரர் சிலர் அதைப் பிடித்துக் கொண்டு அதற்காக அவர்கள் கொடுக்கும் அங்கியை அணிந்து கொண்டு ஒரு சில நொடிகள் தலையை நீட்டலாம். அதற்குமேலும் நின்றால் தலை இருக்காது.

இப்படியாக வாழ்க்கையிலும் கூட தினம் தினம் நாம் நீச்சல் போட வேண்டியிருக்கிறது. அநேகமாக எதிர்நீச்சல்தான். நமக்கு வேண்டியவற்றைப் பெற நாம் வேண்டுதல் வேண்டாமையிலான் தாள் பணிகின்றோம்.

கலியுகத்தில் சாதாரண விஷயங்கள்கூட அசாதாரணமாகத் தென்படுகின்றன. ஒரு சாதாரணப் பள்ளிச் சேர்க்கையை எடுத்துக் கொள்வோம். எல்.கே.ஜியில் குழந்தையைச் சேர்க்க இயலாமல் எவ்வளவு பேருக்கு இரத்த அழுத்தம் ஏற்படுகிறது. சாதாரணமாக வாங்கும் சர்க்கரை, சமையல் எண்ணெய், அரிசி போன்றவைக்கு எவ்வளவு மணி நேரம் நம் பெண்டிர் கால் கடுக்க வெயிலில் நிற்கி றார்கள்.

என் இனிய நண்பர் அறிவு மேதை காவல் துறை டைரக்டர் ஜெனரல் திரு. சி. வி. இராம கிருஷ்ணன் சிறந்த சிந்தனையாளர், பேச்சாளர். அவர் அண்மையில் ஆற்றிய ஒரு சொற் பொழிவில் பர்த்துருஹரியின் "வைராக்கிய சதகத்திலிருந்து" ஓர் அற்புதமான மேற்கோள் காட்டினார்.

மனிதனின் வாழ்க்கையில் எங்கும் அச்சம் தென்படுகிறது. "அச்சமில்லை அச்சமில்லை உச்சி மீது வானிடிந்து வீழுகின்ற போதிலும் அச்சமில்லை அச்சமில்லை" என்று பாடிய நம் தேசியக் கவிக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னரே மாமன்னர் பர்த்துருஹரி தனது அருளுரைகள் அடங்கிய வைராக்கிய சத கத்தில் பின்வருமாறு கூறினார். "நம் வாழ்க் கையே அச்சத்தினால் சூழப்பட்டிருக்கிறது. போகத்தில் வியாதிகள் வந்துவிடுமோ என்ற பேரச்சம் உள்ளது. ("எய்ட்ஸ்" கண்டுபிடிக் கப்படாத காலம் அது), பெரிய இடத்தில் நாம் இருந்தால் எப்போதாவது கீழே விழுந்து விடுவோமோ என்ற பயம், நிறையப்பேருக்கு. வள்ளுவனே சொல்ல வில்லையா "தலையி னிழிந்த மாந்தர்தம் நிலையின் இழிந்தக்கடை" - "மிகப்பெரிய பெரிய பதவியிலுள்ளவர்கள் இன்றைக்கிருப்பார் நாளைக்கில்லை" என்ற மெய்ப்பொருளை நிறைவேற்றவே உள்ளார்கள்; மிகவும் அழகாக இருக்கும் ஆண் பெண் இரு பாலரும்; தினம் தினம் நாம் கிழடாகி வரு கிறோமே என்று கவலைப் படுகிறார்கள், வித விதமான மருந்துகள் (பிளாஸ்டிக் சர்ஜரி வராத காலம் பர்த்துருஹரியின் காலம்) மாத்திரை களை முழுங்குகிறார்கள். இளமையாக இருக்க தலைக்கு, முகத்துக்கு, கை நகங்களுக்கு, கால்

நகங்கட்குச் சாயம் அடிக்கிறார்கள். வாழ் நாளில் 47 சதவீத நேரம் அலங்காரங் களுக்காகவே போவதாக ஓர் அண்மை ஆய்வு கூறுகிறது. நாம் திரும்பவும் பர்த்துருஹரிக்கே வருவோம்; படித்துப் பட்டம் பல பெற்றால், வருடந்தோறும், நம்மைவிட அதிகம் படித்தவர் வந்து விடுவார்களோ என்ற பயம், (இத னால்தான் மாணவர்கள் குருபக்தியின் காரண மாக ஆசிரியரைக் கேள்வியே கேட்கக்கூடாது என்று வைத்துள்ளார்கள் - மனைவி கணவனை கேள்வி கேட்கக் கூடாது என்பது பதிவிரதா தர்மத்தின் முதல் படி என்பதும் இந்தச் சித்தாந்தத்தின் அடிப்படையில் பிறந்ததுதான்), மிகவும் உயர்ந்த பண்பாளனாக இருந்தால் அவனை திசை திருப்பும் சக்திகட்குப் பயம்; அரசனாக இருந்தால் அவரை வழுக்கி விழும் வழிகளில் அழைத்துப் போக ஓர் "ஆமாம் சாமி" பட்டாளமே சுற்றி நிற்கிறது. எனவே அதிலும் பயம். உடல் கட்டுமஸ்தாக இருந்தால், பாரதி யின் வாக்கில், அறிவாளைக் கொண்டு பிளந் தாலும் கட்டுமாறா உடலுறுதி கொண்டிருந் தாலும் காலத்தின் போக்கில், தண்டுகாலூன்றி அவர் தளர் நடை நடக்கும் நிலை வந்து விடுமோ என்ற பயம். எனவே எதிலும் அச்சம், எங்கும் அச்சம். இந்த அச்சத்தைத் தவிர்க்க ஒரே மருந்துதான் உண்டு என்கிறார் பர்த்துரு ஹரி. "பற்றை விடு ஒரு குருவின் பாதத்தைப் பற்று" என்கிறார், பர்த்துருஹரி. சாதாரண மாக குருநாதரின் பாதத்தைப் பற்றாதே, வைராக்கியமாகப் பற்று என்கிறார் இம் மாமன்னர் பிரான். நீ அவர் திருப்பாதங்களைப் பற்றினால் உன்னை விட்ட அச்சம் அவசர அவசரமாக ஓடும். பற்றே இல்லாத ஒரு நிலையை நீ அடைந்துவிட்டால் கவலைதான் ஏது என்கிறார் இந்த ராஜரிஷி.

இதைத்தான் ஒப்பற்ற நம் வள்ளுவன், "பற்றற்றான் பற்றினைப் பற்றுக பற்று விடற்கு" என்று இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே சொன்னார். பற்று விடல் என்றால் நம்மூரில் உள்ள சர்க்கரை வியாதிக்காரர் பலர் ஒரே ஒரு அல்வாத்துண்டை யாரும் அறியாமல் தின்று பற்றை ஒழிக்கிறார்களே அப்படியல்ல. முழுது மாக "விடல்". எதனிடத்திலும் பற்றுத் தோன் றாத நிலை.

மிதிலா நகரின் சக்கரவர்த்தி சனக மகா ராஜாவைப் பற்றி ஒரு கதை புராணத்தில் வருகிறது. மாசானகியின் தந்தை சனகன். மன்னர் மன்னன் இவர். இராமபிரானின் மாமனார். எத்தகைய பேறு பெற்றவர் இந்த ராஜன்.



## செல்வி சுபாவின் நடன அரங்கேற்றம்

சென்னை பாலிமர் தொழில் நிறுவனங்களின் உரிமையாளர் எஸ்.பி. சிங்கா ரத்தின் மகளும், தஞ்சை ராஜ லட்சுமியின் மாணவியுமான செல்வி சுபாவின் நடன அரங் கேற்றம் ராணி சீதை மன்றத் தில் நடைபெற்றது.

நிகழ்ச்சிக்குச் சென்னை பல்கலைக்கழக துணைவேந்தர் டாக்டர் சாதிக் தலைமை தாங்கி னார். அண்ணாமலைப் பல் கலைக் கழக முன்னாள் துணை வேந்தர் இராம. சேது நாரா யணன், மீனாட்சி திருமைந்தன் திரு.வி.என். சிதம்பரம், எழுத் தாளர் சங்கத் தலைவர் திரு. விக்கிரமன், ஏ.ஆர். சுகுமார் (தென்னிந்தியக்கலை இலக் கியத்துறை இயக்குநர்) ஆகி யோர் செல்வி சுபாவை பாராட் டிப் பேசினர்.

ஒருநாள் ஆரண்யத்தில் முனிவர்களுடன் அமர்ந்து வேதாந்த விசாரணைகள் செய்து கொண்டிருந்தபோது, மிதிலா நகரம் தீப் பற்றி எரிகிறது என்று தகவல் வர, "முனிவர் பலர் தங்கள் கௌபீனங்கள் (கோவணங்கள்) எரிந்து விடப் போகின்றனவே என்ற கவலையில் மிதிலையை நோக்கி ஓடினராம். ஆனால், மாட்சிமை தங்கிய சனகச் சக்கரவர்த்தியோ இருந்த இடத்திலிருந்து அசையவே இல்லை, அவர் சொன்னாராம், "எனக்கென்று சொந்த மாக இவ்வுலகில் ஏதுமே இல்லை, எனவே எனக்குக் கவலையே இல்லை" என்றாராம். 'காதருந்த ஊசியும் வாராது காண் கடை வழிக்கே' என்ற பட்டினத்தாரின் முன்னோடி மகாராஜா சனகர்.

எப்படி அன்று பர்த்துருஹரி, ஜனகர் போன்றவர் இருந்தனரோ, பின்னர் மனிதன் மாமனிதனாவதற்கு ஆசையை ஒழிக்க வேண்டு மென மகான் அரவிந்தரும் அன்னையும் அருள் பாலித்தார்களோ, அண்ணாமலையில் அமர்ந்து இரமணமாமுனி உலகை உய்வித்தாரோ, கேரளப் புண்ணிய பூமியில் சுவாமி இராமதாசர் அவதரித்தாரோ அப்படியே இன்று நெருப்புப் பிழம்பாக (Ball of Fire) திருவண்ணாமலையில் நின்று நம்மை ஆள் கொள்ளும் மாமுனி தவயோகி ஸ்ரீராம் சூரத்குமார் அவர்கள் கூறும் தத்துவம் ஒன்றுதான் நம்மை இன்று காக்கும்.

இந்த யுகத்தின் மனிதனைப் பிடித்திருக்கும் பெருநோய் "எய்ட்ஸ்" அல்ல. ஆனால், "மஸ்ரா டோனைடிஸ்" என்னும் நோய் என்பார் அமெரிக்கச் சரித்திரப் பேராசிரியர் சில்வர்மன் (MASRADONITIS). இப்பேராசிரியர் மேலும் கூறு வார், "இது இன்று நேற்று ஏற்பட்ட நோயல்ல; ரோமச்சக்கரவர்த்தி கலிகூலா (CALIGULA) காலத் திலிருந்தே பெரிய பெரிய பெருமனிதர்களை (VIPs) இந்நோய் பிடித்துள்ளது. அவரைச் சூழ்ந் துள்ளவர்களையும் இது தொத்திக் கொள்ளு கிறது" என்கிறார்.

இந்நோய் என்ன செய்யும்? இது எப்படிப் பட்டது? புதிதாக இருக்கும் போல் தெரிகிறதே என்கிறீர்களா. அல்ல அல்ல இது மிகப் பழம் நோய். பிரகலாதனின் அப்பாவுக்கும், சீதா தேவியைக் கவர்ந்த இராவணேச்சுரனுக்கும், மகாபலிக்கும் கண்ட நோய். இந்நோய் கண்ட வர்கட்கு ஓர் எண்ணம், ஓர் அசைக்கமுடியாத எண்ணம் தோன்றுமாம். ஆம், ரோமபுரி இராணிகள் காலத்திலிருந்து இன்றையச் செல்வச் சீமான்கள் வரை இந்நோய் பிடித் துள்ளது.

இந் நோய் பிடித்தவர் "நம்மைத் தவிர மற்றவர், யாவரும் மிகக் கீழானவர், கேவல மானவர்" என எண்ணுவர். "The people suffering from this strange illness will honestly believe that they are superior to all others & they have no Equals in the World"- பார்த்தீர் களா? இப்பழம் வியாதியின் தாக்கத்தை.

உலகை வதைத்த இட்லருக்கு, தன் இனமே உலகின் முதல் இனம் என்று எண்ணிப்பல இலட்சக்கணக்கான யூதர்களை எமனுலகுக்கு அனுப்பிய ஜெர்மனிய அரக்கன் இட்லருக்கு இவ்வியாதி இருந்திருக்கிறது.

நம் ஊரில் கூடப் பல திண்ணையார்கட்கும் பண்ணையார்கட்கும் இவ்வியாதி உள்ளது. ஆட்களை வைத்து மற்றவரை அடித்து அடி பணிய வைக்கும் அரசியல்வாதிகட்கும் இவ் வியாதி பீடித்திருக்கிறது.

தஞ்சமென வரும் அபலையரைக் கற்பழிக் கும் காவல் வீரருக்கும் இவ்வியாதிதான். அதாவது நாம் எது செய்தாலும் ஒன்றும் நடக்காது என்னும் தலைக்கனம் கொண்ட இவ்வுலகில், "எவனாயிருந்தால் எனக்கென்ன?" என்ற அகம்பாவம் தலைவிரித்தாடும் இவ் வுலகில் தன் பார்வையினாலேயே இம் மமதையை அகற்றும் ஒரு பெரிய மின்சார ஜென ரேட்டர் (Generator) மனிதனைச் சுத்தமாக்கும் ஒரு சுத்திகரிப்பு சாலை (Refinery of Men) இருக்கிற தென்றால் அதுதான் திருவண்ணாமலையின் மாமருந்து, அருட்பழம், ஞானப்பழம், இமயம், உலகை ஆட்கொள்ளும் அன்னை காவிரி சிறிய உருவமாகத் தெரிகிறாளே, ஆடு தாண்டி காவிரி என்று அப்படி குறுமுனியாக நம்மைத் தடுத்தாட்கொள்ளும் பரம்பொருள் ஸ்ரீராமன் சூரத்குமார் யோகி அவர்கள்.

திரு அரவிந்த மகான், யோகி ஸ்ரீ ராமதாசர், ஸ்ரீ இரமண மகரிஷி இவரைத் தமது குருவாகக் கொண்டிருக்கும் யோகி இராம் சூரத்குமார் அவர்கள் இன்றயை ஈச்வரன், திரு. ரமணர், திரு. அரவிந்தயோகி, திரு. இராமதாசர் இவர் அனைவரும் கலந்த ஒரு கலவை.

எது வந்தாலுமு அதை அங்கேயே மக்களிடம் அளித்துவிட்டுத்தாம் பல ஆண்டுகளாகக் கட்டிக் கொண்டிருக்கும் கந்தலிலேயே ஒளிவிடும் பரம ஞானி இவர் ஒருவரே.

ஜரிகை வேஷ்டிகளை வெள்ளித்தாம்பா ளத்தில் வைத்து ஒருவர் ஈய, "ஐயோ எனக்கு இது எதற்கு" என்று கூறி "கந்தலை அணிந்த பிச்சைக்காரன் நான்" என்று விளம்பி அதைத் திருப்பி அவரிடமே அளித்ததை நான் கண் ணாரக் கண்டிருக்கிறேன். சிவகாசி தொழி லதிபர் 50 ரூபாய் கட்டுகள் (ஒரு கட்டு 5000 ரூபாய்) பலவற்றை அளிக்க அவற்றைச் சுற்றி உள்ள நரிக்குறவருக்கும், குஷ்டரோகிகட்கும்

## பெண்கள் மெட்டி அணிவது ஏன்?

● கல்யாணம் ஆனதும் கால் கட்டை விரலுக்கு அடுத்த விர லில் பெண்கள் மெட்டி அணிய வேண்டும் என்று பெரியவர்கள் சொல்வதற்கு காரணம் உண்டு. கால் கட்டை விரலுக்கு அடுத்த விரலில்தான் கருப்பையின் நரம்பு வந்து முடிவு அடை கிறது. இதனால்தான் கல்யா ணத்தின்போது பெண்கள் காலில் மெட்டி அணிகின்றனர். இம்மெட்டி கொண்டு நடக்கும் போது கருப்பையின் நரம்பு அழுத்தப்படுவதால், இந்த அழுத்தம் கருப்பை வளர்ச் சிக்கு பெரிதும் உதவுகின்றன.

---

பரம ஏழைகட்கும் வழங்கிய ஒரே குருநாதர், பற்றற்ற, பற்றுவிட்டு ஒரே ஞானப் பிழம்பு திருவண்ணாமலை யோகி இராம் சூரத்குமார் ஒருவரே. பற்றை முற்றிலும் துறந்த இவர் ஒரு வர்தான் இமயம் முதல் குமரி வரை; வேறொரு வரை நான் கண்டிலேன்; தேடியும் காணக் கிடைக்கவில்லை.

இவர் மாபெரும் சித்தர். வையம் வாழ நாள் தோறும் ஜபிக்கும் ஞானக்கூத்தர். அடியாருள் அமுதம் பாய்ச்சும் அருள் மருத்துவர்.

மகாயோகி விவேகானந்த அடிகளார் தியா னம் பற்றிக் கூறுகிறார், அவருக்கே உரித்தான தெளிவான சொற்களில், கேளுங்கள் :

"இயற்கைக்கு அடிமையாக இருப்பதை எதிர்க்க உதவும் சக்தியே தியானம். இயற்கை யினால் ஏற்படும் தளைகளைத் தியானத்தால் நிச்சயமாக மாற்றிவிட முடியும். இந்த ஆற்றல் உங்களிடமிருந்தால் அதுவே சுவர்க்கம். அதுவே விடுதலை அல்லவா? அதுவே தியா னத்தால் பெறும் ஆற்றல். அந்த ஆற்றலை எப்படிப் பெறுவது? இதை வெவ்வேறு முறை களில் பெறமுடியும். ஒவ்வொருவர் மனதும் ஒவ்வொரு வழியில் செல்லும். ஆயினும் பொதுவான நியதி இதுதான். மனதின் எண்ண அலைகளை அடக்குங்கள். மனம் நீர் பெருகிய ஓர் ஏரி போன்றது. அதில் விழும் ஒவ்வொரு கல்லும் அலைகளை எழுப்புகிறது! இந்த அலைகளால் நமது பிம்பம் ஏரியின் நீரில் பிரதிபலிக்கின்றது. ஆனால் நீர்ப்பரப்பு கலக் கப்பட்டு இருப்பதால் பிம்பம் தெளிவாகத் தெரிவதில்லை. நீர்ப்பரப்பு அமைதி பெறட்டும். அலைகளை எழுப்பும்படி இயற்கையைத் தூண்டவேண்டாம். சிறிது நேரம் அமைதியாக இருங்கள். இப்போது இயற்கை ஒடுங்குவதால் உண்மையில் நீங்கள் யார் என்பதைத் தெரிந்து கொள்கிறீர்கள். கடவுள் ஏற்கனவே எங்கும் இருக்கிறார். ஆனால் மனம், எண்ண அலை களால் குழப்பம் அடைந்து புலன்களின் வழியில் எப்பொழுதும் சென்று கொண்டிருக்கிறது. எண்ண அலைகள் சுழன்று கொண்டுதான் இருக்கின்றன. ஒரு சமயம் மனதை அடக்கி விட்டதாக நினைத்துக் கடவுளைத் தியானிக் கிறேன்! மறு நிமிடம் மனம் லண்டனுக்குச் சென்று விடுகிறது. அங்கிருந்து அதைத் திருப்பினால் அது நியூயார்க்கிற்குச் சென்று அங்கு நான் புரிந்த செயல்களை நினைக்கிறது. இந்த எண்ண அலைகளைத் தியானத்தின் ஆற்றலினால்தான் நிறுத்த முடியும். தியா னத்தில் ஈடுபடப் பழுகுங்கள். சிறிது சிறிதாக முன்னேற்றம் அடைந்து வெற்றி பெறலாம். அப்போது ஒரு பெரிய நிலையைப் பெற்றதாக உணர்வீர்கள்".

— சுவாமி விவேகானந்தர்

இதையே நடமாடும் தெய்வம் நம் திரு அண்ணாமலை அடிகளார் யோகி ராம் சூரத்குமார் தனக்கே உரிய ரத்னச் சுருக்கமான பாணியில் கூறுகிறார், கேளுங்கள். "எனது தந்தையைத் தியானியுங்கள்; எல்லாம் உங் களை வந்தடையும்."

யோகியின் வெளிநாட்டுச் சீடர் பலர். அதில் ஒருவர் லீசோசோவிக் (Leezozowick) - என்னும் பண்பாளர். அவர் யோகியார் பற்றி ஆங்கி லத்தில் எழுதிய பல பாடல்களில் ஒன்று:

"Just a glimpse<br>
just a glimpse<br>
Is this too much<br>
for a son to ask?<br>
A touch a touch<br>
Is this too much to expect<br>
as an INHERITANCE?"

ஆம் யோகியைப் பார்ப்பதுவும், அவரைதம் பொன்னுடலை ஸ்பரிசிப்பதுவும் சாதாரண சம்பவமல்ல; அது அசாதாரண நிகழ்ச்சி. ஒரு பேழை நிறையப்பொன்னணிகளையும், முத்தா ரங்களையும் முழு நிலவையம் மொத்தமாகப் பெறுவது போன்றதொரு பெரும்பேறு. Really it is an INHERITANCE.

இதனை அண்ணாமலை அடைந்து, அருள் தவ நீர்வீழ்ச்சி என்னும் யோகியின் அன்பில் நனைந்து திளைத்துப் பெறுவோமாக. அவர் ஓர் அமுதசுரபி, காமதேனு, தெய்வப் பஞ்சா மிர்தம், நம் பாவங்களைத் துடைத்து உய்ய வைக்கும் தேவலோக அதிரசம், ஈசுவரனின் மறுபிறப்பான இவர் ஒரு தெய்விக வாசனைக் கதம்பம். நமக்காகவே காத்திருக்கும் ஞான பகவான். அவரருளை நாம் நாடுவோமாக.

ஃ

# தமிழில் தவறுகளை அறிவோம்

டாக்டர். தி. முத்து-கண்ணப்பர்

**என்ற**

இச்சொல் 'என்' என்னும் வினைச் சொல்லின் இறந்தகாலத்தைக் குறிப்பதாகும். இறந்த காலத்தைக் குறிக்கும்போதுதான் 'என்ற' என்னும் சொல்லைக் குறிக்க வேண்டும்.

(எ-டு) செழியன் என்ற மன்னன் போரில் வென்றான். ஆனால், நிகழ்காலத்தும், எதிர் காலத்தும்கூடப் பலர் 'என்ற' என்னும் இறந்த காலங்குறிக்கும் சொல்லைப் பயன்படுத்து கிறார்கள். இது தவறு. நிலைத்து வாழ்ந்து கொண்டிருக்கும் நூல்கள், பொருள்கள், புகழுடம்புடன் கூடிய அறிஞர்கள் முதலிய வற்றைக் குறிக்கும்போது 'என்னும்' என்பதைத் தான் பயன்படுத்த வேண்டும்.

(எ-டு) திருக்குறள் என்னும் நீதிநூல், தொல் காப்பியம் என்னும் இலக்கண நூல், கம்பர் என்னும் கவிச்சக்கரவர்த்தி, இமயம் என்னும் பெருமலை - இவ்வாறு 'என்னும்' என்கிற சொல்லைத்தான் கூறவேண்டும். இதனைப் பலர் சிந்திப்பதில்லை. திருக்குறள் என்ற நூல், கம்பர் என்ற கவிஞர், மேரு என்ற மலை, இவ்வாறு என்ற என்னும் இறந்த காலம் குறிக்கும் சொல்லையே பயன்படுத்துகிறார்கள். இது தவறு என்பதை உணர்ந்து திருந்தி திருத்திக் கொள்ளவேண்டும்.

**ஏமாந்து**

இச்சொல்லைப் பலரும் தவறாகப் பயன் படுத்துகிறார்கள். இனி இத்தவறு திருத்திக் கொள்ளப்படுமா என்பதே ஐயமாகும்.

ஏமா என்பதுதான் பகுதி அதாவது அடிச் சொல். 'ஏமா' 'ஏமாத்தல்' இவற்றின் சரியான, உண்மையான பொருள்கள் மகிழ், மகிழ்தல், களிப்படைதல், இன்புறுதல், ஆசைப்படுதல் என்பன. அப்படியானால், 'நான் ஏமாந்தேன்', 'நான் ஏமாந்து போனேன்' என்றால் 'நான் மகிழ்ச்சியடைந்தேன்' 'நான் இன்பமடைந்தேன்' 'களிப்புற்றேன்', 'ஆசைப்பட்டேன்' என்னும் பொருள்களைத் தானே காட்டும்?

இவர்கள் எண்ணுவது ஏமாற்றமடைதல், வஞ்சிக்கப்படுதல் ஆகிய பொருள்களை, 'அப்படியானால் 'ஏமாந்தேன்', 'ஏமாந்து போனேன்' என்றால் நேர்மாறான பொருளை யல்லவா குறிக்கும்? எனவே, 'வஞ்சிக்கப் பட்டேன்' என்றும் பொருளைக் குறிக்க, ஏமாற்ற மடைந்தேன், ஏமாறினேன், ஏமாற்றப்பட்டேன், ஏமாறிப்போனேன் என்றுதான் எழுதவேண்டு மேயன்றி, 'ஏமாந்தேன்' 'ஏமாந்து போனேன்' என்று எழுதுதல் கூடாது. அது தவறானது. முரணான பொருளைக் குறிக்கும்.

**'ஏகப்பட்ட'... ஏகப்பட்ட நூல்கள் அந்நூல் நிலையத்தில் உள்ளன.**

பல, அநேகம் என்னும் பொருளைக் குறிக்க இங்கு 'ஏகப்பட்ட' என்னும் சொல் குறிப்பிடப் படுகிறது. இது சரியன்று. 'ஏகப்படு' என்னும் சொல்லே தமிழில் இல்லை. அது வேறு மொழிச் சொல்போலும். 'ஏகம்' என்பது ஒன்று, தனிமை என்னும் பொருள்களைக் குறிக்கிறது; சம்ஸ் கிருதச் சொல். 'ஏகப்பட்ட' என்பது எப்படிப் பலவற்றைக் குறிக்கும்? எப்படியோ இச்சொல் பேச்சு வழக்கில் வந்து, இலக்கியத்துள்ளும் எட்டிப்பார்க்க முயல்கிறது. எனவே, பல, அநேகம், எண்ணற்ற, எண்ணிறந்த, அளவற்ற, அளவுகடந்த என்னும் சொற்களையே ஏற்ற வாறு பயன்படுத்துதல் வேண்டும்.

**ஏற்கெனவே**

இச்சொல்லைப் பலர் ஏற்கனவே என்று எழுதுகிறார்கள். இது சரியன்று. ஏற்க + எனவே என்னும் இருசொற்களும் சேர்ந்து 'ஏற்கெனவே' என்றாகிறது.

'ஏற்கனவே' என்றால், 'எல்+கனவே' என்று பிரிக்கப்பட்டு, ஏல் = ஏற்றுக்கொள், ஒத்துக் கொள் என்றும், கனவு - கனா என்றும் பொருள்பட்டு, 'கனவையே நம்பு' என்னும் பொருளைத் தரும். ஆகவே, கனவை ஏற்காமல் 'ஏற்கெனவே' என்பதையே நினைவுடன் பயன்படுத்துவோமாக.

## 500

இந்த எண்ணை எழுத்தால் எழுதுவதில் பலர் தவறு செய்கின்றனர்.

'ஐநூறு' என்றும் 'ஐனூறு' என்றும் எழுது கிறார்கள். இவை தவறானவை. இங்கு 'ஐ' என்பது 'ஐந்து' என்னும் பொருளைக் குறிக்கும். 'ஐவர்' என்றால் ஐந்து பேர், 'ஐங்கரன்' என்று ஐந்து கைகளையுடைய விநாயகரைக் குறிப்பிடுகிறோம். 'ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை வையம் சுமப்பது வம்பு' இவை, வைணவ சமயத்தைச் சார்ந்த பன்னிரண்டு ஆழ்வார்களில் ஒருவரான ஆண்டாள் அருளிய திருப்பாவையில் காணும் பாடல் அடிகள். ஐ ஐந்து என்பது ஐந்து ஐந்து - அதாவது இருபத்தைந்து அதனுடன் ஐந்து சேர்ந்தால் முப்பது. ஆண்டாள் அருளிய திருப்பாவைப் பாடல்கள் முப்பது அல்லவா?

எனவே ஐ (ஐந்து) நூறு; ஐந்நூறு என்றுதான் எழுத வேண்டும். 'ஐ' என்னும் நிலைமொழி (முதலில் உள்ள சொல்) 'நூறு' என்னும் வருமொழி (அடுத்து வரும் சொல்)உடன் சேரும் போது, அதன் (வருமொழியின்) முதலிலுள்ள எழுத்தான 'நு'வின் இன மெய்யெழுத்தான 'ந்' தோன்றும். அது தமிழ் இலக்கண விதி. அம்முறையில் ஐ+நூறு= ஐந்நூறு என ஆகும். இதுதான் சரியானது.

ஐனூறு இப்படி எழுதுவதும் தவறானது. இதில் உள்ள இரண்டு சொற்களைப் பிரித்தால் 'ஐ + னூறு' என வரும், வருமொழியான 'னூறு' என்பதன் முதல் எழுத்தான 'னூ'வோ அதன் இனமாக வரிசையில் உள்ள ன,னா,னி,னீ, னு-னெ,னே, னை,னொ,னோ, என்னும் பிற றன்னகர (ன) வகை எழுத்துகளோ மொழியின் முதல் எழுத்தாக வாரா. இடையிலும் இறுதியிலும்தான் வரும். (எ-டு) நன்னூல்; பொன்னூசல்.

ஆதலால் 'ஐனூறு' என எழுதுவது முறையற்றது. எனவே முறைப்படி 500 என்னும் எண்ணை ஐந்நூறு என்றுதான் எழுதுதல் வேண்டும்.

இங்கு இன்னொன்றையும் குறிப்பிடுவது தக்கது.

## இரண்டு - ரெண்டு

12, 22, 32, 42 முதலிய எண்களை முறையே பன்னிரெண்டு இருபத்திரெண்டு, முப்பத்தி ரெண்டு, நாற்பத்திரெண்டு, எனச்சிலர் எழுதுகிறார்கள். 'ரெண்டு' என்று எப்படி மாறும்? பன்+இரண்டு - 'பன்னிரண்டு' என 'ர' தானே வரும்? 'ரெ' எப்படி புகுந்தது? இவ்வாறே இருபத்திரண்டு, முப்பத்திரண்டு, நாற்பத்திரண்டு எனப் பிறவும் வரும். இவற்றில் இருபத்தி, முப்பத்தி, நாற்பத்தி - எனத் 'தி' வருகின்றதே எனச் சிலருக்கு ஐயம் ஏற்படும். நிலைமொழி இறுதியில் 'து' இருந்து, வருமொழி முதலில் 'இ' வந்தால் 'து'வில் உள்ள 'உ' மறைய (த்+உ) எஞ்சிய 'த்' உடன் 'இ' சேர்ந்து 'தி' (த்+இ:தி) வருமல்லவா? ஆகவே, இருபத்தி ரண்டு, முப்பத்திரண்டு, நாற்பத்திரண்டு, ஐம்பத்திரண்டு, அறுபத்திரண்டு, எழுபத்தி ரண்டு, எண்பத்திரண்டு என வரும். இவையே முறையானவை.

### ஒருகால்

ஒருமுறை, ஒருதரம், ஒருவேளை என்னும் பொருள்களை குறிக்கும். இதனை 'ஒருக்கால்' என்று இடையில் 'க்' ஒற்றுப் போட்டுச் சிலர் எழுதுகிறார்கள். ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து ஆகிய எண்களில் எட்டு, பத்து என்னும் வன்றொடர்க் குற்றியலுகரச் சொற்களுக்குப் பின் மட்டுமே ஒற்று (க்,ச்,த்,ப்) மிகும் என்று முன்னர்ப் படித்தது நினைவிலிருக்கட்டும்.

ஒன்று, இரண்டு என்பனவற்றைக் குறிக்கும் ஒரு, இரு ஆகிய இவற்றின் பின் ஒற்று மிகுதல் கூடாது.

(எ-டு) ஒரு+கால்=ஒருகால். இரு+செவிகள் = இருசெவிகள். 'ஒருக்கால்' 'இருச்செவிகள்' என்று எழுதுதல் தவறு.

...நெஞ்சில்

ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும்

முருகா வென்று ஓதுவார் முன்

என்பதைப் பலகாலும் நினைவில் கொள்வோமாக!

### ஒரு சில; ஒரு சிலர்.

இச்சொற்கள் தமிழில் பரவலாகப் பயன் படுத்தப்படுகின்றன. 'ஒருசில', 'ஒருசிலர்' என்று சொல்வது எப்படிப் பொருந்தும்? 'ஒரு' என்பது ஒருமை 'சில' என்பது பலவின்பால், அஃறிணை; பலவற்றை யல்லவா குறிக்கும்?

ஒரு மரம், ஒரு மாடு; சில மரங்கள், சில் மாடுகள் என்று சொல்லலாம்.

'ஒரு' என்பது ஒருமை; 'சில' என்பது பன்மை. அப்படியானால் ஒருசில எப்படிப் பொருந்தும்? 'சில' என்றாலே போதுமே. வேண்டுமானால், 'மிகச் சில; சிற்சில' என்று சொல்வதுதான் சாலப் பொருந்தும்.

## தேவை நிறைவேறவில்லை

★ ஆங்கில அகராதியை உரு ...ாக்கியவர் என்ற பெருமைக் ...ரியவர் சாமுவேல் ஜான்சன். ...வர் ஓர் அறிஞர். ஆனால் ...வல் எழுதும் எழுத்தாளர் அல் ...ர்; இருந்தாலும் அவர் தம் வாழ் நாளில் ஒரே ஒரு நாவலையும் எழுதியுள்ளார் - அதுவும் ஒரு கட்டாயத்துக்காகவேதான் எழுதினார். அதாவது தன் தாய் நோய் வாய்ப்பட்டிருந்த போது அவருக்குத் தேவையான வைத்தியச் செலவை சமாளிப்பதற்காகவே அந்த நாவலை எழுதினார்.

ஒரு வாரத்தில் அவர் எழுதி முடித்த 'அபிசினிய இளவரசர் ரசேலஸ்' என்ற அந்த நாவலுக்கு 100 பவுன் சன்மானமாகக் கிடைத்தது.

ஆனால் அந்தத் தொகை அவரது தாயாரின் வைத்தியச் செலவிற்குப் பயன் படவில்லை. அதற்குள் அவரது தாயார் காலமாகி விட்டார்.

அவரது இறுதிச் சடங்கிற்கே அத்தொகை பயன்பட்டதாம்.

ஆர்.ஆர்.பூபதி

---

அவ்வாறே சில நண்பர்கள், பல அறிஞர்கள் என்று கூறுவதும், எழுதுவதும் பரவலாகி விட்டன. 'சில', 'பல' என்பன அஃறிணைப் பலவின்பால் அன்றோ? 'சிலர்', 'பலர்' என்பன உயர்திணை, பலர்பால் அல்லவோ? ஆதலால், 'சில நண்பர்கள், 'பல அறிஞர்கள்' என்று கூறுவதும் மாபெருந் தவறு அல்லவோ? பின் எப்படிச் சொல்வது /எழுதுவது?

நண்பர்கள் பலர்; அறிஞர்கள் சிலர் என்றுதான் எழுதவேண்டும். இப்பெரும் பிழைகளை இனிமேலாவது களைந்து நல்ல தமிழைக் காப்போமாக! இத்தவறுகள் ஆங்கிலத்தின் மோதலால், மோகத்தால் வந்தன. 'SOME', 'MANY' என்னும் ஆங்கிலச் சொற்கள் ஆங்கில முறைப்படி அஃறிணை, உயர்திணை, பன்மைகளில் வழங்கப்பெறும்.

'SOME' என்றால் சில, 'MANY' என்றால் பல. அவற்றைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றிச் 'சில மனிதர்கள்', 'பல அறிஞர்கள்' என்று தமிழில் உயர்திணைப் பன்மையிலும் எழுதத் துணிந்துவிட்டமை தமிழ்க் கொலையல்லவா?

இத்தவறு செய்யும் அன்பர்கள் பலரும், அறிஞர்கள் சிலரும் இனியேனும் திருந்தி திருத்திக் கொள்வார்களாக!

### ஒரு : ஓர் :

இச் சொற்களைப் பயன்படுத்துவதில் சிலர் குழப்பமடைகின்றனர்.

ஒரு சொற்றொடரின் முதல் சொல் (நிலைமொழி) 'ஒரு' என்றிருந்து, அதனை அடுத்துவரும் சொல்லின் (வருமொழியின்) முதல் எழுத்து உயிரெழுத்தாக இருக்குமானால் அந்த முதல் சொல்லாகிய 'ஒரு' என்பது 'ஓர்' என்றிருத்தல் வேண்டும்.

(எ-டு) ஓர்+அரசன் = ஓரரசன், ஓர்+ஆள்= ஓராள்.

ஓர்+இடம் = ஓரிடம், ஓர்+ஈசன் = ஓரீசன்.

ஓர்+உலகம் = ஓருலகம், ஓர்+ஊர் = ஓரூர்.

ஓர்+எண் = ஓரெண், ஓர்+ஏழை = ஓரேழை.

ஓர்+ஐயம் = ஓரையம், ஓர்+ஒளி = ஓரொளி,

ஓர்+ஓசை = ஓரோசை.

இப்படி எழுதுவதுதான் பன்னெடுங்காலமாகத் தமிழ் வழக்கில் இருந்து வரும் முறை - மரபு. இம்முறையைத் தமிழ் இலக்கியங்களில் நெடுகக் காணலாம்.

ஓர்இல் நெய்தல் கறங்க; ஓர் ஏர்உழவர்; ஓர் எழுத்தொரு மொழி.

ஈர் ஐம்பதின்மார் - இப்படிப் பலப்பல.

'ஓராறு முகமும் ஈராறு கரமும்' உடையவன் என்று தமிழ்க்கடவுள் முருகனைப் பாடுகின்றார்களே!

'ஈரைந்து' தலைகளையும், 'ஓரம்பால்' விழ்த்தினான் இராமன் அன்றோ?

'ஒரு அரசன்', 'ஒரு ஊர்' என்னும் சொற்களைச் சேர்த்து விரைவாகச் சொல்லிப் பாருங்கள். அந்த 'ஒரு' என்னும் சொல் இயல்பாகவே 'ஓர்' என மாறி 'ஓரரசன்' ஓரூர்' என ஒலிப்பதை உணரலாம்.

இதனைக் கருத்தில் கொண்டுதான் அறிஞர்கள் வருமொழி முதல் எழுத்து உயிரெழுத்தாயின், நிலைமொழி 'ஓர்' என்றிருத்தல் வேண்டும் என்னும் வழக்கத்தை - முறையைக் கையாண்டனர். இதுவே மரபாயிற்று.

இலக்கியத்திலிருந்துதானே - இலக்கியத்துக்காகத்தானே இலக்கணம் தோன்றியது.

இதனையறிந்தும் சிலர் 'ஒரு அரசன்', 'ஒரு ஆள்' என எழுதுவதுதான் வேதனை தருவதாக உள்ளது.

ஆதலால், வருமொழியின் முதல் எழுத்து உயிர் எழுத்தாயிருப்பின் நிலைமொழி 'ஒரு' என இருத்தல் தவறு. 'ஓர்' என்றிருத்தலே முறையானது. இதனை நன்கு உணர்ந்து முறைப்படி எழுதுவோம்.

# ஒரு புதிய தீபம் ஏற்றப்படுகிறது

அன்று அமாவாசை. நிறைந்த நாள் - அதனால் தானோ என்னவோ, அந்த நாளைத் தேர்ந்தெடுத்தார் சபேச குருக்கள் - அந்த ராஜ மங்கலம் கிராமத்தை விட்டு முற்றாக விலகிச் சென்று விடுவதற்கு.

தலைமுறை தலைமுறையாக வாழ்ந்த ஊர். பிரிந்து செல்லப் போகிறோமே என்று வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனாலும் வேறு வழி புலப்பட வில்லை.

சுந்தரேஸ்வரர் - மீனாட்சி அம்பாளுக்கு பூஜா காரியங்கள் செய்யாமல் அவரால் ஒருநாள் கூட இருக்க முடியாது. எட்டு வருடங்களாகின்றன. அவர் சம்பளம் என்று கால்காசு பார்த்து.. என்ன பிரமாத சம்பளம் - கொஞ்சம் நெல்லும் சொற்ப ரூபாயும். அதைக்கூடத்தரமுடிய வில்லை கோயில் நிர்வாகத் தாரால். ஒரேயடியாக மனுஷன் மானத்தை விட்டு சம்பளம் கேட்டு எத்தனை முறைதான் அலைவது? அதற்கு மேலும் அவலப்பட அவரால் இயல வில்லை. 'சே... போ' என்று விட்டுவிட்டார்.

ஆனாலும் அவர் ஒன்றும் நித்ய பூஜைகளைச் செய்வதில் மனம் சலித்துப் போய்விட வில்லை. தன்னம்பிக்கை யோடு துணிந்து நின்றார். சிவகாமி அம்மாளும் அதற்கு உறுதுணையாக இருந்தாள். மாமி அப்பளம் போட்டுத் தரு வாள், கட்டுக் கட்டாக: சபேச குருக்கள் அதை டவுனில் கொண்டு போய் விற்று வரு வார். அத்துடன், கிருத்திகை அன்று மக்கள் கூட்டம் நிரம்பி வழியும் புகழ்பெற்ற முருகன் கோயில் ஒன்றிற்கு ஒத்தாசை புரியச் சென்று வருவார். அதில் கிடைக்கும் வருமானம் அவருக்கு ஓரளவு தானும் பட்டினி கிடக்காமல் மீனாட்சி - சுந்தரேஸ்வரரையும் பட்டினி கிடக்க விடாமல் பார்த்துக் கொள்ளப் போதுமானதாய் இருந்தது. விசேஷ நாள்களில், சில ஊர்களிலுள்ள பிரபல மான ஆலயங்களுக்கு அலங் காரப் பணிபுரிய வேறு அவருக்கு அழைப்பு வரும்.

இதனாலெல்லாம்தான் அவ ரால் இத்தனை நாள்கள் சமாளிக்க முடிந்தது. ஆனால், இப்போதோ அவருக்கு வயது அறுபத்தைந்துக்கு மேலாகி விட்டது. வறுமையும் பட்டினியும் உடற்சோர்வுகளை அதி கரிக்கத் துவங்கிவிட்டன. அவ ரால் வெளியூர்களுக்கு அலைய முடியவில்லை.

சபேச குருக்களுக்கு ஒரே யொரு பிள்ளை. அவன் பிச்சையெடுத்தாலும் எடுப் பேன்; இந்தத் தொழிலுக்கு மட்டும் என்னைத் தயார் செய்து கொள்ள மாட்டேன் என்று நிர்த்தாட்சண்யமாக மறுத்துவிட்டு எப்போதோ வீட்டை விட்டே ஓடிப்போயிருந் தான். ஓட்டலில் வேலை பார்த்தபடியே படித்து முன் னேறி, ஒரு தனியார் நிறு வனத்தில் இப்போது பணி புரிகிறான் - சென்னையில். அவன் சமீபகாலமாக மாதம் ஐம்பது ரூபாய் அனுப்பிக் கொண்டுதான் இருக்கிறான். ஆனால் அது எந்த மூலைக்கு...?

இப்போது அவனிடம் போய் ஒதுங்கினால், கொஞ்சம் நிம்மதியாகக் காலம் கழிக்க லாம் என்பது சிவகாமியின் அந்தரங்க விருப்பமாக இருக் கிறது.

இடிந்து நொறுங்கி, எருக் கஞ்செடி முளைத்துக் கிடக்கும் மீனாட்சி - சுந்தரேஸ்வரர் ஆல யத்தைப் பார்த்துக் கொண் டிருக்க சபேச குருக்களால் இயலாது. அதனால்தான் அதற்கு முன்பே அந்த ஊரை விட்டு வெகுதூரம் விலகிப் போய்விட எண்ணுகிறார் அவர். அந்த ஊரெல்லையைத் தாண்டு வதற்குள் உயிர் போய்விட் டால் ரொம்ப நிம்மதி என்பது அவர் பிரார்த்தனையாய் இருந்தது.



## கௌதம நீலாம்பரன்

காலையில் எழுந்து கிணற்றங்கரைக்குச் சென்று, தண்ணீரை மொண்டு மொண்டு தலையில் ஊற்றிக் கொண்டே அவர், 'இதுதான் இந்த ஊரில் போடும் கடைசி முழுக்கு' என்று வாய்விட்டே முனகினார். பின், சிவகாமி அம்மாளை அழைத்து, "சீக்கிரம் தர்ப்பணத்தை முடித்துக் கொண்டு கோயிலுக்குப் போய்விட்டு வந்துடறேன். மீனாட்சி - சுந்தரேஸ்வரருக்கு இன்னிக்குத்தான் கடைசிக் குளியல். நீ பிரயாணத்துக்கு எல்லா ஏற்பாடும் பண்ணிட்டயோல்லியோ...?" என்றார்.

"எல்லாம் ஆச்சு... நீங்க முதல்ல ஈரவேஷ்டியை மாத்தி, மடி கட்டிண்டு வாங்கோ. வாசல் திண்ணையில ஒருவர் வந்து உட்கார்ந்துண்டிருக்கார்; அழகரசனார் அனுப்பிச்சாராம். உங்களைக் கையோட அழைச்சுண்டு வரச் சொல்லியிருக்காராம் அவர்..." என்றாள் சிவகாமி அம்மாள்.

"என்னது! அழகரசனா... யாரு, கொள்கைச்சிங்கம் - வீரத்தம்பி அழகரசனார்னு சொல்லுவாளே, அவரா...?"

உள் கூடத்தில் குருக்களின் குரல் கேட்டதுமே வாசல் திண்ணையிலிருந்த ஆள் எழுந்து நின்று, "கும்பிடறேன் சாமி! பெரிய வீட்டு ஐயாதான் அழைச்சாரச் சொன்னாங்க - அவசரம்னாங்க..."என்றான்.

சபேச குருக்கள் ஒருகணம் சிந்தனை வயப்பட்டார். 'பரம நாத்திகரிடம் நமக்கென்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது' என்று நினைத்தது மனம்.

அழகரசன் - சுந்தரேசன் என்ற உள்ளூர் இறைவனின் திருநாமம்தான் அவருக்கு வைக்கப்பட்டிருந்தது. அவர், தாம் சார்ந்திருந்த இயக்கத்தின் ஆர்வத்தால் அந்தப் பெயரை வடமொழி என்று ஒதுக்கி, அழகரசன் என்று மாற்றிக் கொண்டிருந்தார்.



அந்தக் காலத்தில் அவர் மிகத் தீவிரமான பகுத்தறிவுக் கொள்கையுடையவராக விளங்கியதால், 'கொள்கைச் சிங்கம்' என்றும் 'வீரத்தம்பி' என்றும் முதிய தலைவர்களால் பாராட்டப்பட்டிருந்தார்.

அழகரசன் பேச்சிலும் எழுத்திலும் அக்கிரகாரம்தான் வறுபடும்; வதைபடும். ஜாதிகள் என்பது ஒரு பெரிய சதித்திட்டம் - சாத்திரங்கள், சம்பிரதாயங்கள் அனைத்தும் மூடத்தனங்களும் மூத்த பொய்களும் தவிர வேறில்லை. மனுதர்மத்தை எரிக்க வேண்டும், மனிதர்களை பேதம் நீக்கி ஒன்று சேர்க்க வேண்டும் என்பதுதான் அவர் திரும்பத் திரும்ப முழங்கிய முழக்கம்.

சபேச குருக்களுக்கு எல்லாமே நினைவிருக்கிறது. காலம் நிகழ்த்திய கோலங்களுக்கு ஒரு சாட்சியே போல அவர் நெடுங்காலமாக அந்தக் கிராமத்தில் வாழ்ந்தவரல்லவா? ஆனானப்பட்ட சூறாவளிகளிலெல்லாம் சாயாது நின்ற அந்தக் கம்பீரமான ஆலவிருட்சமுமல்லவா இப்போது வறுமைப் பேயால் பிடுங்கி வீசப்படுகிறது!

அந்த ஒரு கணத்துள் அவர் ஒரு நீண்ட நெடிய யுக யாத்திரையே நிகழ்த்திவிட்டார். பிறகு தம்மை ஆசுவாசப் படுத்திக் கொண்டு, வாசலில் நின்ற ஆளிடம், "நீ போய் பெரிய வீட்டு ஐயா கிட்டே நான் இதோ இப்ப வந்துடறேன்னு சொன்னதா சொல்லுப்பா" என்றார்.

ஒரு பெரிய மோட்டர் சைக்கிள், படபடவென்று ஊரதிர ஒலியெழுப்பியபடி - தெரு முழுக்க புழுதி கிளப்பியபடி அழகரசன் வீட்டு வாசலில் வந்து நின்றது. அதிலிருந்து தருமராஜும் மற்றொருவரும் இறங்கினர். கரம் குவித்தபடி உள்ளே வந்த அவர்களை வரவேற்று உட்கார வைத்தார் அழகரசன். தருமராஜுடன் கூட வந்தவன், தருமராஜ் பற்றிக் கட்டியம் கூறி, கீர்த்திகள் சொல்லி அழகரசனுக்கு அறிமுகப்படுத்த முனைந்தான்.

தருமராஜைத் தெரியாதா என்ன அவருக்கு? அவன் தானே இப்போது குறிப்பிடத்தக்க அரசியல் பிரமுகர். இயக்கம் மூன்றாகவோ, நான்காகவோ உடைந்து சிதறிய போது, அதன் ஒரு பிரிவு தலைவர்களுள் ஒருவனாகத் தோன்றிப் பிரபலமாகியிருப்பவன் அவன். தொகுதி எம்.எல்.ஏவாக வேறு இருந்தவன்.

குறிப்பிட்ட ஜாதிச்சங்கம் ஒன்று வேறு அவனைத் தங்கள் ஜீவரட்சகனாக - மீட்பனாக - ஞான மேய்ப்பனாகக் கொண்டாடிக் கொண்டிருக்கிறது. ஒரு கையில் இயக்கக்கொடி, இன்னொரு கையில் ஜாதிச்சங்கப் பதாகை என்று ஏந்தியபடி அவன் என்னென்னவோ சாகசங்கள் செய்து கொண்டிருக்கிறான். அந்த கிராமத்தைச் சேர்ந்தவன்தான் என்றாலும் இப்போது அவன் வசிப்பது

பக்கத்து டவுனில். அங்கிருந்து கொண்டு சுற்றுப்புறக் கிராமங்களில் உள்ள அவனது இனத்தாரைத் தூண்டிவிட்டு, அவன் பல வேண்டாத கலவரங்களை உருவாக்குகிறான் என்று பலரும் அவரிடம் வந்து முறையிட்டதுண்டு.

அண்மையில்கூட அந்தக் கிராமத்தில் அப்படியொரு கலவரம் தோன்றி, சேரிவாழ் மக்களின் வீடுகள் பல கொளுத்தப்பட்டன. அதற்குத் தருமராஜின் தூண்டுதலே காரணமென்றும், அவனை அழகரசன் கூப்பிட்டு விசாரிக்க வேண்டுமென்றும் சிலர் வந்து கூறினர். ஆனால் அவரோ, 'நான் பழைய சுயமரியாதைக்காரன் என்பது தவிர, இப்போதைய இயக்கங்கள் எதனோடும் தொடர்பில்லாதவன். சரியோ தவறோ தர்மராஜ் இப்போது புகழ்மிக்க அரசியல் பிரமுகனாக இருப்பவன். அழைத்தால் வருவானோ மாட்டோனோ - தவிர அப்படி அழைத்து, புத்தி சொல்வதும் அத்தனை சரி என்று தோன்றவில்லை' என்று கூறிவிட்டிருந்தார்.

இப்போது அவனே தன் வீடு தேடி வந்து அமர்ந்திருப்பது அவருக்குப் பெரும் வியப்பாக இருந்தது.

"தம்பிய தெரியாதா என்ன... தொகுதி எம்.எல்.ஏ. பத்திரிகைல போஸ்டர்லல்லாம் படத்தை நிறைய தடவை பார்த்திருக்கேன். தெரிஞ்சப்புறம் தெரியாத மாதிரி நடந்துக்கற ஆளில்லே நான். என்ன விஷயமா வந்திருக்கீங்கன்னு சொல்லுங்க" என்றார் அவர்.

தர்மராஜ் மிகுந்த பணிவு காட்டினான். திரும்பத் திரும்ப கரம் குவித்து வணங்கியவாறே பேசினான். அதுவரை அவரை வந்து பார்க்காதிருந்தது பெரும் தவறு என்று உணர்வதாக வருந்தினான். பட்டினத்தில் தலைவர்கள் பலரும் 'கொள்கைச் சிங்கம் - வீரத்தம்பி' அழகரசனாரின் ஊரினன் அவன் என்றே சிறப்பித்துக் குறிப்பிடுவதாகக் கூறினான். அவர் மீது இமாலய மரியாதை தலைவர்களுக்கு இருப்பதாகக் கூறினான்.

அழகரசனுக்கு வயது அறுபதாகிறது. மணிவிழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாட இயக்கம் விரும்புகிறதாம். அதற்காகப் பிரபலஸ்தர்கள் தலைமையில் ஒரு விழாக் குழுவே அமைக்கவிருப்பதாகவும் கூறினான் தர்மராஜ். அதைத் தெரிவித்து, அனுமதி பெறவே இப்போது அவன் வந்திருக்கிறான். ஆனால், அவர் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. மேற்கொண்டு அதுபற்றித் தம்மை வற்புறுத்த வேண்டாமென்று கூறிவிட்டார். வீடு தேடி வந்திருப்பவனிடம் தாம் பேச விரும்பியதைச் சொல்லாமலிருக்கவும் அவரால் முடியவில்லை.

ஜாதிபேதங்களை ஒழிக்கத் துவங்கிய ஓர் இயக்கம் இப்படி உடைந்து சிதறி, ஜாதிச் சங்கங்களின் பின்னாலும் பிற மதவாத அமைப்புகளின் பின்னாலும் புகலிடம் தேடி நிற்பதை அவர் அவனிடம் வருத்தத்தோடு சுட்டிக் காட்டினார். பல ஆண்டு காலம் ஆட்சி நடத்திய பின்பும் அந்த இயக்கத்திற்கு இப்படியோர் அவலம், சுயநல வெறியால் தான் நேர்ந்திருக்கிறது என்று தார்மீகமான கோபத்துடன் கூறிக் கண்டித்தார். குறிப்பாக அவன் சுற்றுவட்டு கிராமங்களில் கலவரங்களையும், குத்து வெட்டு பழிகளையும் உருவாக்கி வருவது பற்றி - 'இந்த விபரீத முயற்சிகளை உடனே விட்டொழிக்க வேண்டுமென்று' அறிவுறுத்தினார்.



தர்மராஜ் சிறிதும் உணர்ச்சி வயப்படாமல் அமைதியாக அனைத்தையும் கேட்டுக் கொண்டான். மக்கள் பிரச்னைகளை முழுவதுமாகத் தீர்க்க முடியாத நிலையில் இப்படிப்பட்ட அரசியல் நடத்துவது தவிர்க்க முடியாததே என்றும், நாடு முழுக்க இந்தப் போக்கு காணப்படுவதால் தன்னை மட்டும் அவர் குறை சொல்வது அர்த்தமற்றது என்றும் அவன் எடுத்துரைத்தான். தன்னைப் போன்ற ஒரு சாதாரண மனிதன் - சாமானியன் பிரபலமாவதற்கு இதுபோன்ற ஜாதி அரசியலே மிகவும் துணை புரிவதாகவும், அந்த வாய்ப்பை இழக்கத் தான் விரும்பவில்லையென்றும் அவன் மிக உறுதியாகக் கூறிவிட்டான்.

இத்துடன் தர்மராஜ் விட்டிருந்தால் பரவாயில்லை. அவன் வேறொன்றும் சொன்னான்...

"ஐயா, நீங்க பெரிய சீர்திருத்தக்காரர் என்கிற மரியாதை எங்களுக்கு எப்பவுமே உண்டு. ஆனா, கொஞ்சம் யோசிச்சுப் பாருங்க... நீங்க முன்னேறிய ஜாதியைச் சேர்ந்த ஒரு மேட்டுக்குடிக்காரர். உங்க ஆளுக அரசியல்ல பிரபலமா இருந்தப்பல்லாம் எத்தனையோ அக்கிரமம் நடந்துச்சு. அப்பல்லாம் நீங்க இத்தனை ஆத்திரப்பட்டதில்லே. அவங்களை அடக்கவும் உங்களால முடிஞ்சதில்லே. கீழ்ஜாதிக்காரன்ல ஒருவன் முன்னுக்கு வரான்னதும் மட்டும் உங்களால தாங்க முடியல. அது

தான் இந்த உபதேசங்களுக்குக் காரணம். இருந்தாலும் நான் இதைப் பொருட்படுத்த மாட்டேன். எனக்கு உங்கமேல மதிப்பும் மரியாதையும் உண்டு. மத்தவங்க தூண்டுதலாலதான் நீங்க இப்படிப் பேசறீங்கன்னு நினைக்கிறேன். என்னால உங்க ஜாதியச் சேர்ந்தவங்களுக்கு எந்த ஆபத்தும் வராது..." என்று வெகு நிதானமாகக் கூறிவிட்டு அவன் புறப்பட்டு விட்டான்.

அவனை மறுத்து அவரால் உடனே எதுவும் பேச முடியவில்லை. அவர் கொஞ்சம் யோசித்துப் பார்த்தார். இது நிச்சயமாகக் குதர்க்கவாதம்தான்; சந்தேகமில்லை. ஆனால், இதுபோன்ற குதர்க்க வாதங்களைத்தானே அவரும் கடந்த காலத்தில் செய்து கொண்டிருந்தார்?

நினைவுகள் நெஞ்சேறி மிதித்தன.

அப்போது தேசிய எண்ணம் கொண்ட அரசியல்வாதிகளே செல்வாக்குப் பெற்றிருந்த நேரம். அழகரசனோ தேசியம் பேசுவோரின் முகத்துக்கு நேரே கைநீட்டி. சீர்திருத்த முழக்கத்தைச் சீறிச்சீறி எழுப்பிக் கொண்டிருந்தார். கருத்தரங்கம், பட்டிமன்றம், கவியரங்கம் எங்கும் அவர் முழக்கும் கனல் தெறிக்கும் கருத்துகளைக் கேட்டுக் கேட்டு அவர் பின்னால் ஓர் இளைஞர் படை பைத்தியம் பிடித்தது போல் எப்போதும் அலைந்து கொண்டிருக்கும்.

அப்போதுதான் ஒருநாள் அழகரசன் என்னும் திமிறித் திரியும் முரட்டுக்காளையின் திமிலைப் பற்றியிழுத்து, கூரிய கொம்புகளைப் பிடித்து அழுத்தித்திருகி; மூச்சுமுட்ட முகம் நிலம் தோயத் தோற்று நிற்க வைத்த ஓர் அரிய சம்பவம் நிகழ்ந்தது.

அவருடைய இளைஞர் படையைச் சேர்ந்த ஒருவன் கோயில் சுவரிலே, 'கடவுள் இல்லை; கடவுளை நம்புபவன் முட்டாள் காட்டுமிராண்டி.' என்பது போன்ற சில கோஷங்களைக் கரியால் கிறுக்கி வைத்தான். சபேச குருக்கள் அதை அழித்து, ஈரத்துணியால் துடைத்தார். எழுதியவன் ஓடி வந்து, 'இதை அழிக்கக்கூடாது' என்றான். சபேச குருக்களோ, 'இங்கே இப்படி எதுவும் எழுதக் கூடாது. மீறி எழுதினால் அழித்தே தீருவேன்' என்று உறுதியாகக் கூறி விட்டார்.

பிரச்னை விஸ்வரூபமெடுத்தது. புயல்போல் ஆவேசம் பொங்க வந்து நின்றார் 'கொள்கைச் சிங்கம் வீரத் தம்பி' அழகரசன்.

"என்னய்யா, எப்படியிருக்கு உடம்பு? எங்க ஆளை கோயில் செவுத்துல எழுத விடமாட்டேன்னியாமே. எங்கே, இப்ப வந்து தடு பார்ப்போம் நானே எழுதறேன்" என்று சீறிவிட்டு, தாமே கரியால் அந்த கோஷங்களைக் கோயில் சுவரில் எழுதினார்.

சபேச குருக்களும் சற்றும் அயராமல், ஈரத்துணியால் அந்த கோஷங்களை அழித்தார்.

ஆத்திரமாகப் பாய்ந்து சபேசனைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளினார். ஏகதேசமாகக் கன்னத்தில் பளாரென்று ஓர் அறையும் விட்டார். நிலை குலைந்து விழுந்து, கல்லில் மோதி, நெற்றி கிழிபட்டுக் குருதி சொட்ட நிதானமாக எழுந்து நின்றார் சபேசன்.

அவரும் அப்போது கம்பீரமான கட்டுமஸ்தான தோற்றத்தோடு இருந்த பருவம்தான்... அழகரசனைவிட இரண்டொரு வயது மூத்தவரும்கூட. துவந்த யுத்தம் என்று துவங்கினால், ஒண்டிக்கு ஒண்டியாக அழகர



சனை எதிர்த்துத் தாக்கும் வலிமை நிச்சயமாக அவருக்கு அப்போது இருந்தது. ஆனால், அப்படிச் செய்ய முனையாமல் அவர் ஒரு சில கணப்போதுகள் அமைதி காத்து நின்றார்.

அழகரசனோ வார்த்தைகளை வாரியிறைத்து, அவரைக் கோழை என்று சீண்டினார். என்னென்னவோ கூறி ஒரு மேடைப் பிரசங்கத்துக்குத் தயார் செய்திருந்த பேச்சு அனைத்தையும் கொட்டித் தீர்த்தார். சபேசனால் ஓரளவுக்குமேல் பொறுத்துக் கொள்ள முடியாது போனதும் மிக உரத்த குரலில் சற்று நிதானமிழந்துதான் குறுக்கிட்டு, "முட்டாள்தனமாகப் பேசாதே. போதும் நிறுத்து உன் உளறலை..." என்று கர்ஜித்தார்.

அவ்வளவுதான் அழகரசன் ஒருகணம் நெஞ்சுறைந்து போனார். யார், சாதுவான சபேச குருக்களுக்கா இந்தத் துணிச்சல்?

ஆம்; இப்போது சபேசன் வெடித்துச் சிதறினார் என்றுதான் சொல்லவேண்டும்.

"எழுது இந்த சுவர் முழுக்க எழுது. கடவுள் இல்லைதான்; கடவுளை நம்புபவன் காட்டுமிராண்டிதான். நேற்றும் முந்தைய நாளும் மட்டுமல்ல; அதற்குமுன் எத்தனை நூற்றாண்டுகளாக உன் முன்னோர் இந்தக் கடவுளைத் தொழுதார்களே, அவர்கள் எல்லாமே காட்டுமிராண்டிகள்தான். நீ



மட்டும்தான் அறிவாளி. உன் கழுத்தில் வேண்டுமானாலும் தாராளமாக 'என் தந்தையும் தாயும் - அவர் முந்தையர் ஆயிரமும் முட்டாள்களே, காட்டுமிராண்டிகளே' என்று கொட்டை எழுத்தில் எழுதித் தொங்க விட்டுக் கொள். உன் பாட்டனும்பூட்டனும்தான் இந்தக் கோயிலைத் திருப்பணி செய்து பாதுகாத்தார்கள். தலைமுறை தலைமுறையாக உங்கள் குடும்பம்தான் இந்தக் கோயிலின் முதல் மரியாதையைப் பெற்று வந்தது. நான் இங்கே வெறும் கூலிக்காரன் தான்.

எந்தச் சோழன் காலத்திலோ கல்லால்கட்டிப் போடப்பட்ட இந்த ஆலயம்தான், உன் மூதாதையர் முன்பு ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக இங்கு வாழ்ந்து செழித்ததாக இந்தக் கோயில் சுவரிலுள்ள ஒரு கல்வெட்டு கூறுவதாக உன் அப்பா மாசிலாமணி அடிக்கடி கூறுவார். மாசே உருவாக அவருக்குப் பிறந்து தமிழின் கலாசாரத்தைக் குழிதோண்டிப் புதைக்க அலையும் வெறி பிடித்த மிருகமே, போ... உன் முன்னோர் அனைவரும் முட்டாள்களே! காட்டுமிராண்டிகளே! இப்போதே என் கண் பார்க்க எழுது இந்தச் சுவரில்..."

சபேசன் பேசப்பேச அழகரசன் ஓங்கிய கரம் வீழ்ந்து, ஒடுங்கி நிற்கலானார். ஆனாலும் அவர் சிந்தை மட்டும் 'போர் முறையை மாற்று; போரை நிறுத்தாதே; பேசு - பேசியே இவனை வீழ்த்து' என்று கூவியது.

"குருக்களே, கூச்சல் போடாதேய்யா. என்னமோ பெரிசா பேசறேயே, என்னோட ஒரு நாள் மேடையேறி வாதம் பண்ண வரியா... பேசி நீ என்னை ஜெயிச்சிட்டா நான் மொட்டையடிச்சுக்கறேன், நெத்தில பட்டை அடிச்சுக்கறேன், கழுத்துல வேணும்னாலும் கொட்டை கட்டிக்கிறேன். அப்புறம் என்னோட இந்தக் கொள்கை பற்றிப் பேசறதையே நிறுத்திடறேன். தயாரா?"

"நிறுத்து சுந்தரேசா! பேரை மாத்திக்கிட்டதால நீ மகா உத்தமனாயிட முடியாது. மனு தர்மம், மண்ணாங்கட்டி அது இதுன்னு - எவனோ எங்கோ உளறினதைக் கேட்டுட்டு வந்து இங்கே உளறிட்டா நீ மகா மேதைன்னு ஆயிடாது. நான் சாதாரண - கோயில் பூஜைகளுக்கான மந்திரங்களை மட்டுமே படிச்ச ஓர் ஏழை பிராமணன், பெரிய சாஸ்திர விற்பன்னன் இல்லை. உன்னோட குதர்க்க வாதங்களுக்கு பதில் சொல்லிக் கொண்டிருக்க என்னால் ஆகாது. என்னவோ பெரிசா நான்தான் ஜாதிகளையே உருவாக்கின மாதிரி பேசறயே, உன்னோட ஒழுங்கு என்ன?

"நீ ஜாதிகளே இல்லேன்னுட்டு போகவேண்டியது தானே, நானா வேண்டாம்னேன். 'ஒரு சேரிப் பெண்ணைக் காதலிச்சியே, அவளை உன்னால கல்யாணம் பண்ணி வாழ வைக்க முடிஞ்சுதா?' 'சொத்துல கால்காசுகூடத் தர மாட்டேன்'னு உங்கப்பா மிரட்டினதும் அவர் காட்டிய உங்க ஜாதிப் பெண்ணோட கழுத்தில தாலி கட்டிட்டு, அஞ்சலையை அம்போன்னு விட்டவன் நீ. அவ வயிற்றுப் பிள்ளையோடு புளிய மரத்துல தூக்கு போட்டு செத்து, இன்னிக்கும் பேயா அலையறதா ஊரே பேசறது. பத்து வருஷம் ஆயிட்டதால இந்தப் பழங்கதை உலகத்துக்கு இனிமே தெரியாதுங்கறது உன்னோட நினைப்பு".

> ❖ இறந்த காலத்தை பற்றி எண்ணுவதைக் கைவிடு, எதிர் காலத்தைப் பற்றியே உன் கவனத்தைச் செலவிடு.
>
> — ஆண்டர்சென்.
>
> ❖ கண்ணியம் மிக்க மனிதன், பொய் சொல்லவே தெரியாதவராக இருக்க வேண்டும்.
>
> — எமர்ஸன்.
>
> ❖ பிறருக்குக் கொடுத்த வாக்கை காப்பது நாணயம். பிறருக்கு வாக்கு கொடுக்காமல் இருப்பது அறிவுடைமை.
>
> — கல்கி.

அழகரசன் அன்று அதற்கு மேல் நின்று சபேசனுடன் குதர்க்கம் புரியவில்லை - அஞ்சலை பற்றிய உண்மை அவர் நெஞ்சைச் சுட்டெரித்ததாலோ என்னவோ, கொந்தளித்த அலை கடலுக்குள்ளேயே திரும்பிச் சுருண்டு விழுந்தது போல் அவர் வீடு திரும்பினார். அதன் பிறகு அவர் அதே ஊரில் வாழ்ந்தும் - ஏற்றம் பல கண்டும், சபேச குருக்களை மட்டும் நேரடியாக ஒருமுறை கூட சந்திக்கவே இல்லை; இன்றுவரை.

இன்று?

அதோ தருமராஜ் புறப்பட்டுப் போன சிறிது நேரத்திலேயே சபேச குருக்கள், அழகரசனின் வீட்டிற்குள் பிரவேசித்தார்.

"வாங்க... வாங்க..." - எழுந்து சென்று வாசல் முகப்பிலேயே அவரை வரவேற்று, உட்கூடம் அழைத்து வந்தார் அழகரசன்.

'அட, இந்தச் சிங்கம் இத்தனை இளைத்துத் துரும்பாகி, தளர்ந்துவிட்டதே! அறுபதுகளைத் தாண்டியதால் தொண்டு கிழம்போலாகி விடவேண்டுமா என்ன...?' சபேச குருக்களைப் பற்றி அழகரசன் மனதில் ஓடிய எண்ணங்கள் இவை. ஏனெனில், அவர் இன்னும் அத்தனை தளர்ந்துபோய், கிழடுத் தட்டி விடவில்லை.

அவர் காட்டிய இடத்தில் சபேச குருக்கள் உட்கார வில்லை. நின்றவாறே,

"நேக்கு நாழியாறது. புறப் படணும். ஏதோ வரச்சொன்னே ளாமே... என்ன சேதி?" என் றார்.

"முதல்ல உட்காருங்க சாமி; பேசலாம். எத்தனை காலம் ஆச்சு நாம பாத்து, பேசி... அப்பல்லாம் எவ்வளவு காரசாரமாப் பேசுவீங்க. இப்ப குரலே தளர்ந்து போச்சே?"

"நீங்க தப்பா நினைச்சுக்கப் படாது. பழைய விரோதம் இன் னும் உங்க மனசுல இருக்காப் பல இருக்கு. நேக்கு உங்க ளோட உக்காந்து விவாதம் பண்ண நேரமில்லே. நான் இப்ப இந்த ஊரைவிட்டே கிளம்பிண்டிருக்கேன்..."

"தெரியும் சாமி! உட் காருங்க; உங்களோட கொஞ் சம் பேசணும்".

"பேஷ். இத்தனை காலம் ஆகியும் உங்க முரட்டுத்தனம் மாறலே போலிருக்கு. ஊரை விட்டே போயிடப் போறேன்னு தெரிஞ்சதும் கூப்பிட்டுப்பழைய தகராறு பற்றிப் பேச ஆசைப்படறேள் போலிருக்கு. பிள்ளைவாள், நேக்கு அதுக் கெல்லாம் உடம்பிலே சக்தி யில்லே. நீங்களே ஜெயிச் சுட்டதா வச்சுக்கலாம். இப்ப உங்க கொடி உசந்து போச்சு. சாமி, பூஜை ஒண்ணுமே வேணாம். இருந்த ஒரே எதிரி; நானும் இன்னியோட ஒழிஞ்சாச் சுன்னு சந்தோஷப்படுங்கோ.

"நான் கிளம்பறேன். போற துக்கு முந்தி கடைசியா இன் னிக்கு ஒரு தடவை என்னோட கையால மீனாட்சி சுந்தரேஸ்வர ருக்கு அபிஷேக ஆராதனை செஞ்சாகணும்னு ஆசை. இப்ப போய் எதுக்கு என்னை அவசரமா கையோட அழைச் சுண்டு வரச் சொன்னேள்..." என்றார் சபேச குருக்கள்.

விரக்தி தொனித்தது அவர் குரலில்.

அழகரசன் மிகத் தீர்மான மாய் ஒரு முடிவக்கு வந்த பின்புதான் சபேச குருக்களை அழைத்துவரச் சொல்லியிருந் தார். நெடுங்காலமாய் அவ ருள் நடந்து வந்த ஒரு மனப் போராட்டத்தின் முடிவை அன்று அவசியம் பிரகடனம் செய்தேயாக வேண்டுமென்ற தீர்மானம் அது. சபேச குருக்கள் ஊரை விட்டே போகப் போகிறார் என்றறிந்த மறுகணமே அந்தத் தீர்மானம் அவருள் உருவாகியிருந்தது. நடப்புகளைப் பார்த்துக் கொண்டு இன்னும் எத்தனை காலம்தான் மௌன சாட்சியாக இருப்பது?

கிட்டத்தட்ட ஒரு தலை முறைக்கால அவலங்களைத் தாங்கிக் கொள்ள இயலாமல் அவர் பட்ட மௌன வதை கொஞ்சமோ!

எந்த நம்பிக்கைகளை நெஞ்சேந்தி நின்று, ஒரு யுகப் புரட்சிக்கு உழைப்பதாக எண்ணி அவர் அயராது - ஆவேசம் கொண்டு செயலாற்றி னாரோ, அந்த நம்பிக்கைகள் அவர் கண்முன்பே பொல பொலவென்று உதிர்ந்து கொண்டிருப்பதை விடவும் - வேதனை உண்டா என்ன?

ஜாதிகளே இல்லாத பொன் னுலகு படைக்கப் புறப்பட்ட சிற்பிகள், ஊருக்கு ஊர், ஜாதித் திருவிழாக்களை நடத்தி, ஒவ்வொருஜாதிக்கும் ஒவ்வோர் அரியணையும் அரச மண்டபமும் அமைத்துத் தரு வதே உன்னத இலட்சியம் என்ற புதிய உடன்பாட்டுப் பிரகடனங்களை முழக்கித் திரியும் கொடுமை கண்டு அவர் துடித்த துடிப்பு! அப்பப்பா!

சுயநலப் பேய்களும் பதவி வெறியர்களும் போட்ட கொள் கைக் கூத்தின் சாயம் கலைந்து, அரசியல் அவலச் சேற்றில் உழலத் துவங்கியதுமே அனைத் திலும் வெறுப்புற்று அஞ்ஞாத வாசம் செய்பவரே போன்று ஒதுங்கி - மனசுக்குள் ஒடுங்கி வாழ்ந்தார் அவர்.

இன்று சபேச குருக்கள் வேறு கோணத்து வெறுப்பின் எல்லையில் நின்று, 'நீங்கதான் ஜெயிச்சுட்டீங்க' என்றதும் சுருக் கென்று தைத்த முள்ளின் முனை படக்கென்று ஒடிந்து உள்ளேயே நொறுங்குவது போல் உணர்ந்து தவிக்க லானார்.

அடுத்த விநாடியே அழ கரசன், "சாமி! கோவப்படா தீங்க. நீங்க இன்னிக்குக் கடைசி கடைசியா கோயிலுக்குப் போகப் போறேன்னு சொன் னீங்க. நான் முதன் முதலா இன்னிக்கு அங்க வரப் போறேன்னு சொல்லத்தான் உங்களைக் கூப்பிட்டனுப்பி னேன். நீங்க இந்த ஊரை விட்டுப் போகவே கூடாது..." என்றார்.

சபேச குருக்கள் அதிர்ந்து போனார். என்ன இது, சூரியன் மேற்கே உதிக்கிறான்!

"சுந்தரேசன்... மன்னிக் கணும் - அழகரசனாரே! நீ... நீங்க என்ன சொல்றீங்க...?"

---

உலக சாதனையை விவரிக்கும் கின்னஸ் புத்தகத்தில் ஓர் இந்திய நவரத்தினக்கல் இடம் பெற் றுள்ளது.

"உலகிலேயே மிகப் பெரிய நவரத்தினக்கல் இந்தியாவில் பெங்களூர் நகரைச் சேர்ந்த வித்யா ராஜ் என்பவரிடம் உள்ளது. அது 550 காரட் தரம் உடையது. இதற்கு முன் கின்னஸில் இடம் பெற்றிருந்த மிகப் பெரிய நவரத்தினக்கல் வாஷிங் டனில் உள்ள ஸ்மித்சோனியன் நிறுவனத்துக்குச் சொந்தமானது. அது 3.6 செ.மீ உயரமும் 4.1. செமீ விட்டமும் கொண்டது.

— ஆர்.ஆர். பூபதி



### "சந்தேகம்"

கொடுக்கிற
தெய்வம்...
கூரையை(ப்)
பிய்த்துக்கொண்டு
கொடுக்கும்
என்பதால்தானோ...
எங்கள்
தேசமெங்கிலும்
எங்கு
நோக்கிலும்...
'குடிசை' ம(ா)யம்?

–விபு.

### விதவை

விடியும்வரை
விழித்திருக்கும்
"வெள்ளை" நிலா!

–தி. ஆதிராஜன்.



### "வரதட்சணை!"

சந்தோஷ
வாழ்வுக்கு...
ஒரு–
சோக 'வரி'!

–சரோஜ் விஸ்வம்



'உண்மையே...
உன் விலை
என்ன'
என்று–
எப்போதோ கேட்டும்
ஏன்
இன்னும் அது
மௌனமாகவே
இருக்கிறது?
ஓ!
ஒருவேளை...
அதுவும்– ஒரு
பொய் சொல்ல
யோசிக்கிறதோ?

–சவி.



வஞ்சியின்
நெஞ்சில் – காதல்
விதை
விதைத்தேன்!
வளர்ந்தது
விருட்ஷமாய்...!
காதல் பயிர் அல்ல...
கருகிப் போய்க்
கோரமுள்ளாய்
என்
கன்னத்தில் தாடி!

–வி. ராஜப்பா.

"நீங்க என்னை சுந்தரேசன்னே கூப்பிடுங்க. அதுதான் எங்க அப்பா வச்ச பேர். முதல்ல உட்காருங்க. மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலய கும்பாபிஷேகம் நடந்தாகணும்... நாப்பது வருஷத்துக்கு முன்னால எங்கப்பா காலத்துல நடந்தது. புனருத்தாரண வேலைகள் நாளைக்கே துவங்கணும். அதுக்காக இன்னிக்கு கோயிலைப் பார்க்க சாமி தரிசனம் பண்ண நான் வரப்போறேன். அங்கே முதல் முதலா நீங்க குடுக்கற விபூதியை என்னோட நெற்றியில வச்சுக்கணும்னு ஆசைப்படறேன்...

"தமிழனோட கலையும் கலாசாரமும் கோயில்லதான் மையம் கொண்டிருக்குனு சொன்னவர் நீங்கள். சமுதாயத் தீமைகள்னா அதுல எல்லாருக்குமே பங்கு இருக்கு; நாம எல்லாரும் கூடி நின்றுதான் தீமைகளை ஒழிக்கப் பாடுபடணும்னு அப்பவே சொன்னீங்க. ஆதிசங்கரரும் ராமானுஜரும் சமுதாயத்துல எவ்வளவோ புரட்சிகரமான சீர்திருத்தங்களை உருவாக்கினாங்க. அது எதனால முழுவீச்சா முன்னேற முடியலே...? அதுக்கு மத்தவங்க யாருமே பொறுப்பில்லையான்னு கேட்டீங்க. அதுக்கு இன்னிவரைக்கும் எனக்குப் பதில் தெரியலே. நான் ஜெயிக்கலே சாமி... கடைசிவரை தோத்துக்கிட்டேதான் இருந்திருக்கேன். இதுக்கெல்லாம் ஒரு விடிவுகாலம் எப்ப வருமோ எனக்குத் தெரியாது. இதையெல்லாம் காலம்தான் சரிப்படுத்தனும். ஆனா, அதுக்கு முன்னால நம்ம பண்பாடு, கலாசாரம், கலைகளின் பெருமை அனைத்திற்கும் ஆதாரமான கோயில் உடைந்து சிதறாம நாம காப்பாத்தியாகணும். கோயில்தான் நம்பிக்கைகளின் நாற்றுப் பண்ணை. கோயில்தான் மிகப் பெரிய சமுதாயக்கூடம். அதை எடுத்துக் காட்டுவதுதான்எனது இப்போதைய மிகப் பெரிய இலட்சியம். எந்த ஊர் கோயில்ல விளக்கெரியாம அவிஞ்சு கிடக்கோ, அந்த ஊர்ல தமிழன் செத்துட்டான்னுதான் அர்த்தம்; தமிழன் வீடு பாழடைஞ்சு இருண்டு கிடக்குன்னுதான் அர்த்தம். இன்று நம்ம ஊர் கோயிலில் ஒரு புதிய தீபம் ஏற்றப்படுகிறது. அதை எந்த நாளும் அணையாது காப்பேன். நான் பண்ணப்போற இந்தப் புனருத்தாரண திருப்பணிக்கு ஆதர்ச பலமா நீங்க இந்த ஊர்லயே இருந்துதான் ஆகணும்..."

அழகரசன் பேசப்பேச, சபேச குருக்கள் வியந்து - விழிமலர்ந்து நின்றிருந்தார். அந்தப் புரட்சிக்குயிலின் புதிய யுக விடியலுக்கான பூபாளம் கேட்டு உளம் பூரித்துப் போனார் அவர். அமாவாசை திடீரென்று பௌர்ணமியாகி விட்டது போன்றிருந்தது அவருக்கு. புதிய நிர்மாணத்துக்கு இணையான புனருத்தாரணத் திருப்பணியில் அந்தக் கணமே தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டுவிட்ட அவர், அதோ மீனாட்சி - சுந்தரேஸ்வரர் ஆலயத்தை நோக்கி நடக்கத் துவங்கி விட்டார்.



# கராத்தே கற்கலாமா?

கதை: நாகராஜகுமார்

தேர்வுகள் முடிந்து கோடை விடுமுறை தொடங்கிய முதல் நாள் வசந்தம் காலனி, பிளாட் ஒன்றில்... சிறுவன் ஒருவன் வெயிலில் காய வைத்திருந்த மாங்காய் கீற்று களை ஒவ்வொன் றாய் எடுத்து வெளிப்பக்கமாய் வீசி எறிகிறான்.

சித்திரம்: செல்லம்








































யாராவது சொல்லுங்க
கராத்தே கத்துக்கலாம்


யாரு கத்து தருவாங்க?
நான் தான்


நீங்களா? இந்த உடம்பை வச்சிக்கிட்டா?


ஏதோ ஒண்ணு செய்யுங்க ஸார். பொடி சுங்க தொல்லை இல்லாம இருந்தா சரி


அடுத்த நாள்
கராத்தேன்னா என்னன்னு தெரியுமா?
சொல்லு பார்ப்போம்


தெரியும்
செங்கல்லை கையால உடைக்கிறது


அது இல்லே கராத்தே. கராத்தேன்னா...
அதுதான் கராத்தே. நீங்க டி.வி. சினிமா வெல்லாம் பார்க்க மாட்டீங்களா? பாருங்க... செங் கல்லை உடைச்சாத் தான் உங்களுக்குக் கராத்தே தெரியும் என்று நம்புவோம்


ஆமாம். ஆமாம்...
இதென்ன வம்பா போச்சு?


இப்போ செங்க வெல்லாம் கிடைக்காது. நாளைக்கு நீங்களே கொண்டு வாங்க உடைக்கிறேன்


எத்தனை கல்லு உடைப்பீங்க
நீங்க எத்தனை கொண்டு வந்தாலும் உடைப்போம்


நீங்களும் இதே போல நில்லுங்க

அவர் காலை இன்னும் சற்று விரித்தபடி அமர முயல...

சார் கிழிஞ்சிப் போச்சு...

பரவாயில்லை, நாளைக்குத் தச்சுக்கோ.

சார் என் பேண்ட் இல்லே. உங்க பேண்ட் தான்!

உம்... எல்லாம் ஓடுங்க ...நாளைக்குப் பார்ப்போம்

ஹா... ஹைய்... ஜாலி

மறுநாள்- காலை

ஐய்யய்யோ நான் வீடு கட்ட வாங்கி வைச்சிருந்த செங்கல்லு ஒண்ணு கூட காணோமே..

சார் கல்லைக் காணோம்.

என்ன கல்லு? வைரக் கல்லா?

செங்கல்லு சார்

நம்ம பையன் கூட ராத்திரி நாலு செங்கல்லு கொண்டு வந்தான் சார்.

எதுக்காம்?

கராத்தே கத்துத் தரப் போறவர் செங்கல்லை உடைச்சுக் காட்டினாதான் கராத்தே கத்துப்பாங்களாம்

கூப்பிடய்யா கராத்தே சொல்லி தார ஆளை...

கையில் கட்டுடன் குண்டு மனிதர் வருகிறார்

என்ன இது கையிலே கட்டு?

நேத்து பசங்க செங்கல்லு உடைச்சாதான் எனக்குக் கராத்தே தெரியும்னு ஒத்துப்பாங்களாம். எனக்கு கராத்தேவும் தெரியாது. கல்லு உடைக்கவும் தெரியாது. எங்கண்ணன் டிரஸ்ஸைப் போட்டுட்டு ஜம்பமா வந்தாச்சு. பொடிசுங்க நம்மை மதிக்காம போயிடுமேன்னு வீட்டிலே உண்மையிலே உடைச்சுப் பார்த்தேன். கல்லு உடையலே, கைதான் உடைஞ்சது

அப்போ என் செங்கல்லு?

நான் கல்லு உடைச்சுக் காண்பிக்கணும்னு ஆளாளுக்கும் கொண்டு போய் இருப்பாங்க

உனக்கேன்யா முடியாத வேலையெல்லாம்?

நாளைக்கு உடைக்கத்தான் போறேன் இந்த இன்னொரு கையிருக்கே. வந்து பாருங்க, 'ஏக் மார் தோ துக்டா.'

அடுத்த நாள்... இடது கையால் ஓங்கி அடிக்க செங்கல் துண்டாகி விழுகிறது...

எப்படிய்யா? வலது கையால முடியாததை இடது கையால உடைச்சீரு?

அப்ப மூளை வேலை செய்யலை. இப்ப செய்தது. ராத்திரியே தரையிலே உடைச்சு, லேசா ஒட்டி வைச்சு... ஒரே தட்டு! எப்டி?

முற்றும்....

# பட்டீச்சரம் பட்டீசுவரர்

**அறிமுகம்**

சோறுடைய சோழநாட்டில் கும்பகோணத் திற்குத் தென்மேற்கில் ஏழாவது கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள ஊர், பட்டீச்சரம்.

வான்பொய்ப்பினும் தான் பொய்யா காவிரி நதிக்கரையின் தென் பகுதியில் உள்ள நூற்று இருபத்து ஏழு திருக்கோயில்களுள் இருபத்து மூன்றாவது திருத்தலம், இது.

**தொன்மைச் சிறப்பு**

பட்டீச்சரம், பழையாறை என்னும் மாபெரும் நகரத்தின் ஒரு பகுதியாக விளங்கிய மழபாடி யில் இருந்தது.

முதலாம் மகேந்திரவர்மன் (கி.பி. 600-630) காலத்தில் வாழ்ந்த திருநாவுக்கரசர் பழை யாறை நகரில் இருந்த 'வடதளி'க் கோயிலைப் பாடியுள்ளார்.

பல்லவப் பேரரசன் இராசசிம்மன் (கி.பி. 685-705) காலத்தில் வாழ்ந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள், பழையாறையின் மேற்கில் அமைந் திருந்த 'ஆறைமேற்றளி'யை வைப்புத்தலமாகப் பாடியுள்ளார்.

பழையாறையின் மற்றொரு பெயர் நந்திபுரம். மூன்றாம் நந்திவர்மன் பழையாறையில் பல போர்கள் நடத்திப் பெரும் வெற்றி பெற்றான். இதனை நந்திக்கலம்பகம்,

"பாடிய நாவலரோ வேந்தரோ பல்புரவிப்
பீடியல் மாகளிற்றார் பிச்சத்தார் - கூடார்
படையாறு சாயப் பழையாறு வென்றான்
கடையாறு போந்தார் கலந்து"

என்று பாராட்டும்.

தாமரைக் கண்ணன்

சித்திரம்:
'சில்பி'






இரண்டாம் நந்திவர்மன் (கி.பி. 710-715) காலத்தில் வாழ்ந்த திருமங்கையாழ்வார் இங்குள்ள நாதன் கோயில் விண்ணகரத்தை மங்களாசாசனம் செய்துள்ளார். இரண்டாம் நந்திவர்மன், பழையாறையில் இருந்த நந்திபுரக் கோட்டையில் தங்கி இருந்தான்.

இவ்வாறு பல்லவர் காலத்தில் பல்வேறு சிறப்புகளைப் பெற்றிருந்த பழையாறை மாநகரம், ' சோழப் பேரரசர்களாகிய முதற் பராந்தகன் (கி.பி. 907 – 953), இரண்டாம் பராந்தகன் (கி.பி.957 – 970), உத்தமசோழன் (கி.பி. 970 – 985), முதலாம் இராசராசன் (கி.பி. 985 – 1014) ஆகியோர் ஆட்சிகளில் தனிப்பெருஞ் சிறப்பைப் பெற்றுச் சிறந்த தலைநகரமாக விளங்கியது. சோழப் பேரரசர்கள் இந்நகரில் முடிசூடிக் கொண்டதால், 'முடிகொண்ட சோழபுரம்' என்ற பெயரையும் பழையாறை பெற்றிருந்தது.

ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்தர், தொண்டர் குழாத்துடன், முத்துப் பந்தலின் கீழ் திருப்பட்டீச்சரம் சென்றதை,

"சென்று அணைந்து திருவாயில் புறத்து இறைஞ்சி உள்புக்கு
வென்றிவிடை யவர்கோயில் வலம்கொண்டு வெண்கோட்டுப்
பன்றிகிளைத்து அறியாத பாததாமரை கண்டு
முன்தொழுது விரைந்து எழுந்து மொழிமாலை போற்றி இசைத்தார்"

என்று சேக்கிழார் பெருமான் கூறுகிறார்.

தற்போது பழையாறை மாநகரம் பல்சிற்றூர்களாகப் பிரிந்து காணப்படுகிறது. அவற்றுள் ஒன்றே, பட்டீச்சரம். தேவி தவம் செய்ததால் தேவி வனம், சக்தி வனம் என்றும் இத் தலத்திற்குப் பெயர்கள் உண்டு.

### பட்டீசுவரர் திருக்கோயில்

பட்டீச்சரத்திற்குச் சிறப்புச் சேர்ப்பது, பட்டீசுவரர் திருக்கோயில் ஆகும்.

மதிற்சுவருடன் நான்கு கோபுரங்கள் அணி செய்ய கோயில் அழகுடன் காட்சியளிக்கிறது. கோயிலுக்குள்ளேயே திருக்குளம் அமைந்துள்ளது.

மூன்று திருச்சுற்றுகள். முதல் திருச்சுற்றில் சோமாஸ்கந்தர், ஞானசம்பந்தர் ஆகியோர் உள்ளனர். எழுகன்னியர், பொன் விநாயகர், மகாலிங்கர், அறுமுகன், இராமலிங்கர், இலட்சுமி ஆகியோர் சிறு கோயில்களும் உள்ளன. உண்ணாழிகைக்குத் தெற்கே அறுமுகன் நின்ற திருக்கோலத்தில் வள்ளி, தெய்வயானையுடன் காட்சியளிக்கிறார்.

இக்கோயிலில் சுவாமிக்கு நேராக இருக்க வேண்டிய நந்தி சற்று விலகியிருக்கிறது.

இறைவன் சிவலிங்கத் திருமேனியைக் கொண்டவர். பட்டீசுவரர், தேனுபுரீசுவரர் என்ற திருப்பெயர்களை உடையவர்.

இவ் இறைவனைத் திருஞானசம்பந்தர்,

"பிறவிபிணி மூப்பினொரு நீங்கி இமை
யோர்உலகு பேணல் உறுவார்
துறவினும் உள்ளம்உடை யார்கள்கொடி
வீதியழகு ஆய தொகுசீர்
இறைவன்உறை பட்டீசரம் ஏத்திஎழு
வார்கஞ்வினை ஏதும் இலவாய்
நறவவிரை யாலும்மொழி யாலும்வழி
பாடுமற வாத அவரே"

என்று தம் திருப்பதிகத்தால் போற்றுகிறார்.

## பல்வளை நாயகி

அன்னையின் அழகிய பெயர், பல்வளை நாயகி. ஞானாம்பிகை என்றும் அழைப்பர். மகாமண்டபம் அர்த்த மண்டபம் கூடிய தனிக் கோயிலில் உள்ளாள்.

## கொற்றவை

இக்கோயிலின் வடக்கே உள்ள தனிக் கோயிலில் கொற்றவை நின்ற திருக்கோலம் பூண்டுள்ளாள். மகிஷாசுரன் தலைமீது நிற்கும் அவள் எட்டுத் திருக்கைகளிலும் சங்கு, சக்கரம், சூலம், வில், அங்குசம் போன்ற ஆயுதங்களை ஏந்தியுள்ளாள். பெரும் புகழ் பெற்ற இவள் பக்தர்களுக்கு அருள் பாலிப்பதில் வல்லமை படைத்தவள்.

இவளை சோழ அரசர்களின் காவல் தெய்வம் எனப் போற்றுகின்றனர்.

## கோடி தீர்த்தம்

இக்கோயிலில் உள்ள கிணறு, இராமபிரான் தன் அம்பு முனையால் உண்டாக்கியது என்கின்றனர். இக்கிணற்றுக்குக் கோடி தீர்த்தம் என்று பெயர்.

தனுஷ்கோடிக்குச் சென்று கடலில் மூழ்க முடியாதவர்கள், இக்கிணற்றில் மார்கழித் திங்கள் அமைவாசையின்போது நீராடினால் பெரும் புண்ணியம் பெறுவர்.

## நீராடு துறைகள்

இங்கு ஐந்து நீராடு துறைகள் உள்ளன. அவற்றுக்கு ஞானவாவி, கோடி தீர்த்தம், தபசு கேணி, தெப்பக்குளம், காயத்ரி குளம் என்று பெயர்.

அவற்றுள் நீராடினால் நினைத்த செயல் கைகூடும், பிள்ளைப் பேறு உண்டாகும் என்ற நம்பிக்கை உள்ளது.

## தலத் தருவும் தல புராணமும்

கோயிலின் தலத்தரு, வன்னிமரம்.

வாலியைக் கொன்ற பாவத்தைப் போக்க இராமன் இவ் இறைவனை வணங்கியதாகவும் மார்க்கண்டேயனும் வழிபட்டதாகவும் தல புராணம் கூறுகிறது.

## வரலாற்றுச் செய்திகள்

பல்லவர் காலம், சோழர் காலம் ஆகிய வற்றில் மிகப் பெரிய புகழ் பெற்றிருந்த





இத்தலத்தில் அவர்களுடைய கல்வெட்டுகள் ஏதுமில்லை. காரணம், அவ்வப்போது நடை பெற்று வந்த கோயில் திருப்பணிகளால் அவை அழிந்துபட்டிருக்கலாம்.

தற்போது, மூன்று வடமொழிக் கல்வெட்டு களும் இரண்டு தமிழ்க் கல்வெட்டுகளும் அடங்க மொத்தம் எட்டுக் கல்வெட்டுகள் படி யெடுக்கப்பட்டுள்ளன.

இராசாதிராச பரமேஸ்வரர் திருக்குளமும் திருமண்டபமும் கட்டித் திருப்பூசைக்கு நாலுமா முக்காணி நிலம் விட்டதாக ஒரு கல்வெட்டு கூறுகிறது. இவன் எந்த இராசாதிராசன் என்பது தெரியவில்லை.

கி.பி. 1269 ஆம் ஆண்டு (வெகுதான்ய ஆண்டு விருச்சிக மாதம் சுக்லபட்சத்து துவிதியை யும் ஆதிவாரமும் பெற்ற திரிவோணத்து நாளில்) கோயில் திருக்குளமும் மண்டபமும் கட்டியதாக ஒரு குறிப்பு கூறுகிறது.

வீரப்பிரதாப தேவராயர் கி.பி. 1415 இல் இக் கோயிலைக் கட்டி ஒன்பதரை வேலி நிலம் கொடுத்துள்ளார்.

வசிட்ட கோத்திரத்தைச் சார்ந்த கோனேரிப் பட்டனின் திருமகன் வேங்கட தீட்சதர் கோயிலுக்கு கி.பி. 1602 இல் கொடையளித்தார்.

இவ்வூரில் திருஞானசம்பந்தன் மடம், திருநாவுக்கரசன் மடம், திருமூல தேவன் மடம் ஆகிய மூன்று மடங்கள் இருந்ததாக ஒரு கல்வெட்டு கூறுகிறது.

## கி.பி. 1634 இல் ஒரு வழக்கு

கி.பி. 1634 ஆம் ஆண்டு (பவ ஆண்டு ஆனித் திங்கள்) (இரகுநாத) நாயக்கர் ஆட்சியின்போது வழக்கு ஒன்று சபைக்கு வந்தது. பட்டீச்சரம் இறைவனுக்கு நடைபெறும் திருக்கல்யாண விழாவில் வெற்றிலைப் பாக்கு (தாம்பூலம்) பெறுவதில் முன்னுரிமை யாருக்கு என்பதில் பட்டீச்சரத்தில் வாழ்ந்த பட்டு நூல் செட்டிமார்களிடையே போட்டி ஏற்பட்டு வழக்கு நடந்தது.

ஐந்து பணம் மதிப்புள்ள புடைவையும் 30 பாக்கு 10 வெற்றிலை ஆகியவற்றைத் தருவோர் விழாவின்போது முதல் தாம்பூலம் பெறலாம் என்று தீர்ப்பு வழங்கப்பெற்றதைச் செட்டி மார்கள் ஏற்றனர்.

## நிறைவுரை

திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் 'திருப்பழசைப் பதிற்றுப் பத்தந்தாதி' பாடி பட்டீசுவரரைப் போற்றியுள்ளார். நாமும் அதில் ஒரு பாடலைப் பாடி இறைவன் அருளைப் பெறலாம்.

**வேண்டு நந்திநீ விலகு எனச்சொனாய்**
**பூண்ட அன்புடைப் புகலி வள்ளற்கா**
**மூண்ட வெவ்வினை விலக முன்னிநும்**
**மீண்டும் வேன்அருள் பழசை எந்தையே!**



# சூரியம்

டாக்டர் கோவி மணிசேகரன்



## (36)

ஏ, அணிமாவே,
நீ யார்?
மகிமாவே, உனது
மகிமைதான் என்ன?
லகிமா கரிமா
பிராத்தியம் பிரகாமியம்
ஈசத்துவம் வசித்துவம்
நீங்கள்
எங்கிருந்து உதயமாகி
இங்குவந்து சேர்ந்தீர்கள்?
எவர் சிருஷ்டித்த கற்பனை?

அட்டமாதி சித்துகளை
இந்நாளில்
அடிவயிற்றில் வைத்திருப்பவன்
எவன்?
இருப்பின் இனம் காட்டுக!
அவன்,
இறப்பின்றி இருக்க வேண்டுமே!
முதுமையை ஒத்திப்போடவாவது
முடியாத மனிதன்
முழுப்பூசணிக்காயை உள்ளங்கையில்
மறைக்க முயலுவதா?

அணுவாய் உடலைப் பிரித்து
ஆகாயத்தில் பயணம் செய்து
மீண்டும்
பூமிக்கு வரும்
புருஷோத்தமன் யார்?
சொல் சூரியனே!

## (37)

ஆதித்திய,
அந்நாளில் எவரேனும்
ஒரு வேளை
அணுவில் புகுந்து
அலைகளில் வெளிப்பட்டு
மலைகளில் நுழைந்து
மகத்துவம் செய்தனரோ?
பதுமன் கதை
படிக்கச் சுவைதான்!
அந்த எழுத்தாளனின்
கற்பனைக்காலை வணங்குகிறேன்.
முதுமையை மரணத்தை வெல்ல
முடியாதவன் சித்தனல்ல.
அவன்
உடலை நீக்கி உயிருடன்
உலவுகிறான் என்றால்
இது ஓர்
உற்சாகமான பொய்!
ஜோதியில் மறைந்தான்
என்பதும்
ஆரோக்கியமான கற்பனை!

இந்த மண்ணில்
கர்மமுண்டு; ஞானமுண்டு;
கவின்மிக்க தியானமுண்டு.
இவற்றுக்கு மேலே
முற்றும் உணர்ந்தொழுகும்
முக்தமுண்டு.

தெய்வம் என்ற சொல்லே
இந்தத்
திருவடிகளில் உதயமானது.
இவன்தான்
அறவாழி அந்தணனோ?

இறவாப் புகழுடைப்
பிறவாயாக்கைப் பெரியோனே,
உன்னை ஒரு வரம் கேட்பேன்;
ஒப்புடன் முகமலர்வாய்!

முதுமையை வெல்ல
முடியாது; எனினும்
தள்ளிப்போடக் கேட்டேன்
தந்திருக்கிறாய்!

## (38)

மரணம் என்பது
மண்டையோட்டு வாசகம்!
எனது புகழுக்கு மரணமில்லை;
அது நீ
எனக்குத் தந்துவிட்ட சாசனம்!

இறைவ,
நான் கேட்கும் வரம்
மரணம்
நான் கேட்க அது வரட்டும்.
கேட்பேன்;
உறக்கத்தில் அது நிகழ்வது
உத்தமம்.

இன்று நான்
அகவை அறுபத்தேழில்
அடியெடுத்து வைக்கிறேன்.
வரம்கொடுத்து வாழ்த்து!

ஓயாமல் உன்னை
ஓதிவரும் எனக்கு
எழுதும் பணிகள் எத்தனையோ!

அதோ,
ஆதித்திய இதயம் ஒலிக்கிறது.
அது
என் இதயத்தே
எதிரொலிக்கிறது!
ஓ......
வரத்தை வழங்கினை!
வணங்குகிறேன்; வாழ்த்துகிறேன்!

## (39)

வழிபடு மந்திரங்களில்
காயத்திரி
வலிது என்பர்; இருக்கலாம்.
மந்திரமென்பதே
மனவொருங்கிணைப்புப் பயிற்சி.
அதிலும் மேலானது
ஆழ்நிலைத் தியானம்.

கதிரொளியே!
காயத்திரி மந்திரத்துக்
கதாநாயகன் நீ என்பதால்
நெஞ்சுள் ஒரு நெருடல்.

நவக்கிரக நாயக,
இவற்றுக்கும் நீயே
நடுவன்!
என்னுள் பெருமை
நந்தவனமாய் விரிகிறது!

நீ
அண்டத்து நாயகன்!
உனது
அளப்பரிய அளவுகோல் முன்
எது நிற்கும்? எது நிலைக்கும்?
கோடான கோடித் தொலைவில்
உனது அக்கினி சாம்ராஜ்யம்
கொடிகட்டிப் பறக்கிறது.

அது
இறக்க முடியாத கொடி;
இழித்துப் பேசமுடியாத கொடி!
அதுவே எனது கொடி!
தூரியக்கொடி!

## (40)

என் தந்தையே,
'வெற்றிக்கு வேந்தன்'
என்றுன்னை
யஜுர் சொல்லுகிறது.

'நலம் நல்க; பகைமை நீங்குக;
தொல்லை தரும் துன்பம் தொலைக!
தீவினை நீக்கி நல்வினை நல்குக!'
என்று
சாமம் சாற்றுகிறது.

கொல்லும் இதய நோய்க்கும்
கொடிய காமாலைக்கும்
அரிய உனது மந்திரத்தை
அதர்வம் பகருகிறது.

அதோ,
பொன்னாய்ப் புலர்ந்துவரும்
உன்னைக்கண்டு
பொன்னனைய வேதம் —
இல்லாள்
கண்மூடி உன்னைத் தியானிக்கிறாள்
கணவன் பற்றைத் தவிர
எந்தப் பற்றும் இல்லாள்!
எட்டுப் பிள்ளைகளின் தாய்!
இன்றளவில்,
பத்துப் பேரப்பிள்ளைகளின் பாட்டி!
ஒரு பெயரனுக்கு மட்டும்
உனது பெயர்; தூரியன்!
அவன் சொல்வான்:
'வேதங்களில் சிறந்தது
சாமவேதம்!
கோள்களில் சிறந்தது
தூரியக் கோள்! — எழுது
கோல்களில் சிறந்தது
உங்கள் செங்கோல்!'

பாவம் அவன்!
காக்கைக்கும் தன்னினை
பொன்னினை!

## (41)

பிரபஞ்ச பிதாவே!
நீண்ட நெடுங்காலமாக
நிழலற்ற உனது நிழலில்
களைப்பாறிக் கற்பனை செய்த
கதைகள் பல.
ஊர்வசியைக் காதலித்தாயாமே!
உண்மைதானா பிரபோ?
ஆ!
இனிமையான இம்சை!

உங்கள் இருவர் உரசலில்
அகத்தியரும் வசிட்டரும்
அவதரித்தார்களாமே!
ஓ.....
உற்சாகமான உபத்திரவம்!

ஆயினும்
அகத்தியரும் வசிட்டரும்
என்போன்று
தூரியம் கண்ட சுந்தரர்கள்.
விதங்கள்தாம் வெவ்வேறு!

நீ
எங்கு பிறந்தாய்?
எவ்விதம் பிறந்தாய்?
விஞ்ஞானமே வியக்கிறது.
ஆயினும் நீ
காசிப முனிவரும் அதிதியும்
பேசிப் பிறந்த பிம்பமாமே!
கவலையுறா கற்பனைதான்!
கற்பிதம் செய்தவர்களின்
கழலைப் பணிகிறேன்.
கற்பனை இல்லையேல்
பிரபஞ்சம் இல்லை.



## (42)

தெய்மே,
நாட்டுக்கு நாடு
மொழிக்கு மொழி
தெய்வங்கள் வேறுபட்டுத்
திருவிளையாடல் நிகழ்த்துகின்றன.

மதம் கண்ட மனிதர் சிலர்
மாமனிதராக மாறுவதற்கு
மாறாகத்
தெய்வ மாயினர்;
கோயில் கொண்டனர்.
அவர்வழி வந்தவர்கள்
அவர்கள்மீது
மலைமலையாய்க் கதைகட்டி
மாலைகளாய் அணிவித்தனர்.
இது ஒரு
மன்னிக்கத்தக்க மகா கற்பனை!

நீ
பிரபஞ்சத்தைப் படைத்தனை;
பிராணவாயுவை உண்டுபண்ணினை!
பிரணவம் என்பது பிராணனோ?
மனிதனோ?

மனிதன் இதனை மறந்து
தெய்வங்களைப் படைத்தான்;
உன்னை மறந்தான்,
தன்னையும் மறந்தான்!
மனிதன் இல்லாத
இடம் இருக்கலாம்;
நீ இல்லாத
இடம் ஏது?
இறைவ,
இயம்புக!

# (43)

என் ஆத்மாவே
புலரியத்தில் உனது புன்னகையைப்
பூரணமாய்த் தரிசிக்கிறபோது
நானே என்னுள் பரமாத்வாக
நம்பித் தியானிக்கிறேன்!

உனது செம்மை மாறியதும்
மீண்டும் நான்
ஜீவாத்மாவாகிச் சிந்திக்கிறேன்!
ஆயினும்
மாலைச் செம்மை என்னை
மயக்கி
இரண்டு ஆத்மாக்களாக்காமல்
இரண்டையும் ஒன்றாக்குகிறது.
இது ஒருவித அத்வைதமா?
அல்லது
இதுவே அத்வைதமா?

இறைவனொடு மனிதன்
இரண்டறக் கலப்பது
அத்வைதம்!
மனிதனொடு இறைவன்
இரண்டறக் கலப்பதும்
அத்வைதம் ஆகாதோ?

என் ஜோதியே!
மனிதனுள்ளேயே மகத்துவமான
இரு
ஆத்மாக்கள் அடங்கிக் கிடக்கின்றன.
அந்த ஜீவ, பரமாத்மாக்கள்
சங்கமிக்கும் எனில்
சுழிமுனையில் ஜோதி தெரியும்!
எனக்கு
ஆதி தெரிகிறது!
அந்தம் புரியவில்லை.

# (44)

புரியாத ஒன்றை
தெரியாத ஒன்றை
பூரணனே
எப்போதும் நான் நேசிப்பதில்லை.
புரிந்து தெரிந்த ஒன்றுக்கே
எத்தனையோ ஐயங்கள்!

நீ
தலைவாசலைத் தொடுகிறபோது
தலைவணங்குகிறேன்!
புறக்கடையில் மறைகிறபோது
ஐயம் அடைகிறேன்!
ஐயம் எனது பிச்சையென்றால்
ஐயத்தின் அர்த்தத்துக்காக
'ஐயம்' கேட்கிறேன்!

என் ஐயனே,
ஐயம் இடுபவன் மட்டுமல்ல



ஐயம் தீர்ப்பவனும் நீ!
சிலரை
ஐய, என்கிறோம்!
ஐயரே, என்கிறோம்!
ஐயய்ய, என
அதுயைப் படவும் செய்கிறோம்!

ஐயய்ய,
இது எனக்குப் புரியவில்லையே!

ஐய,
தமிழில் எனக்குப் பிடித்த எழுத்து
ஐ!
வேற்றுமையில் ஒற்றுமை காணும்
வியாகரணக் கிளவி.
இன்று அது
மறைந்துபட்டு வருவது
மன்னிக்கமுடியாத விபத்து!

# (45)

எனது
பிங்கலை இடகலையறிவேன்.
இவை
எவரும் அறிந்த மூச்சின்
இயக்கங்கள்!

திங்கள், புதன், வெள்ளியில்
பிங்கலைப் பேசும்!
இதுவே
உனது உன்னத இயக்கம்!
ஏனைய நாட்கள்
இருளின் அமுத நிலை!'
நீ பேரின்பம்;
நிலா சிற்றின்பம்!
இன்பத்தில் இரண்டு நிலை
இதில்
எனக்குச் சம்மதமில்லை!

கலைகள் இரண்டினுக்கும்
நடுவே
சுழிநிலை சுகம்பாடுகிறது.
இன்பத்தில் இரண்டு நிலை
எனக்குச் சம்மதமில்லை.

சுழிமுனைக்கும் குண்டலினிக்கும்
சுருக்குப் போடுவது போல!
முதுகுத் தண்டில் ஏணிவைத்து
முடிச்சு போடுகிறபோது
எட்டிப் பார்ப்பது
குண்டலியல்ல; சுண்டெலி!
சுண்டெலி இல்லையேல்
குண்டலி ஏது?

இன்பத்தில் இரண்டு நிலை
எனக்குச் சம்மதமில்லை.

இரண்டும் ஒன்றானால்
அதுவே ஒருவித
அத்வைதம்!

# வானமெல்லாம் ஆசைக் காற்றாடி

ரூ.10,000ம் பரிசு பெற்ற நாவல்

## 11

## பி.வி.ஆர்.

சந்திரா நகர்.

அகலமான ஒரு வீதி.

வீதியில் தள்ளித் தள்ளிக் கட்டப்பட்டிருந்த பல பங்களாக்கள்.

தேவகியின் வீடு உள்ளடங்கி நின்றது. காம்பவுண்டு கேட்டிலிருந்து வீட்டு போர்ட்டிகோவுக்கு நடந்து சென்றால் குறைந்தது ஐந்து நிமிடங்களாவது ஆகும். கிட்டத்தட்ட அரை கிலோ மீட்டர் இருக்கும் என்று பாரதி நினைத்தாள். எட்டடி அகலமான காங்க்ரீட் பாதை வளைந்து வளைந்து சென்றது. இருமருங்கிலும் பூச்செடிகள், பற்பல விதமான பூக்களைச் சுமந்து ஆரவாரித்தன. வீட்டின் முன்னால் ஒரு சிறு நந்தவனம். புல் தரை வெல்வெட் போல வழவழப்பாகக்காட்சி அளிக்க, நான்கு சிமெண்ட் பெஞ்சுகள் சீராக வைக்கப்பட்டிருந்தன.

மாருதியை போர்ட்டிகோவில் நிறுத்திவிட்டு, "கம் ஆன் பாரதி!" என்றாள், தேவகி.

"எல்லாமே பிரமாதமா இருக்கு".

"பணம் இருந்தா என்ன வேணும்னாலும் செய்துக்கலாம். இப்ப மொதல்ல ஜில்லுன்னு கூல்டிரிங்க் சாப்பிடறோம். உனக்கு என்ன பிடிக்கும். ஆப்பிள், மாங்கோ, டொமேட்டோ... ஆர்லைம்?"

"எதானாலும் ஒகே".

"எல்லாம் வீட்ல ரெடி பண்ணினது"

"யாரு அம்மாவா?"

"அம்மாவா?" தேவகி சிரித்தாள். பிறகு "நோ மதர்".

"ஐ'ஆம் ஸாரி தேவகி".

"பட் ஐ'ம் நாட் ஸாரி".

தேவகி சொல்லும் வார்த்தைகளுக்கு அர்த்தம் புரியாமல் பாரதி விழித்தாள்.

"என்னைப் பெத்துப் போட்டுட்டு அம்மா யாரோ ஒருவனோட ஓடிப் போயிட்டா. அந்த யாரோ ஒருவன் என் அப்பாகிட்ட வேலை பார்த்தவன்!"

"ஓ, மை காட்".

"ஓர் ஆம்பிளை பொண்டாட்டியைவிட்டு இன்னொருத்தியோட ஓடிப்போனா அது நியூஸ் இல்லை. பாரதி, ஒரு பொண் புருஷனை விட்டு இன்னொருத்தனோடு சொல்லாமக்கொள்ளாம பணத்தையும் வாரிச் சுருட்டிக் கொண்டு ஓடினாத்தான் நியூஸ். இப்படிப்பட்ட நியூஸை என்னைச் சுமந்தவ இந்த உலகத்துக்குக் கொடுத்திருக்கா..."

"நாம வேற ஏதாவது பேசுவோம் தேவகி!"

"சில உண்மைகள் கசப்பா இருக்கு இல்லே... எனக்கு ஒரு வயசு நடக்கறப்ப அவ போனா, கொஞ்ச நாள் அப்பா இடிஞ்சு போய் என்ன செய்யறதுன்னு தவிச்சார். ஆனா நான் ஒருத்தி இருக்கேனே? வளர்த்தியாகணுமே? அப்புறம் என்ன, யார் யாரோ தந்த பால்லே எல்லாம் வளர்ந்தேன். அப்புறம் க்ளாஸ்கோ, அமுல்..."

"அப்பா..."

"எல்லாத்தையும் மறக்கச்சில பேர் குடிப்பாங்க. சிலபேர் போகப்படாத இடத்துக்குப் போய் வெறியைத்தீர்த்துப்பாங்க. ஆனா எங்கப்பா வியாபாரத்தில தீவிரமா இறங்கினார். அவருக்கு மதுப்பழக்கம் உண்டுதான். ஏன் நான்கூட ஒயின், ஷாம்பெயின், பீர் எல்லாம் குடிச்சிருக்கேன். நானும் அப்பாவுமா சேர்ந்து உட்கார்ந்தே குடிச்சிருக்கோம். ஆனா அவர் என்னிக்கும் தன் சோகத்தை மறக்கக் குடிக்கலே... இதெல்லாம் இப்ப ஏன் சொல்றேன்னா, நீ என் சிநேகிதியா வருவேன்னு எனக்குத் தோன்றது. என் வரலாறு என்னன்னு உனக்குத் தெரியணும்னும் நினைச்சேன்".

"ஜீஸஸ்!"

"ஓ, நீ திகைச்சு மாத்தரே இல்லே?"

"ஒரு நாயர் பொண்ணா இருந்துக்கிட்டு எப்படி உன்னால இவ்வளவு நன்னாத் தமிழ் பேச முடியறது."

"அதான் நேத்தே சொன்னேனே. கோய முத்தூர்ல இருந்திருக்கேன்னு" என்ற தேவகி ஃப்ரிஜ்ஜுக்குச் சென்றாள்.

இரண்டு கண்ணாடித் தம்ளருடன் திரும்பி வருகையில்

"நீ ஹாட் ட்ரிங்க்ஸ் சாப்பிட்டதுண்டா?"

"ரெண்டு மூனு வாட்டி பீர் குடிச்சிருக்கேன். அதன் வாடை பிடிக்கலே. மத்த ஸ்டுடண்ட் ஸோட பார்ட்டிக்குப் போனா நிச்சயமா ஒயினோ பீரோ இருக்கும்".

"உனக்காகச் சாப்பிடணும்னு தோணி யிருக்கா!"

"இல்லை".

"ஜூஸ் நன்னா இருக்கா?

"எக்ஸலண்ட்".

"சீசனுக்குத் தகுந்தாற்போல ஜூஸ் தயார் செய்வேன்".

"என்ன, தயார் செய்வியா?"

"ஆமாம்; ஏன்?" என்ற தேவகி சிரித்துக் கொண்டே "வீட்ல சமைக்கலாம்னா ஜூஸ் தயார் செய்யக் கூடாதா?" என்றாள்.

"சமையலா, நீதான் செய்யறியா?"

"வீட்டைக் காவல் காக்க எனக்குத் தைரியம் பத்தாது. அதனால வாட்ச்மேன். வீடு முழுதும் பெருக்கி மொழுகி, கண்ணாடி ஜன்னல்களைத் துடைத்து அவ்வப்போது கர்ட்டன்களை மாத்த என் உடம்பில சக்தி இல்லை. அதனால ரெண்டு வேலைக்காரிகள் அவசியம். ஆனா சமையல்? ஒருத்திக்குச் சமைச்சுப் போட எதுக்கு ஆள்?" சொல்லி விட்டு தேவகி சிரித்தாள்.

"நீ ஒரு காரெக்டர்".

"நம்மால எதெல்லாம் சாத்தியமோ அதை யெல்லாம் நாமதான் செய்துக்கணும். இது நான் என் அப்பாகிட்ட கத்துக்கிட்ட பாடம்".

"அப்பா இங்கே வர்றதுண்டா!"

## இதய பலம் தரும் தேன்

தேன் இயற்கை அளித்த இல்லந்தோறும் இருக்கவேண் டிய உணவு. எழுபது வகை யான உடலுக்கு ஏற்ற சத்து களும், விட்டமின்களும் தேனில் உண்டு. தேனில் உள்ள சத்துகள் சீரணப் பாதையில் சுலபமாக கிரகிக்கப்பட்டு விடு கிறது. மேலும் தேனீக்கள் எந்தச் செடியிலிருந்து தேனைச் சேகரித்ததோ அந்தச் செடியின் மருத்துவ குணத்தை அது பெற்று விடுகிறது. நோய் நீக்கும் மருந்தாக உயர்ந்த உணவாக தேன் உள்ளது.



சித்தர் நூற்களில் பித்தம், வாந்தி, கப சம்பந்தமான நோய்கள், வாயுத்தொல்லை, இரத்தத்தில் உள்ள குற்றங் களை நீக்கி சுத்தம் செய்ய வல்லது தேன் என்று கூறப்பட் டுள்ளது.

கொம்புத்தேன், மலைத் தேன், மரப்பொந்துத்தேன், மனைத்தேன், புற்றுத்தேன், புதியதேன், பழையதேன் என ஏழு தேன் வகைகளையும், அவற்றின் மருத்துவ குணங் களையும் சித்தர்கள் குறிப் பிட்டுள்ளனர். மூலிகைகள், மரங்கள், செடி கொடிகள் வளர்ந்து நிரம்பிய உயர்ந்த மலையிலிருந்து சேகரிக்கப் படும் மலைத்தேனில் மூலிகை யின் மருத்துவக்குணமும் சேர்ந்து இருக்கும். இத்தேனை மருந்துடன் சேர்த்து உண்ணும் அனுபானத்திற்குச் சிறந்ததாக விளங்குகிறது.

மருந்துகளைத் தேன் கலந்து கொடுப்பதால் சீரணப் பாதை யில் வெகுசீக்கிரமாக மருந்து உறிஞ்சப்பட்டுவிடும். இரத்த ஓட்டத்தில் மருந்து விரைவில் செயல்புரியும். மருந்தின் வீரியம் குறையாமல் மருந் தால் வயிறு குடல்களுக்கு ஏற்படும் பின்விளைவுகளை (SIDE EFFECTS) தேன் தடுத்து நிறுத்தும். தேன் சேர்த்து தயா ரித்த மருந்துகள் நீண்டநாள் கெடாமல் இருக்கும். மருந்தின் வீரியமும் கெடுவதில்லை. இந்திய மருத்துவ முறைகளில் தேன் அதிகமாகப்பயன்படுத்தப் படுகிறது.

சிறியவர் முதல் பெரியவர் வரை பொருந்தும் உணவு மருந்துத் தேன். தேனில் எளிமையாக சீரணமாகும் சர்க் கரை சத்துகள் இருப்பதால் கடும் உழைப்பாளிகள், விளை யாட்டுப் போட்டியில் ஈடுபடு வோர் இடை இடையே தேன் கலந்த பானம் பருகலாம். தேனில் உள்ள சர்க்கரைச்சத்து வாயிலும், குடலிலும் வெகு சீக்கிரத்தில் உறிஞ்சப்பட்டு விடுகிறது. இதனால் உழைப் பின் களைப்பு நீங்கும்.

தேனில் உள்ள குளுகோஸ் சத்து சிறிய இரத்த நாளங்

"எப்பவாவது. ஆனா நாள் விட்டு நாள் எங்கே இருந்தாலும் ராத்திரி ஒன்பது மணிக்கு ஃபோன்ல பேசுவார். ஒரு வாட்டி லண்டன் ஏர்போர்ட்ல இருந்தார். அப்ப நம்ப ஊர்ல ராத்திரி ஒன்பது மணி. ஏர்போர்ட்லேந்து ஃபோன் பண்ணினார்".

"அவரும் ஒரு கரெக்டர்".

"நாம எல்லாருமே காரக்டர்கள்தான் பாரதி! ஒவ்வொருத்தர்ட்டேயும் ஏதானும் ஒரு தனி அம்சம் அது நல்லதோ கெட்டதோ இருக்கும். உங்கிட்ட ஒரு தனிக் குணம் இருக்குன்னு எனக்குப் படறது".

"என்ன அது?"

"யாராவது ஏதானும் மனசை நோக அடிக்கிற மாதிரிப் பேசினா உனக்குச் சுருக்குன்னு கோபம் வரும்."

"கரெக்ட். ஆனா உனக்கு எப்படித் தெரிய வந்தது! நேத்துதான் முதல் தடவையா மீட் பண்ணியிருக்கோம்".

"நான் சில வார்த்தைகள் பேசினப்ப திடீர்னு உன் முகம் மாறிப் போச்சு".

"என்ன வார்த்தைகள்?"

"பி.எச்.டி. பண்ண முடியாதுன்னா எம்ஃபில்லுக்கே போயிருக்கப்படாது. பாதிக்கிணறு தாண்டற மாதிரி இருக்குன்னேன்".

"உண்மைதான். எனக்குச் சுருக்குன்னுதான் பட்டது".

"பி.எச்.டி பண்ணப் போறியா?"

"தீவிரமான ஆசை இருக்கு. அதே தீவிரத்தில எதிர்ப்பும் இருக்கு. நான் செய்ஞ்ச பைத்தியக்காரத்தனம் அவசரப்பட்டுக் கலியாணத்துக்குச் சம்மதிச்சதுதான்..."

"ஏன் அதுக்கு முன்னால அம்மா, அப்பா ஆட்சேபிச்சாங்களா?"

"அப்பாகிட்ட போதிய நிதி வசதி இல்லாமப் போச்சு".

"ஓகே, பாரதி. உனக்கு டாக்டரேட் வாங்கணும்ங்கற துடிப்பு இருக்கு இல்லியா?"

"ஷ்யூர்!"

"அப்புறம் என்ன செய்வே?"

"அது தெரியலே".

---

களைச் சீராக விரிவடையச் செய்து இரத்த ஓட்டத்தை சீராக்கும் திறன் படைத்தது. அதனால் இதயநோய் இதயத்தில் நுரைய பயப்படும்.

எகிப்து நாட்டில் கண்நோய், தோல் நோய் மருத்துவத்தில் தேனைப்பயன்படுத்துகிறார்கள். ரஷ்ய நாட்டின் நாட்டுப்புற மருத்துவத்தில் தேன் முக்கிய இடம் வகிக்கிறது. தேனுடன் பிற உணவுப் பொருட்கள் தானியங்களை ஊற வைத்து உண்ணும் பழக்கம் ரஷ்ய நாட்டில் இன்றும் வழக்கத்திலுள்ளது.

தேனுடன் இஞ்சி, விதை நீக்கிய பேரிச்சம்பழம் இரண்டையும் ஊற வைத்து நம் நாட்டில் உட்கொள்வார்கள். இதனால் நோய் எதிர்ப்பு சக்தி பெருகுவதுடன், மலபந்தம் நீங்கி, சீரணப்பாதை சீராகும்.

அரை டம்ளர் முதல் 1 சிறிய டம்ளர் அளவு (50 மி.லி. முதல் 100 மி.லி. வரை) ஆறிய வெந்நீரில் அல்லது அதே அளவு கொதித்து ஆறிய பாலில் 1 டீஸ்பூன் முதல் 3 டீஸ்பூன் வரை தேன் கலந்து இரவு படுக்கைக்குச் செல்லும் முன் அருந்துங்கள். குழந்தை முதல் வயதானோர் வரை தேனை உட்கொள்ளலாம். நோய் எதிர்ப்புத் தன்மை பெருகி உடல் ஆரோக்கியம் கிட்டும். படுக்குமுன் தேனருந்த நல்ல உறக்கத்தை நல்கும்.

### இரத்த சோகையை அகற்ற

நாள்தோறும் 100 கிராம் தேன் கலந்த பானம் பருக வேண்டும். தினசரி 100 கிராம் அளவிற்கு மேல் தேன் உட்கொள்ளக் கூடாது. காலை 30 கிராம், மதியம் 40 கிராம், இரவு 30 கிராம் அளவாகப் பிரித்து உட்கொள்ள வேண்டும். ஏதாவதொரு பானத்துடன் சேர்த்து சுமார் 6 வாரம் அருந்தி வருவதால் இரத்தத்தில் இரத்த சிவப்பணு (ஹீமோகுளோபின்) அதிகரித்து இரத்த சோகை நீங்கும். மேலும் உடல் அழகையும், குரல் இனிமையையும் பெருக்கும் குணம் தேனிற்கு உண்டு. 100 கிராம் தேனில் சுமார் 355 உடற்சூடு தரும் கலோரிகள் உள்ளன.

தேனை வயிற்றின் நண்பன் என்று குறிப்பிடலாம். 1 முதல் 3 டீஸ்பூன் தேனை 100 மி.லி.ஆறிய வெந்நீருடன் கலந்து தினமும் காலை அல்லது இரவு நேரங்களில் வெறும் வயிற்றில் உணவு அருந்துவதற்கு முன் பருகிவருவதால் வயிற்றுப்புண், இரைப்பை அழற்சி (GASTRITIS), ஈரல், பித்தப்பை நோய்கள் குணமாகும். இரைப்பையில் தேவைக்கு அதிகமாக சுரக்கப்படும் அமிலத்தின் தன்மையைக் கட்டுப்படுத்துவதுடன் அமிலத்தால் வயற்றுப்புண்ணிற்கு ஏற்படுத்தப்படும் தூண்டுதலைக் குறைத்து எரிச்சல், வலியை நீக்கும். மேலும் நீர்த்தாரைப் புண், சிறுநீரக, இதய நோய்களையும் தடுக்கவல்லது தேன்.

டாக்டர். சுப.ச. இளமாறன்

தேவகி சிரித்தாள். கேலி ஒலித்தது.

"ஒரு கோளேஜ்ல புரொஃபசராப் போக ணும்னு தோணலையா?"

"எனக்கு டீச்சிங் லைன் பிடிக்கலே..."

"அப்ப என்ன செய்வே?"

"நம்ப நாட்ல எத்தனையோ இங்கிலீஷ் பேப்பர், மாகஸின்ஸ் இருக்கு. நிறைய கட்டுரை கள் எழுதலாம். புத்தக விமர்சனங்கள் செய்ய லாம்".

"இது சரியான குறிக்கோளாகப் படலே எனக்கு".



"அப்படீன்னா?"

"டாக்டர் பட்டம் வாங்கணும்ங்கறது ஓர் ஆசை. உன் விஷயத்தில பேராசை. ஆனா அதுக்கு அப்புறம்தான் லட்சியம் வர்றது. லட்சியமே வைச்சுக்காம வெறும் ஆசை மட்டும் இருந்துட்டா, அது தற்பெருமைக்காக ஏதோ செய்யற மாதிரித்தான் இருக்கும்".

"நீ குழப்பறே தேவகி".

"நீதான் குழம்பிப் போயிருக்கே. நான் இப்ப ஜெர்மன் படிக்கிறேன். அது என் ஆசைக்கு. லட்சியத்துக்கு இல்லே. எம்.ஏ. படிச்சிருக்கிற நான் எம்ஃபில் படிச்சு தொடர்ந்து பி.எச்.டியும் படிக்க நினைக்கிறேன். எதுக்குத் தெரியுமா, நான் படிச்சதை நூற்றுக்கணக்கான பேர் களுக்குச் சொல்லிக் கொடுக்க! யார் கண்டா என் அப்பா எனக்காக ஒரு கோளேஜ் கட்டறதுக் குக்கூட சம்மதிப்பார்... நீ பி.எச்.டி பண்றதும் ஒண்ணுதான். பண்ணாம இருக்கறதும் ஒண்ணு தான். ஹங்... இப்ப என் வார்த்தைகள் உன் மனசில சுருக்குன்னு படறது. உன் முகம் சொல்றது".

பாரதிக்கு என்ன பதில் சொல்லிச் சமா ளிப்பது என்று தெரியவில்லை.

"நேத்து உன்னை மீட் பண்ணினப்புறம் நான் சிந்திக்க ஆரம்பிச்சேன். இவளை மாதிரி நானும் பாதிக் கிணறு தாண்டினவளா ஆயிட்டா? ரெண்டு வருஷம் வேஸ்ட்தானே? எதுக்கு எம்ஃபில் படிக்கணும்? அப்பாவுக்கு ஏற்கனவே ஹார்ட் ட்ரபிள் வந்து அமெரிக்காவில பைபாஸ் சர்ஜரி நடந்தாச்சு. பாதிப் படிச்சுட்டிருக்கறப்ப அவருக்குத் திடீர்னு ஏதானும் நேர்ந்துட்டா, அப்புறம் இவ்வளவு பெரிய கம்பெனியை யார் நடத்துவாங்க, இப்படியெல்லாம் சிந்திச் சேன்..."

"அப்புறம்?"

"இன்னும் முடிவு எடுக்கலே. எனக்கு உண்மையான லட்சியம் இருக்கு பாரதி. பி.எச்.டி பண்ணி கோளேஜ்ல புரொஃபசரா ஆகணும்னு. ஆனா அதேசமயத்தில் இதைவிடப் பெரிய லட்சியத்தை என் அப்பா என் மடிமேல போடுவாரோங்கற பயமும் இருக்கு. அப்படிப் போட்டுட்டா என் தனிப்பட்ட லட்சியத்தை மறந்துடுவேன்."

"யூ மீன்..."

"எனக்கு என் அப்பாதான் முக்கியம். ரெண்டு பேரும் அடிக்கடி ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக்கொள்றதில்லைன்னாலும் எங்க ரெண்டு பேர் மனசுகளும் சதா சர்வகாலமும் பேசிட்டேதான் இருக்கு".

"கம்பெனியை நடத்த நீ ஒருத்திதான் இருக்கியா?"

"இப்ப நான்அதில ஒரு டைரக்டர். அப்பா வோட பங்கு எழுபது சதவிகிதம். என்னோடது இருபது. பாக்கி பத்தை பத்து பேருக்குக் கொடுத்திருக்கார். அந்தப் பத்துப் பேர்ல ரெண்டு பேர் அவருடைய காரியதரிசிகள். மூணு பேர் பிராஞ்ச் மானேஜர்கள். பாக்கி அஞ்சு பேர் குமாஸ்தாக்கள். இவர்கள் எல்லோரும் அடி நாள்லேந்து அப்பாவோட சுகத்திலும், துக்கத்திலும் பங்கு கொண்டவர்கள்".

வாய் திறவாமல் பாரதி கேட்டுக் கொண்டு வந்தாள்.

திடீரென்று தேவகி ஒரு கேள்வி கேட்டாள்.

"உனக்கு பி.எச்.டி பண்ண ஆசை இருக்கு. ஒகே. ஆனா அதுக்கு யார் தடையா இருக்காங்க?"

"என் ஹஸ்பெண்ட். என் ஃபாதர் இன் லா."

"என்ன காரணம்?"

"குடும்பத்தில கால் வைச்சதும் படிப்பு காரணமாக வெளியேறி இரண்டு வருஷம் இருக்கிறது சரியில்லைன்னு சொல்றாங்க... நான் படிச்சு முடிச்சப்புறம் அதனால எனக்கு மட்டும்தான் பெருமை இருக்குமே தவிர வேற யாருக்கும் அது பிரயோசனப்படாதுங்கறார் என் மாமனார்".

"கரெக்டாத்தான் சொல்லியிருக்கார்".

"ஆனா என்னால இந்த ஊர்ல, இந்த கிராமத்தில இருக்க முடியும்னு தோணலை".

"ஏன்?"

"டில்லியில பொறந்து வளர்ந்து டில்லி நாகரிகத்தை அனுபவிச்ச என்னால எப்படி ஒரு சின்ன இடத்தில அடைஞ்சு கிடக்க முடியும்?"

"இங்கேர்ந்து பிழைப்புக்காக டில்லி, மெட்ராஸ், பாம்பேன்னெல்லாம் போறாங்களே அவங்கல்லாம் அட்ஜஸ்ட் பண்ணிக்கலையா? நீ வேணும்னா டில்லியில பிறந்திருக்கலாம். உன் அப்பா பிழைப்புக்காகத்தானே டில்லி போனார்?"

"நீ சொல்றதெல்லாம் சரிதான் தேவகி... ஆனா..."

"இதில ஆனா ஆவன்னாவுக்கு இடமில்லே பாரதி. ஓர் ஆம்புள்ளை பிழைப்புக்காகப் போய் அட்ஜஸ்ட் பண்ணிக்கறான். ஆனா நீ? வாழ்க்கையிலே ஒருத்தனுக்கு மனைவியாகி உன் பிழைப்பை நடத்த வந்திருக்கே. டில்லியில பழக்கம் ஏற்பட என்ன காரணம்? நீ நாலு வீடுகளுக்குப் போனே...நாப்பது வீடுகளை எட்டிப் பார்த்தே... இது சின்ன வயசில ஆரம்பிச்சது. இப்ப ஒரு புதுமனைவியா நீ பொறந்திருக்கே... இனிமே நீதான் மத்தவங்களைப் பார்த்து அவங்களோட பழகி இந்த ஊரை உன்னுடைய தாக்கிக் கொள்ளணும். உனக்குக் கோபம் வரும்படியாச் சொல்றதுன்னா, நீ இன்னும் உன் மூக்கு நுனியைத் தாண்டி எதையும் பார்க்கலே".

பாரதி தளர்ந்து போனாள். உண்மையில் தேவகி மீது கோபம் வரத்தான் வந்தது.



ஆனால் அது முட்டாள்தனமான கோபமாகப் பட்டது.

"இங்கே பேசற தமிழே நாராசமா ஒலிக் கிறது".

தேவகி சிரித்தாள்.

"இது தமிழுக்கு மட்டுமில்லே. எல்லா பாஷை களுக்கும் உண்டு பாரதி. பாலக்காட்டு மலை யாளம் வேறு. கொல்லம், திருவனந்தபுரம் மலையாளம் வேறு. ஏன் ஹிந்தியை எடுத்துக் கொள்ளேன். டில்லியில ஒரு மாதிரி. ராஜஸ் தான்ல ஒரு மாதிரி. பீஹார்ல இன்னொரு மாதிரி. இதெல்லாமா உனக்கு உன் வாழ்க்கை யில் ப்ரோப்ளம்? உன் ஹஸ்பெண்ட் எப்படி நடத்தறார், அது முக்கியம். ஒருவரை ஒருவர் சரியாப் புரிஞ்சுக்கிட்டா ஒரு ப்ரோப்ளமும் இல்லை, பாரதி".

"என்அவஸ்தையை என்னாலச் சரியாச் சொல்ல முடியலே, தேவகி".

"வா, சாப்பிடப் போகலாம். உனக்கு நீயே தான் ப்ரோப்ளம். அதை நீயேதான் தீர்த்துக் கணும்..." என்ற தேவகி, "ஃப்ரைட் ரைஸ், குர்மா, ஆலு மட்டர், நான், சாலட், சூப் எல்லாம் ஹாட் பாக்கிலே வைச்சிருக்கேன். இதெல்லாம் டில்லியை நினைவுபடுத்தறது இல்லியா?" என்றாள்.

"உம்" என்றாள் பாரதி.

"இந்த ஊர்ல ஒரு ராஜஸ்தானி ஓட்டல் இருக்கு. ஒருநாள் அழைச்சுட்டுப் போறேன். புல்கா, சப்ஜி, பேல் பூரி எல்லாம் ஹைகிளாஸா இருக்கும்".

பாரதி எதுவும் பேசவில்லை.

"நான் நறுக்குத் தெரிச்சாப்ல மனசில் பட் டதை அப்பட்டமா பேசினது உனக்குப் பிடிக் கலே, இல்லியா, பாரதி".

"நான் எதையோ எதிர்பார்த்து இங்கே வந்தேன்".

"எதை?"

"உன் எம்ஃபில்லைப் பற்றிப் பேசுவாய், நீ மெட்ராஸ் போறதானா நானும் உன்கூட என் பி.எச்.டிக்குப் புறப்படலாமான்னெல்லாம் யோசிச்சுட்டு வந்தேன்".

"மொதல்ல உனக்கு வாழ்க்கையில என்ன தேவை, என்ன லட்சியம் இதெல்லாம் தீர்மானம் செய், பாரதி. பாலக்காடு, பள்ளிப்புறம் இதெல்லாம் அற்ப சமாசாரங்கள். நம்மை மீறின விஷயங்களா இது? நீ பாதிக்கிணறு தாண்டியவன்னு சொன்னது தப்போன்னு இப்பப் படறது!"

"தேவகி நீ என்ன சொல்றே?"

"நீ கிணத்துக்குள்ளேயே இருக்கிற தவளை! கோவிச்சுக்காதே. உன்னை எனக்கு ஏனோ ரொம்பப் பிடிச்சிருக்கு, அதான் உரிமையோட பேசறேன்".

•

சாப்பாடு முடிந்தது.

இரண்டரை மணிக்கு வீட்டை விட்டு கார் புறப்பட்டது. பள்ளிப்புறத்தை நோக்கி வண்டி செல்லாமல், பாரதிக்குத் தெரியாத ஒரு பாதையில் கார் ஓடி ஒரு வீட்டின் முன் நின்றது.

அங்கே பாரதி திகைத்துப் போகும்படியான அனுபவம் அவளுக்கு உண்டாயிற்று.

# 12

ஈசுவரன் பன்னிரண்டு மணிக்கு வீடு திரும்பினார். ஜிப்பாவைக் கழற்றியபின் கை, கால் அலம்பி விட்டு, அவர் வீட்டுக்கு நேர் எதிரே இருக்கும் தம்பி சகஸ்ரத்தின் வீட்டுக்குச் சென்றார்.

"வா அண்ணா, ஒனக்காகத்தான் காத்துண் டிருக்கேன். ராஜி, அண்ணா வந்தாச்சு. எலை போடு!"

"அண்ணா காரை விட்டு எறங்கி ஆத்துக் குள்ள போறப்பப் பாத்தேன். அப்பவே எலை போட்டாச்சு".

"வா அண்ணா சாப்பிடலாம்." இருவரும் சாப்பாட்டு மேஜைக்கு வந்தார்கள்.

ராஜி முதலில் பச்சடி பரிமாறி விட்டு, உள்ளே சென்றாள்.

"மனசுக்கு சுகமில்லைடா, சகஸ்ரம்".

"என்னாச்சு?"

"இப்ப ஆத்துக்குப் போனேன். அப்பா தூங்கிண்டிருக்கார். அம்மை சிவராமன் ஆத்ல இருக்கான்னு தாட்சாயணி சொன்னா. அந்தப் பொண் எங்கே போனாள்னு தெரியலை".

சாதம் மற்றும் கறியுடன் வந்த ராஜி, "பாரதி தேவகியோட அவாத்துக்குப் போயிருக்கா" என்றாள்.

"எந்த தேவகி? சந்திரா நகர் தேவகியா?" என்றார் ஈசுவரன், இலையில் விழுந்த கறியை ருசிபார்த்துக் கொண்டே.

"ஆமாம் நேத்தைக்கு அவ இங்கே வந் திருந்தா... பாரதி எம்ஃபில் அல்லவா? தானும் எம்ஃபில் படிக்கலாமோங்கற எண்ணம் அவ ளுக்கு இருக்கு. அது காரியமா வந்திருந்தா".

"நான் பெரிய தப்பு சேதுாட்டனோன்னு மனசு தவிக்கிறது, சகஸ்ரம்".

"மின்னால சாப்பிடு அண்ணா. நீ ஒரு தப்பும் சேயலை".

"இல்லைடா. ஆத்யமே தங்கம் வேண்டாம்னா. கோந்தைக்கும் அத்ற இஷ்டமில்லை. அழகா இருந்தா மாத்றம் போராது, ஆத்துக்கு அனுசரணையாவும் இருக்கணும்னான். நான்தான் கேக்கலை. கொஞ்சம் பிடிவாதமா இருந்துட்டேன். நங்கவரத்துப் பொண்ணுனு வந்தா நல்லதுன்னு நெனைச்சேன்".

"கோந்தைக்கு அவளைப் பிடிக்கலையா அண்ணா? அவன் எங்கிட்ட பேசறப்ப பாரதியைப் பத்தி ஒண்ணும் குறைவாச் சொல்லலியே?"

"கோந்தை எங்கிட்டேயும் ஒண்ணும் சொல்லலை. நேத்தைக்கும், இன்னைக்கும் ஒம்பது மணிக்கு அப்றம்தான் தூங்கி எழுந்தா".

"இது பெரிசாப் படலை".

"எனக்கும் படலை. புதுசா வந்த இடத்தில எப்படி எப்படியெல்லாம் நடந்துக்கணும்னு அவளுக்குத் தெரியாதைக்கு இருக்கலாம். சம்மதிக்கறேன். ஆனா தங்கத்துகிட்ட வாயாடறாளோன்னு தோணுறது".

"மன்னி சொன்னாளா?"

"ஆமாம்"

"தர்க்கமா?"

"ஆமாம்".

"அண்ணா, நான் ஒண்ணு சொன்னா எங்கிட்ட தேசுஷ்யப்படப்படாது... அண்ண கலத்தில பப்படாம் இல்லை, ராஜி கொண வா..."

"உங்கிட்ட நான் என்னடா தேசுஷ்யப் டிருக்கேன்..."

"ஒனக்கு ஒறமை இருக்கா...?"

"மன்னி வந்த புதுசில அம்மை சொ னதைக் கேக்க மாட்டா. தர்க்கம் பண்ணுவ ஆனா அப்றம், அப்றம் தன்னைச் சரியா கிண்டா".

"இது தங்கம்மா மாதிரி கேஸ் இல்ல சகஸ்ரம்".

"எப்படிச் சொல்றாய்?"

"பாட்டி இந்தக் குடும்பத்தில மின்ன வந்தா. அப்புறம் நீ வந்திருக்கே. இப்ப நா வந்திருக்கேன். நீ என்னைவிட ஸீனியர், அ படத்தான்னு பாரதி தங்கத்திடம் சொன்ன ளாம்".

# இழப்பதற்கு இவளிடம் ஏதும் இல்லையாம்!

## அவ்வைதாசன்



அன்றுஓர் இரவில் அழகிய மெரினா
கடற்கரை, மாநிலக் கல்லூரி எதிரில்
அடையாறு அடைய அரியபே ருந்தின்
வருகைக் காக மாதவம் கிடந்தேன்;
எதிரில் இருந்த மணிப்பொறி பத்து
இன்னொலி யதனை எழுப்பியது; எங்கும்
மையிருள் பரவி மண்டிக் கிடந்தது;
வங்கக் கடலின் பொங்குஅலை ஓசையும்
மனிதக் கடலின் வாய்ப்பறை ஓசையும்
அடங்கி அமைதி நிலவி இருந்தது.
அருகில் யாரோ இருப்பது தெரிந்தது
ஓடிய காரின் ஒளிமேல் பட்டதும்
ஓர்இளம் பெண்அவ் வுருவென உணர்ந்தேன்;
"பயங்கர மான வேளை, இடம் இதில்
தனிவந் திருத்தல் தக்க தல்லவே"
என்று பரிவுடன் இயம்பினேன், உடன்அவள்
"என்னிடம் பயப்பட ஏதுமே இல்லையே
காதிலே மெருகுக் கம்பி வளையம்,
கையிலும் கழுத்திலும் கவரிங் நகைகள்,
இழப்பதற்கு என்னிடம் என்ன உள்ளது?"
என்றே துணிவுடன் எடுத்துச் சொன்னாள்;
சிந்தித்த வாறே திரும்பினேன் வலப்புறம்,
எதிரே வந்த கார்ஒளி இருட்டை
விலக்கிடக் கண்ணகி வீறுடன் கையில்
சிலம்புடன் சிலையாய் நிற்பதைக் கண்டேன்,
கற்புக் கரசி கண்ணகி இருளில்
சிலையாய் நிற்கிறாள் சிறிதும் பயமிலை,
இருக்கிறாள் உயிருடை இந்தப் பெண்ணும்
இழப்பதற்கு இவளிடம் ஏதும் இல்லையாம்!
எண்ணிப் பார்த்தேன் உண்மைதான் போலும்!
இதுதான் தலைமுறை இடைவெளி மாற்றமோ?

இதைக் கேட்டதும் சகஸ்ரம் சிரித்தான். ...ரியாலும் சிரிப்பை அடக்க முடியவில்லை.

"என்னடா நான் ஸீரியஸாகப் பேசிண்டிருக்...ன். நீங்க ரெண்டு பேரும் சிரிக்கறேள்?"

"கோவிச்சுக்காதே அண்ணா. நம்ப அப்பா ...ருக்கார். அவருக்கு மூத்த பிள்ளையா நீ ...ருக்கே. ஒனக்குப் புள்ளையா கோந்தை. ...தே மாதிரித்தானே, அம்மை, மன்னி, பாரதி ...னு பேரும்? ஒருத்தர் பின்னால ஒருத்தரா ...ந்தவாதானே?

"அப்ப நீ பாரதிக்குப் பரிஞ்சு பேசறாயா?"

"ஹேய்... நான் ஆருக்கும் பரியவில்லை. ...ண்ணா..., பாரதி இப்படிச் சொல்லியிருக்க ...ம்னா, மன்னி அதுக்கு பின்னால என்ன ...சான்னாளோ?"

"தெரியாது".

"நீ ரெண்டு பேரையும் விசாரிக்கறது ...ல்லதுன்னு நேக்குத் தோண்றது".

"அதான் நேக்கும் தோண்றது. மாமியார் ...ாட்டுப்பொண் சண்டை பிடிச்சுக்கறான்னு ...ர்ல நாலு பேர் காதில விழுந்தா அவமான ...ல்லையா?"

"இல்லை அண்ணா".

"என்னடா சொல்றாய்?"

"இந்த மாமியார் மாட்டுப்பொண் பூசல் ...நாதிகாலமா இந்த லோகத்தில இருக்கு. ...தை மத்தவா பெரிசு பண்ணாம இருந்தா ...ன்னைப் போல அடங்கிப் போகும். நீ வேணும்னா பாரதியைத் தனியாக் கூப்பிட்டு நல்லதனமா அட்வைஸ் பண்ணு. அவ ரொம்ப நல்ல பொண்ணாத்தான் நேக்குப் படறது. கொஞ்சம் சென்ஸிடிவ் டைப்பாக இருக்கலாம். சடக்குன்னு கோபம் வரலாம். கொஞ்ச நாளைக்கு மன்னி குத்தம் குறை சொல்லாம இருந்தா பாரதியும் அனுசரிச்சுண்டு போலாம் இல்லியா?"

ஏற்கனவே சாம்பாரை முடித்துவிட்ட ஈசுவரன் மோருக்காகச் சாதத்தைப் பிசைந்து கொண்டிருந்தார்.

"இது மாத்றம் அல்லா என்னோட ஒர்ரி..."

"பி.எச்.டியா?", என்றான் சகஸ்ரம்.

"நோக்கு எப்படியடா தெரியும்?"

"இந்த ஊருக்குள்ளே அவ கால் வைச்ச நாள்லேந்து ஆர்ட்ட அவ அதிகமாப் பேசிண்டிருக்காள்னு நெனைக்கறாய்? மௌலியும், சுசீலாவும் இந்தாத்துலதானே எறங்கினா? அதிலேந்து நேத்தை வரை அவ இங்க ரெண்டு மணிக் கூறாவது எங்ககிட்டப் பேசிண்டிருப்பாள். மௌலியும், சுசீலாவும்தான் அவ மேற்படிப்புக்குக் குறுக்கே வந்தாளாம்".

"இந்த பி.எச்.டி பத்தி எங்கிட்ட அவ பேசினா..."என்றார் ஈசுவரன்.

"என்ன சொன்னா?"

"படிக்கணுமாம்".

"நீ என்ன சொன்னாய்?"

"கூடியாதுன்னு சொன்னேன்".

---

# நோய்கள் நீங்க அருகம்புல் சாறு அருந்துங்கள்

முழுமுதற் தெய்வம் கண ...திக்கு படைக்கும் அருகம்புல் தெய்வீக மூலிகைகள் எனப் ...படும் வில்வம், துளசி, வேம்பு, அத்தி இவை யாவற்றினும் ...மிகச் சிறந்தது. ஆதியிலே தோன்றிய அருகம்புல்லே ...தாவர இனங்களுள் முதன்மை ...யானது.

அருகம்புல் உயர்ந்த மூலிகை. நம் உடம்பிலுள்ள விஷத்தன்மையையும் நோயை...யும் போக்கும் குணமுடையது. அருகம்புல் ரத்தத்தை சுத்தப்படுத்தும். கொழுப்புச் சத்தை கட்டுப்படுத்தும். கல்லீரலை கெட்டிப்படுத்தும். ரத்த அணுக்கள் வலிமைபெறும். நோய் தடுப்பு சக்தி பெறும். கண் பார்வைக்குச் சக்தி கிடைக்கும். இருதய நோய், ரத்தக் கொதிப்பு, சர்க்கரை வியாதிகளைச் சீராக்கும். பெண்களுக்கு மாதவிலக்கு காலங்களில் அதிகம் போகாமல் தடுக்கும்.

மேலும் பித்த சம்பந்தமான உஷ்ண வியாதிகள், ஆஸ்துமா, அல்சர், கைகால் குடைச்சல், தலைசுற்றல், பலவீனம், மூல நோய், வயிற்றுவலி, தோல் வியாதிகள் போன்ற வியாதிகள் வராமல் தடுக்க அருகம்புல் சாறு அருந்துவது நல்லது.

அருகம்புல் மூலிகைச் சாறு சிறுவர் முதல் பெரியவர் வரை அன்றாடம் அருந்தலாம். காலையில் காபி, டீ, அருந்துவதற்கு பதில் அருகம்புல் சாறு அருந்துங்கள். தினமும் காலை 5.30 மணி முதல் 7.00 மணி வரை மெரினா கடற்கரை, அவ்வையார் சிலை, இலாயிட்ஸ் காலனி சென்னை 14 ஆகிய இடங்களில் கிடைக்கும். டாக்டர் எஸ். கிருபளானி அவர்களின் ஆலோசனைப்படி விற்பனை செய்பவர் எஸ்.கே. ஏழுமலை.

தொகுப்பு :
வ. நித்தியானந்தம்.

# தூக்கு மரம்



தூக்குமரம் தூக்குமரம் – மரணம்
தொட்டில் கட்டிப் பார்க்கும் மரம் – உயிரைத்
தூங்க வைக்கும் தீர்ப்பு மரம்.

பாடை கட்டும் நெட்டை மரம் – கண்ணீர்
பாய்ந்து வரக் காய்ந்த மரம் – இது
பாவத்திலே சாய்ந்த மரம்.

இதயமில்லாப் பொட்டலிலே – ஒரு
இலையுமின்றி பட்ட மரம் – சாவின்
அலைகளுக்குள் நட்ட மரம்.

தூங்கையிலும் வாழ்பவரை
தூக்கிலிட்டு சாக வைக்க
சோக வனம் போன மரம்.

கழுத்தினிலே கயிறு கட்டி
காலனுக்குத் தேரிழுக்க
காத்திருக்கும் தூக்கு மரம்.

கவியரசு நா. காமராசன்



"கோவிச்சுண்டு சொன்னியா?

"இல்லை. ரெண்டு பேரும் ரொம்ப சௌஜன்யமாத்தான் பேசினோம். என்னை அவள் மாமனார் ஸ்தானத்தில் வைச்சுப் பேசலை. அத்தை ஆம்படையான்கிற எடத்தில வைச்சுப் பேசினா".

"நானும் சொன்னேன். பி.எச்.டி அவசியம் இல்லைன்னு".

"இந்தப் பாலக்காட்டிலேயே படிச்சு முடிக்கிற படிப்புன்னா நான் சரின்னு சொல்லியிருப்பேன், சகஸ்ரம். மதிராசிக்குப் போய்ப் படிக்கண்ட படிப்பு. எப்படி வீட்டுக்குப் புதுசா வந்த மாட்டுப் பெண் ஆம்படையானை விட்டு இரண்டு வருஷத்துக்கு வெளியூர்ல இருக்கலாம்?"

"கோந்தைக்கும் இஷ்டமில்லை!" என்றான் சகஸ்ரம்

"நோக்கு எப்படித் தெரியும்டா?"

"நேத்தைக்குக் களத்துக்குப் போறதுக்கு மின்னால இங்க வந்திருந்தான். அப்பச் சொன்னான்".

"அவளை எப்படி நல்ல வழிக்குக் கொண்டு வர்றதுன்னுதான் தெரியலை".

"பி.எச்.டிதான் நல்ல வழின்னு அவ சொப்பனம் கண்டுண்டிருக்கா, அண்ணா".

"இப்ப என்ன செயறது?"

"ஒரு வழி இருக்கு".

"என்னடா அது?"

"அவ வழியிலேயே கொஞ்ச தூரம் போல மனசை மாத்திண்ட மாதிரி நீ நடந்துக் மதிராசி வரைக்கும் போயிட்டு வரட்டும். ராஸ் யுனிவர்சிட்டியில அத்தறை வே பி.எச்.டிக்கு சான்ஸ் கிடைக்கும்னு நேக் தோணலை".

"எப்படிச் சொல்றாய்?"

"வர்ஷா வர்ஷம் குறைஞ்சது இரு பேராவது எம்ஃபில் பாஸாறா. அதில ப பேராவது பி.எச்.டிக்கு ட்ரை பண்ணு இவாளைத் தவிர போன கொல்லம், அது மின்னாலத்து கொல்லத்தில் ட்ரை பண் கிடைக்காதவாளும் இந்தக் கொல்லம் பண்ணுவா. செலக்ஷன்ல பாலிடிக்ஸ் நெ உண்டு. இன்னும் ஒண்ணு. மெட்ராஸ் யுனி சிட்டியில இன்னைக்கெல்லாம் இருந்தா மு நாலு புரொபசர்களும் நாலஞ்சு ரீடர்ணும்த இருப்பா. ஒரு புரொபஸர் ஒரு காண்டி டைத்தான் எடுத்துப்பன். இப்படி இருக்க நம்ப பாரதியை ஒருத்தன் எடுத்துப்ப என்ன நிச்சயம்?"

"அப்ப இவள் அப்ளை பண்ணினாலும் டைக்கச் சான்ஸ் இல்லைன்னு சொல்றாய். ல்லவா சகஸ்ரம்?"

"டெல்லின்னா அப்படிச் சொல்ல மாட் ன். மெட்ராஸ்ன்னா சொல்ல முடியும். எத் ன எம்.ஃபில் படிச்சு அஸிஸ்டண்ட் புரொஃப ா இருக்கறவா பி.எச்.டி பண்ண முடியாம க்கிறா தெரியுமா, அண்ணா? இவ டில்லி ிவர்சிட்டி! மெட்ராஸ் யூனிவர்சிட்டி பளை அத்தற வேகத்தில சீண்டாது".

"அப்ப என்ன சொல்றாய்?"

"மின்னால எழுந்து கை அலம்பு. உண்ட த்தில ஒக்கார்ந்தா கண்ட எடத்தில கரிப்பா".

இரண்டு பேரும் எழுந்தார்கள்.

"ராஜி அவரைக்காய் தோரன் ரொம்ப னாயிருந்தது. சாம்பார்லதான் கொஞ்சம் ி தலை நீட்டித்தோன்னு தோணித்து".

"எனக்கே புளியைக் கரைக்கறப்ப ாணித்து. புதுப் புளியாச்சா. கணக்கு சரி த் தெரியலை".

அண்ணாவும், தம்பியும் கூடத்திலிருந்து முன் ழ்வாரத்துக்கு வந்தார்கள்.

"அப்ப என்னடா சொல்றாய்?"

"அவளை அப்ளிகேஷன் பாரத்துக்கு எழு போடச் சொல்லு. அது வர்றதுக்கு ச்சையா ரெண்டு மூணு ஆழ்ச்சையாவது தம். லயோலாவில உங்கூடப் படிச்சானே ாந்தகிருஷ்ணன் அவனுக்கு நான் இன் ாக்கே ஃபோன் பண்ணி விசாரிக்கச் ால்றேன்".

"எந்த அனந்த கிருஷ்ணன், சேகரிபுரம் ாந்த கிருஷ்ணனா?"

"அவன்தான்".

"இப்ப என்ன சேயறான்? அவன் பாம்பே ில இருக்கலியோ?"

"ரெண்டு வர்ஷமா மதிராசியிலதான் இருக் ன். இண்டியன் பாங்க்ல டெபுடி ஜெனரல் னேஜரா இருக்கான். நல்ல இன்ஃப்ளுயன்ஸ் ண்டு".

"அப்படியா?"

"அவன் மூலமா பாரதிக்கு ஸீட் கெடைக் ைதக்குப் பார்த்துக்கறேன்".

"ஸீட் வாங்கறதுக்குத்தான் சிபாரிசுக்குப் ாவா... நாம என்னடான்னா..."

"இப்பக் காரியம் பெரிசா, வீர்யம் பெரிசா ண்ணா?"

"நாம இப்படிச் செய்யறது சரியா சகஸ் ?"

"நீ ஒன் பிஸினஸ்ல அரிச்சந்திரனா இருந்திருக்காயோ? ஆருக்கும் கைக்கூலி கொடுத்திட்டில்லையோ? லைசன்ஸுக்கும் பர் மிட்டுக்கும் சிபார்சுக்குப் போனதில்லையோ?"

"எந்துக்குடா அதையெல்லாம் இப்ப இழுக்க றாய்?"

"துரோணர் சாகறதுக்கு தர்மபுத்திரனே சூழ்ச்சியாப் பேசினார். நீ அவனை விடப் பெரியவன்னு சொல்லு, நான் ஒதுங்கிக் கறேன்."

"சில சமயங்கள்ளே சாதுரியமும், சாமர்த் தியமும் ஆவசியப்படறது, அல்லவா?"

"இது ரெண்டும் இல்லை அண்ணா. ஏமாத்து வேலை. ஆனா ஒரு நல்ல காரியத்துக்கு".

"நல்ல காரியம்னா?"

"நம்பாத்து மாட்டுப் பொண்ணால நமக்கு சங்கடம் வரப்படாது. அவகிட்ட நாம விரோ தமா இருக்கோம்னு அவளும் நெனைக்கப் படாது. நம்ப கோந்தையும் அவகூட சுகமா இருக்கணும்".

"இதுதான் என் ஆசை சகஸ்ரம்!"

"என் மனசில இன்னொரு காரணமும் இருக்கு".

"ஒருத்தனோட மண்டைக் கனத்தைக் குறைக் கணும்னா அவனோட மண்டையிலே ஒரு தட்டு தட்டணும். நான் டில்லிக்காரி, எம்ஃபில் படிச்ச வள், என்னைப் போல ஆருமில்லைன்னெல்லாம் பாரதி சொல்லாமச் சொல்லிக் காட்டறா. இப்பவே அவ கனத்தை ஒரு தட்டு தட்டிட்டா சரியாயிடுவா. சின்ன மன்னி கமலம் எகனா மிக்ஸ் எம்.ஏ., கோவிந்தன் ஒய்ஃப் பி.எஸ்ஸி., பி.இடி, ராஜி பி.ஏ பர்ஸ்ட்கிளாஸ்னு எதுவும் பாரதிக்குத் தெரியாது. இவாளெல்லாம் எப் படிக் குடும்பத்துக்கு ஏத்தபடியா நடந்துக்க றாங்கறதையும் அவ தெரிஞ்சுக்கலை. அவ இதை தெரிஞ்சுக்கணும். இந்த பாரதியையும் இவாளை மாதிரி ஒரு நல்ல பொண்ணா மாத்தணும் அண்ணா!"

"எல்லாம் நீ பார்த்துக்கோடா சகஸ்ரம். அவ இங்கதான் அதிகமா வர்றா".

"ஆனா நீ உன் மனசு மாறியாச்சுங்கறதை அவளுக்குத் தெரியப் படுத்தணும் அண்ணா".

"சரி, சகஸ்ரம்! நான் போய்ட்டு வரேன்".

"கோந்தை எப்ப வருவன்?"

"தெரியாது. மினிஸ்டரைப் பார்க்க அல்லவா போயிருக்கான்!"

"நீ மன்னிட்ட விபரமா எல்லாத்தையும் கேள். அப்றமா பாரதியை விசாரிச்சுக்கலாம்".

ஈசுவரன் தலையாட்டிவிட்டுத் தம் வீடு திரும்பினார்.

ஈசுவரன் வெளியேறிய பிறகு ராஜி சிரிப்பும் களிப்புமாக சகஸ்ரத்தை அணுகினாள்.

"நீங்க சாணக்கியனா, இல்லே சாதாரண மனுஷனா?"

"ஏன் ஒனக்கு இப்படி ஒரு சந்தேகம் புதுசாக் கிளம்பியிருக்கு?"

"இல்லே பாரதிக்கு சூழும் ஊட்டி மீசையும் வைக்கிறேளே, அதான் கேட்டேன்."

"என் பிளானைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய், ராஜி?"

"ஐடியா எக்ஸலண்ட். ஆனா கோந்தைக்கு தெரிஞ்சா தீர்ச்சையா தடுத்து நிறுத்துவன். அவனுக்கு இந்தத் தில்லுமுல்லெல்லாம் பிடிக்காது. நேரே வா, நேரே போங்கற லட்சியம் உள்ளவன் அவன்".

"அவனோட குடும்பமும், தாம்பத்தியமும் நந்நா இருக்கணும்னுதானே நான் இந்த ஐடியா வில எறங்கினேன்?"

"இருக்கலாம். ஆனா கோந்தைக்குத் தெரிஞ்சா அவன் என்ன சொல்லுவன் தெரியுமா?"

"ஆர்ட்ட?"

"எல்லார்ட்டேயும்.மின்னால பாரதிட்ட..."

"என்ன சொல்லுவன், அதைச் சொல்லு ராஜி."

"இதப்பாரு பாரதி, நீ ஒன் டாக்டர் பட்டத்துக்கு ஓடணும்னா ஓடிக்கோ. ஆனா அப்றம் இந்த வீட்டுப் படியில ஒங்க பொண்டாட்டி நான்னு சொல்லிண்டு ஏறாதே. பி.எச்.டி வேண்டாம்னு நெனைச்சா நீ ஜென்மம் பூரா என் ஆம்படையாளா இரு' இப்படித்தான் சொல்லுவன் கோந்தை".

"வேற என்ன வழிதான் இருக்கு ராஜி? ஆனை மேலேயும் ஏறணும். அங்காடி வழியாகவும் போகணும். ஆரும் பார்க்கவும்படாதுன்னா அது எப்படி சாத்தியம்?"

"நான் ஒரு வழி சொல்றேன்".

"என்ன?".

"மெர்ஸி கோளேஜ்ல லெக்ச்சரர் வேலை வாங்கிக் கொடுங்கோ. ஒண்ணு ரெண்டு வர்ஷம் கழிச்சு பி.எச்.டிக்குப் போய்க்கலாம்னு சொல்லுங்கோ. கோந்தைகிட்டேயும் சொல்லி அவனையும் சம்மதிக்க வையுங்கோ".

"பாரதி மாட்டேன்னு சொன்னா?"




நம்பி வாழும் மனிதனுக்கு நாலு திசையும் கிழக்கு - அட!
கொஞ்ச கால விட்டில் கூட தேடுது பார் விளக்கு
நான் இருட்டில் இழக்கப் போவதில்லை உயிரை
நாளை சரித்திரத்தில் எழுதுங்கள் என் பெயரை
உலகம் மாயை என்று பொய்யை சித்தரிக்கிறாய் - உன்
உடலின் சிறகை சுமைகளென்று கத்தரிக்கிறாய்
விதியின் பெயரை மட்டும் தினமும் உச்சரிக்கிறாய் - அட!
விளக்கைக் கூட கருப்பு என்று எச்சரிக்கிறாய்
போனது பற்றிப் பேசுவதால் ஒரு புண்ணியமில்லை தோழா!
போரிடும் நேரம் தூங்குவதொன்றும் கண்ணியமில்லை வா! வா!
வாளெடு, உந்தன் தோள்வலி காட்டு வையகம் உருவாகும் - உன்
போர்வையைக் கிழித்தால் சூரியன் தெரிவான், ஒளியுன் உறவாகும்
தீபங்கள் ஏற்று தெருவிளக்கேற்று இரவுகள் பகலாகும் - நீ
தூக்கங்கள் கலைத்தால் ஏக்கங்கள் தொலைத்தால் கனவுகள் நிஜமாகும்
ரேகையில் அல்ல, கைகளில்தான் உன் காலம் இருக்கிறது - அட
தேய்வதில் அல்ல, வளர்வதிலேதான் சந்திரன் இருக்கிறது
விதையைப் புதைத்தால் நூறாய் முளைக்கும் அழித்திட முடியாது
விரல்கள் இருந்தால் நகங்கள் இருக்கும் கழித்திட முடியாது
மண்ணைப் பிளந்து ஒவ்வொரு விதையும் மரமாய் வெளியில் வரும்
மரத்தை சரியாய் அறிந்தால் நமக்கு எல்லா மரமும் போதி மரம்.

★ உங்கள் உடலைச் சந்தையில் விற்க முடியுமானால் என்ன விலை கிடைக்கும் தெரியுமா? ஐந்திலிருந்து ஆறு ரூபாய்க்குள்தான் கிடைக்கும் என்று ஒரு விஞ்ஞானி கணக்குப் போட்டுக் காட்டுகிறார்.

நம் உடலில் 65 சதவிகிதம் பிராணவாயு, 18 சதவிகிதம் கரி, 10 சதவிகிதம் நைட்ரஜன், 3 சதவிகிதம் ஹைட்ரஜன், 1.5 சதவிகிதம் சுண்ணாம்பு, 1 சதவிகிதம் பாஸ்பரஸ், .35 சதவிகிதம் பொட்டாசியம், .25 சதவிகிதம் கந்தகம், .15 சதவிகிதம் சோடியம், .15 சதவிகிதம் குளோரின், .25 சதவிகிதம் மக்னீஷியம், .004 சதவிகிதம் இரும்பு, .0004 சதவிகிதம் அயோடின் இருக்கின்றனவாம். இவற்றைத் தவிர இன்னும் சில உலோகங்கள் வெகு சொல்ப அளவில் இருக்கின்றனவாம். இவை அத்தனையையும் சந்தையில் விற்றால் ஐந்திலிருந்து ஆறு ரூபாய்க்குள்தான் கிடைக்குமாம்.

● ஒரு சமயம், பெர்லின் நகரில் டிராமில் ஒருவர் பிரயாணம் செய்துகொண்டிருந்தார். அப்பொழுது டிக்கெட் கொடுத்த கண்டக்டர் மீதிச் சில்லறையை அவரிடம் திருப்பிக் கொடுத்தார். சில்லறையை எண்ணிப் பார்த்த பிரயாணி, "கணக்கு தவறாக இருக்கிறது" என்றார். சில்லறையை வாங்கி, மீண்டும் எண்ணிப் பார்த்த கண்டக்டர், "கணக்கு சரியாகத்தான் இருக்கிறது, உமக்குத்தான் கணக்குத் தெரியவில்லை" என்றார்.

அந்த "கணக்குத் தெரியாத" ஆசாமிதான், கணக்கு மேதை அயின்ஸ்டைன்! —நாடோடி

"சொல்ல மாட்டா. நானும் அவகிட்டச் சொல்லிப் பாக்கறேன்".

"அவ பேசற பேச்சைப் பாத்தா லெக்ச்சரர் வேலைக்குப் போறவளாத் தெரியலே".

"அவ மாட்டேன்னு சொன்னா அப்புறம் இந்த அஸ்திரத்தை ஒடுக்கோமா - லாஸ்ட்டா பிரயோகம் பண்ணலாம். ஆனா அதுவும் கோந்தைக்குத் தெரிஞ்சுதான்".

"கோந்தை வரட்டும்".

"அவனுக்கு நூறு வயசு. அதா வர்றான்".

"குஞ்சப்பா".

"வாடா கோந்தே. மினிஸ்டர் பாலகிருஷ்ண மேனன் என்ன சொல்றான்?"

"அதை அப்றமாச் சொல்றேன். இன்னைக்கு அம்மைக்கும் பாரதிக்கும் இடையில என்ன நடந்தது?"

"ஏன் கேக்கறாய்?"

"தொழுத்துப் பெரையில அப்பா அம்மையைத் திட்டிண்டிருக்கார். நான் நின்னு கேக்கலை. பேச்சில பாரதியோட பேரு அடிபட்டது."

"தெரியாதுடா கோந்தே".

"இந்த ஆத்திலே நான் இல்லாதப்ப என்னவெல்லாமோ நடக்கறது. என்ன வேணும்னாலும் நடக்கட்டும். நான் எஸ்டேட் வீட்லேயே இருந்துக்கறேன்".

"அப்படி இருக்கறதானா ஒரு காரியம் செய்".

"என்ன குஞ்சப்பா அது?"

"ஒன் ஒய்ஃப் பாரதியையும் கூட்டிண்டு போய் வைச்சுக்கோ".

நாராயணன் பதில் சொல்லவில்லை. அவன் திரும்பி நடந்தான்.

"இருடா, கோந்தே" என்ற சகஸ்ரம் "எனக்குக் காப்பியும் இவனுக்கு காப்பியும் கொண்டு வா, ராஜி" என்றான்.

"இப்பத்தானே சாப்பிட்டுக் கை அலம்பினேள்?"

"காப்பி எப்ப வேணும்னாலும் குடிக்கலாம்டி, ராஜி!"

"அவளை அஞ்சுமணிக்கு பாலெஸ் ஹவுஸுக்குக் கூட்டிண்டுபோய் ஏழெட்டு புடைவை வாங்கிக் கொடுக்கலாம்னு இருக்கேன்."

உள்ளே போய்க்கொண்டிருந்த ராஜியின் காதில் இந்த வார்த்தைகள் விழுந்ததும் "இன்னைக்கு அவ தேவகி ஆத்துக்குப் போகக் காரில் ஏறினப்பப் பார்த்தேன். வயலட் கலரில் சல்வார் கமிஸ் போட்டுண்டிருந்தா. ரொம்ப எடுப்பா அழகா இருந்தது" என்றாள்.

"இன்னம் நிறைய நேரம் இருக்கு" என்ற சகஸ்ரம்,

"கோந்தே, உன் ஆம்படையாள் பி.எச்.டி பண்ண நீ பெர்மிஷன் கொடுக்கறதுதான் நல்லதுன்னு எனக்குத் தோணறது"

"குஞ்சப்பா!"

"அண்ணாவுக்கு சம்மதம்"

"அப்பா சொன்னாரா?"

"நீயே கேளேன்".

"அவளைக் கூட்டிண்டு எஸ்டேட்டுக்குப் போன்னு சொன்னாய். எப்போ? இப்போ! அதுக்குள்ளே பேச்சை மாத்தறாய், குஞ்சப்பா!"

சகஸ்ரம் சிரித்தான். அவனால் அப்போதைக்கு சிரிக்கத்தான் முடிந்தது. (தொடரும்)

# உங்கள் ராசி பலன்

கிரக நிலை

16-7-1993 முதல் 16-8-1993 வரை

| | | சுக் கேது | புத (வ) |
|---|---|---|---|
| சனி - வ | | | சூரி |
| | | | செவ் |
| | | ராகு | குரு |

**கிரக மாறுதல்**

25-7-1993 முதல் புதன் வக்கிர நிவர்த்தி. 27-7-1993 முதல் மிதுன - சுக்கிரன். 2-8-1993 முதல் கன்னி - செவ்வாய். 5-8-1993 முதல் கடக - புதன்.

**கிரக பாதசாரம் :**

சூரியன் - புனர்பூசம் 4, சந்திரன் - ரோகிணி 2, செவ்வாய் - பூரம் 2, புதன் - புனர்பூசம் 3, குரு - ஹஸ்தம் 2, சனி - அவிட்டம் 4 (வக்ரீ), ராகு - அனுஷம் 4, கேது - ரோகிணி 2.

## மேஷம் : (அசுவினி, பரணி, கிருத்திகை 1 ஆம் பாதம் முடிய)

சனிபலன் ஒன்றே உங்களுக்குக் கைகொடுத்து உதவும். ஏனைய கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிக்கவில்லை. அலைச்சல் அதிகரிக்கும். மனதில் சிறுசிறு கவலைகள் குடிகொள்ளும். பண நடமாட்டம் ஏற்றம், இறக்கம் கொண்டதாக அமையும். நூதன முயற்சிகளில் வெற்றி காணத் தடையிருந்துவரும். பிறமொழி, மதக்காரர்களால் சங்கடங்களுக்கு ஆட்பட நேரும் என்பதால் விழிப்புடன் பழகுவது நல்லது. பயணத்தின்போது பாதுகாப்பு அவசியமாகும். கணவன், மனைவி உறவு நிலை ஒருநாள்போல் மறுநாளிராது. மக்கள் நலனில் அக்கறை தேவைப்படும். பெற்றோர் நலனிலும் கவனம் செலுத்தி வருவது நல்லது. ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்களில் விழிப்புடன் ஈடுபடுவது அவசியமாகும்.

சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் திறமைக்குரிய வளர்ச்சிகளைக் காண்பார்கள். 11 இல் உள்ள சனி சங்கடங்களைச் சமாளிக்கும் சக்தியை வழங்குவார். இயந்திரப் பணியாளர்களுக்கும், விவசாயிகளுக்கும், தொழிலாளர்களுக்கும் அனுகூலமான சூழ்நிலை நிலவிவரும். ஆகஸ்ட் 2 ஆம் தேதி முதல் ராசிநாதன் 6 ஆமிடம் மாறுவதால் உங்கள் சுயபலம் கூடும். மதிப்பும், அந்தஸ்தும் உயர்வடையும். உடல் நலம் சீர்பெறும். எதிர்ப்புகளைக் கடந்து வாழ்வில் வெற்றி நடை போடுவீர்கள். ஆகஸ்ட் 5 ஆம் தேதி முதல் வியாபாரிகள், மாணவர்கள், விஞ்ஞானிகள் ஆகியோர் முன்னேற்றமான சூழ்நிலையைக் காண்பார்கள். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் வரவேற்பு அதிகரிக்கும். ஜூலை 17,19,21, 22,23,25,30 ஆகஸ்ட் 1,2,4,7,8,13,14,15 தேதிகள் சிறப்பானவை. மேற்கு, தென்கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. ரிஷப, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 6,8 எண்கள் நலம் தரும்.

பொதுவில் சுமாரான மாதமிது.

## ரிஷபம் : (கிருத்திகை 2 ஆம் பாதம் முதல், ரோகிணி, மிருகசீரிஷம் 2 ஆம் பாதம் முடிய)

5 இல் வியாழன் உலவுவதால் உங்கள் அபிலாஷைகள் ஈடேறி வரும். மனதிற்கினிய சம்பவங்கள் வாழ்க்கையில் நிகழும். கலைத்துறை ஆக்கம் தரும். மதிப்பும், அந்தஸ்தும் உயர்வடையும். தேக ஆரோக்கியம் சீராக இருந்துவரும். குடும்பத்தில் திருமணம் போன்ற சுபகாரியங்கள் நிகழும். அரசியல்வாதிகள் தங்கள் கொள்கைகளுக்கு வரவேற்பு கூடப் பெறுவார்கள். ஆசிரியர்களுக்கும், பேராசிரியர்களுக்கும் செல்வாக்கு உயரும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம், ஆன்மிகம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் நோக்கம் நிறைவேறப் பெறுவார்கள். பொருள்வரவு கூடும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் கூடிவரும்.

ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்கள் ஆதாயம் கொண்டு வரும். உழைப்புக்குரிய பயன் கிடைக்கவே செய்யும். ஆதலால் உழைப்புக்குப் பின்வாங்கலாகாது. வியாபாரிகள் ஏற்றம் பெறுவார்கள். மாணவர்கள், குறிப்பாக இஞ்சினியரிங் துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் புகழ் கூடும். ஜன்மத்தில் கேதுவும், 7 இல் ராகுவும் உலவுவதால் கணவன், மனைவியிடையே

வித்வான் வே. லட்சுமணன்

சிறுசிறு சலசலப்புகள் உண்டாகும் என்றாலும் குருபலத்தால் அவை விலகவும் கூடும். ஜூலை 27 ஆம் தேதி முதல் செல்வநிலையில் மேலும் வளர்ச்சி உண்டாகும். ஆகஸ்ட் 2 ஆம் தேதி முதல் மக்களால் உங்களுக்கும், உங்களால் மக்களுக்கும் அனுகூலங்கள் ஏற்படும். வாழ்க்கைத்துணைவரால் நலம் பெறவும் வாய்ப்புண்டாகும். ஆகஸ்ட் 5 ஆம் தேதி முதல் வியாபாரிகள் விழிப்புடன் இருப்பது நல்லது. மாணவர்கள் படிப்பில் முழுமையான அக்கறை செலுத்தவேண்டிவரும். ஜூலை 17,19,21,22,23,25,28 ஆகஸ்ட் 2,4,6,7,8,13,14,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, வடக்குத் திசைகள் அனுகூலமானவை. மிதுன, கன்னியா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,5 எண்கள் அதிர்ஷ்டமானவை.

மொத்தத்தில் சிறப்பான மாதமிது.

## மிதுனம் : (மிருகசீரிஷம் 3 ஆம் பாதம் முதல், திருவாதிரை, புனர்பூசம் 3 ஆம் பாதம் முடிய)

3 இல் உள்ள செவ்வாயும் 6 இல் உள்ள ராகுவும் உங்கள் ஆற்றலை வெளிப்படுத்துவார்கள். எதிர்ப்புகளைக் கடந்து வாழ்வில் வெற்றி வாய்ப்புகளைப் பெறுவீர்கள். உடன்பிறந்தவர்கள் உதவிக்கரம் நீட்டுவார்கள். வியாபாரத்தில் அபிவிருத்தி காணச் சந்தர்ப்பம் கனிந்துவரும். எழுத்தாளர்களும், பத்திரிகையாளர்களும் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். கணிதம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு உற்சாகம் கூடும். நூதன நண்பர்கள் அனுகூலமாக நடந்து கொள்வார்கள். தருமப்பணிகளிலும், தெய்வப்பணிகளிலும் ஈடுபட வாய்ப்புக் கூடிவரும். நற்காரியங்களுக்கு ஓரிரு செலவுகளையும் செய்ய நேரலாம். பொருள் திரட்டும் ஆர்வம் கூடும். விற்பனைப் பிரதிநிதிகள், கமிஷன் ஏஜெண்டுகள், ஓவியர்கள், சிற்பிகள் ஆகியோருக்கெல்லாம் செழிப்புண்டாகும்.

சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் சாதனை படைப்பார்கள். மாணவர்களுக்கு வெளிச்சமான சூழ்நிலை உருவாகும். பேச்சுத்திறமை பளிச்சிடும். நிலம், மனை, வீடு போன்ற ஸ்திரச்சொத்துகளால் நலம் உண்டாகும். ஏற்றுமதி, இறக்குமதி இனங்களைச் சேர்ந்தவர்கள் முன்னேற்றமான சூழ்நிலையைக் காண்பார்கள். ஜூலை 27 ஆம் தேதி முதல் கலைத் துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். பொருள் வரவும் அதிகரிக்கும். மாதர்கள் நலம் கூடப் பெறுவார்கள். கேளிக்கை, உல்லாசங்களில் ஈடுபாடு உண்டாகும். அதன்மூலம் மன உற்சாகமும் உண்டாகும். ஆகஸ்ட் 2 ஆம் தேதி முதல் அலைச்சல் சற்று அதிகரிக்கும். உடல்நலனிலும் கவனம் தேவைப்படும். இயந்திரப்பணியாளர்கள் விழிப்புடன் ஈடுபடுவது நல்லது. ஜூலை 17,19,21,22,23, 25,28,30 ஆகஸ்ட் 4,6,7,8,13,14,15 தேதிகள் சிறப்பானவை. தெற்கும், வடக்கும் அனுகூலமான திசைகளாகும். மிதுன, சிம்ம, விருச்சிக ராசிக்காரர்கள் உதவுவார்கள். 4,5,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

பொதுவில சுமாரான மாதமிது.

## கடகம் : (புனர்பூசம் 4 ஆம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)

குரு, சனி, செவ்வாய் ஆகியோர் அனுகூலமான நிலையில் சஞ்சரிக்காததால் உங்கள் எண்ணங்கள் ஈடேறத் தடையிருந்துவரும். அலைச்சல் அதிகரிக்கும். எடுத்த காரியத்தை நிறைவேற்ற அரும்பாடு படவேண்டிவரும். உஷ்ணாதிக்கம் காரணமாக உடல் ஆரோக்கியம் பாதிக்கப்படும். மதிப்பும், அந்தஸ்தும் சாதாரணமாகவே காணப்படும். பேச்சில் கடுமையைக் குறைத்து இனிமையைக் கூட்டிக் கொள்வது நல்லது. அதன் மூலம் குடும்பத்திலும் வெளிவட்டாரத்திலும் உங்கள் செல்வாக்கைக் காத்துக் கொள்ள இயலும். வீண் சண்டை சச்சரவுகளில் ஈடுபடவேண்டாம். பொருளாதாரநிலை திருப்திகரமாக இராது. வரவைக்காட்டிலும் செலவுகள் கூடுமாதலால் சிக்கன நடவடிக்கை அவசியம் தேவை.

ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்களில் ஈடுபட வேண்டாம். நூதன முயற்சிகளை ஒத்திப்போடுவது நல்லது. உத்தியோகஸ்தர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் விரும்பத்தகாத இடமாற்றமோ நிலைமாற்றமோ ஏற்படும். மேலதிகாரிகளிடம் விழிப்புடன் பழகுவதன் மூலமும், பொறுப்புகளைச் சரிவர ஆற்றுவதன் மூலமும் சங்கடங்களுக்கு ஆட்படாமல் தப்பலாம். மக்கள் நலம் கவனிக்கப்பட வேண்டிவரும். கணவன், மனைவியிடையே சலசலப்புகள் உண்டாகும். பக்குவத்துடன் பழகிவருவது நல்லது. கூட்டுத் தொழிலில் எச்சரிக்கை தேவை. சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் அளவோடு வளர்ச்சி காண்பார்கள். ஆகஸ்ட் 2 ஆம் தேதி முதல் செவ்வாய் 3 ஆமிடம் மாறுவதால் உங்கள் மனதில் துணிவும், தன்னம்பிக்கையும் வேர்விடும். பிரச்னைகளைச் சுலபமாகச் சமாளிப்பீர்கள். ஆகஸ்ட் 5 ஆம் தேதி முதல் வியாபாரிகளும், மாணவர்களும், எழுத்தாளர்களும் மந்த நிலை விலகப் பெறுவார்கள். இறைவழிபாட்டில் தொடர்ந்து ஈடுபடுவதன் மூலம் மன அமைதி பெற முடியும். ஜூலை 17,19,21,22,23,25,28,30 ஆகஸ்ட் 1,2,7,8,13,14,15 தேதிகள் ஓரளவு சிறப்பானவை. வடமேற்கு, தென் கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. ரிஷப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 6,7 எண்கள் அதிர்ஷ்டமானவை.

பொதுவில் விழிப்புடன் இருக்கவேண்டிய மாதமிது.

## சிம்மம் : (மகம், பூரம், உத்திரம் 1 ஆம் பாதம் முடிய)

2 இல் குருவும், 11 இல் புதனும் உலவுவதால் செல்வநிலையில் வளர்ச்சி காண்பீர்கள். பேச்சாற்றல் பிரகாசிக்கும். முகவசீகரம் கூடும். குடும்பத்தில் நற்காரியங்கள் நிகழும். மாணவர்கள் வெற்றி வாகை சூடுவார்கள். கொடுக்கல் - வாங்கல், ஸ்பெகுலேஷன் துறைகள் ஆக்கம் தரும். மக்களால் மனமகிழ்ச்சி கூடும். உற்றார், உறவினர்கள்,

நண்பர்கள் தொடர்பு நலம் தரும். ஆசிரியர்கள், பேராசிரியர்கள், வழக்கறிஞர்கள், நீதிபதிகள், அமைச்சர்கள், ஆன்மிகவாதிகள், மேடைப் பிரசங்கிகள் ஆகியோர் உற்சாகம் கூடப் பெறுவார்கள். கடன் உபத்திரவம் குறைவடையும். உடல் ஆரோக்கியம் சீராகவே இருந்து வரும். எதிரிகள் குறைவார்கள். செய்துவரும் தொழிலில் அபிவிருத்தி உண்டாகும். அலுவலகங்களில் பணிபுரிபவர்கள் சீரான வளர்ச்சியைப் பெறுவார்கள்.

வியாபாரிகள், எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள், கணிதத்துறையாளர்கள், விஞ்ஞானிகள், இரசாயனத்துறைகளைச் சேர்ந்தவர்கள் ஆகியோருக்கெல்லாம் செழிப்பு உண்டாகும். ராசிநாதன் 12லும் செவ்வாய் ஜன்மத்திலும் உலவுவதால் உஷ்ணாதிக்கம் கூடும். பயணத்தின் போதும், இயந்திரங்களில் பணியாற்றும் போதும் பாதுகாப்பு அவசியம் தேவை. வீண் அலைச்சலைக் குறைத்துக் கொள்வது நல்லது. சனி 7லும், சுக்கிரன் 10இல் கேதுவுடன் சஞ்சரிப்பதாலும் கணவன், மனைவி உறவுநிலை திருப்திகரமாக இராது. சிறுசிறு பிரச்னைகள் உருவாகும். பக்குவத்துடன் சமாளிப்பது நல்லது. கூட்டுத் தொழிலில் கவனம் தேவைப்படும். ஜூலை 27 ஆம் தேதி முதல் கலைத்துறையினருக்கு மந்த நிலை விலகும். மாதர்களது நிலைமையிலும் வளர்ச்சி தென்படும். ஆகஸ்ட் 2 ஆம் தேதி முதல் தருமப் பணிகளிலும், தெய்வப்பணிகளிலும் ஈடுபடச் சந்தர்ப்பங்கள் கூடிவரும். 5 ஆம் தேதி முதல் வியாபாரிகள் விழிப்புடன் இருப்பது அவசியமாகும். எதிர்பாராத ஓரிரு செலவுகளும் அவ்வப்போது உண்டாகும். ஜூலை 17,19,21,22,23,25,28,30 ஆகஸ்ட் 1,2,4,13,14,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்குத் திசை அனுகூலமானது. கன்னி, மிதுன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,5, எண்கள் அதிர்ஷ்டமானவை.

மொத்தத்தில் விசேடமான மாதமிது.

## கன்னி : (உத்திரம் 2 ஆம் பாதம் முதல், ஹஸ்தம், சித்திரை 2 ஆம் பாதம் முடிய)

சனி பலம் கூடியிருப்பதாலும், புதன் அனுகூலமாகச் சஞ்சரிப்பதாலும், சூரியன் 11 இல் உலவுவதாலும் உங்கள் பராக்கிரமம் கூடும். சங்கடங்களைச் சமாளிக்கும் சக்தி உண்டாகும். பிறமொழி, மதங்களைச் சேர்ந்தவர்கள் உதவ முன்வருவார்கள். பயணத்தால் ஓர் எண்ணம் நிறைவேறும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். எதிர்ப்புகளின் கரம் வலுக்குறையும். செய்துவரும் தொழிலில் வளர்ச்சி உண்டாகும். தொழிலாளர்களும், விவசாயிகளும் முன்னேற்றமான சூழ்நிலையைக் காண்பார்கள். புனிதப்பணிகளில் ஈடுபடச் சந்தர்ப்பம் கனிந்து வரும். மக்களால் ஓரிரு நன்மைகள் உண்டாகும். கறுப்பு நிறப் பொருட்கள் லாபம் தரும். அரசியல்வாதிகள் தங்கள் மதிப்பு உயரப் பெறுவார்கள்.

அரசாங்க விவகாரங்களில் நல்ல திருப்பத்தை எதிர்பார்க்கலாம். முக்கியப் பொறுப்புகளை வகிப்பதற்கும் சந்தர்ப்பம் கனிந்துவரும். கடல் வாணிபம் லாபம் தரும். திரவப் பொருட்கள் ஆதாயம் கொண்டு வரும். நிர்வாகத்துறைகளைச் சேர்ந்தவர்கள் ஏற்றம் பெறுவார்கள். எழுத்தாளர்களும், பத்திரிகையாளர்களும் வரவேற்பு கூடப் பெறுவார்கள். மாணவர்கள் தங்கள் திறமைக்குரிய வளர்ச்சியைக் காண்பார்கள். கணிதத்துறையாளர்கள், மருத்துவர்கள், விஞ்ஞானிகள், இரசாயனத்துறைகளைச் சேர்ந்தவர்கள் ஆகியோருக்கெல்லாம் செழிப்பான பாதை புலப்படும். அலைச்சல் கூடுவதற்கு இடமுண்டு. செவ்வாய் பலம் இல்லாததால் எதிலும் அவசரம் கூடாது. பொறுமை மிகத் தேவை. பணநடமாட்டம் சீராகவே இருந்துவரும். சகோதர நலனில் கவனம் செலுத்துவது நல்லது. ஜூலை 17,19,21,22,23,25,28,30 ஆகஸ்ட் 1,2,4,6,7,13,14,15 தேதிகள் சிறப்பானவை. வடக்கு, மேற்குத் திசைகள் அனுகூலமானவை. மிதுன, கடக ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,5,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

பொதுவில் சுமாரான மாதமிது.

## துலாம் : (சித்திரை 3 ஆம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3 ஆம் பாதம் முடிய)

11 இல் உள்ள செவ்வாய் உங்கள் ஆற்றலை வெளிப்படுத்துவார். துணிவோடும், தன்னம்பிக்கையோடும் எடுத்த காரியங்களில் திறம்பட ஈடுபட்டு அவற்றில் வெற்றியும் பெறுவீர்கள். செந்நிறப் பொருட்கள் ஆதாயம் கொண்டு வரும். இயந்திரப் பணியாளர்கள் ஏற்றம் பெறுவார்கள். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களுக்குப் பாராட்டுகள் குவியும். பொருள்வரவு சீராக இருந்துவரும். கணவன் மனைவி உறவுநிலை சீராகவே காணப்படும். கூட்டாகத் தொழில் செய்பவர்கள் ஏற்றம் பெறுவார்கள். வெளிநாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். 2 இல் ராகுவும், 8 இல் கேதுவும் உலவுவதால் குடும்பத்தில் சிறுசிறு பிரச்னைகள் அவ்வப்போது ஏற்படும். பிறமொழி, மதக்காரர்களிடம் விழிப்புடன் பழகுவது நல்லது. பேச்சில் நிதானம் தேவை.

5 இல் சனி வக்கிரநிலை பெற்றிருப்பதாலும், செவ்வாய், சனி ஆகியோர் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்வதாலும், குருபலம் குறைந்திருப்பதாலும் மக்கள் நலனில் கவனம் தேவைப்படும். மன அமைதிக் குறைவுக்கும் காரணம் உண்டு. தெய்வ வழிபாட்டில் தொடர்ந்து ஈடுபடுவது நல்லது. நூதனமான காரியங்களில் தற்சமயம் பிரவேசிக்க வேண்டாம். மாணவர்கள் படிப்பில் முழுமையான அக்கறை செலுத்தவேண்டிவரும். 10 இல் சூரியன் உலவுவதால் நிறுவன, நிர்வாகத் துறையினருக்குச் செழிப்புண்டாகும். அரசு விவகாரங்களில் அனுகூலமான போக்கு நிலவிவரும். அரசியல்வாதிகள் மதிப்பு உயரப் பெறுவார்கள். ஜூலை 27 ஆம் தேதி முதல் புனிதமான காரியங்களில் ஈடுபடச் சந்தர்ப்பம் கனிந்துவரும். ஆகஸ்ட் 2 ஆம் தேதி முதல் செவ்வாய் பலம் குறைவதால் எதிர்ப்புகள் அதிகரிக்கும். பொருளாதாரச் சிக்கலுக்கும் ஆட்பட நேரலாம். கைப்பொருளைப் பத்திர

## அமுதசுரபி - 25 ஆண்டுகளுக்கு முன் 1968 ஜூலை (ஆடி) - விலை 65 காசு - பக்கங்கள் 88

அட்டையில் : நாட்டிய நங்கைகள் ஹேமமாலினி, வைஜயந்திமாலா, குமாரி கமலா



மாகப் பாதுகாத்துக் கொள்வது நல்லது. ஆகஸ்ட் 5 ஆம் தேதி முதல் வியாபாரிகள் வெளிச்சம் காண்பார்கள். நவீன விஞ்ஞானத் துறைகள் ஆக்கம் தரும். தொழிலில் ஓரளவு வளர்ச்சி காணமுடியும். ஜூலை 19,21,22, 23,25,28,30 ஆகஸ்ட் 1,2,4,6,7,8,14,15 தேதிகள் சிறப்பானவை. தெற்கும், கிழக்கும் அனுகூலமான திசைகளாகும். கடக, சிம்ம ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

பொதுவில் சுமாரான மாதமிது.

### விருச்சிகம் : (விசாகம் 4 ஆம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

ராசிநாதன் செவ்வாய் 10லும், குரு 11லும் உலவுவதால் உங்கள் அறிவாற்றலும் செயல்திறமையும் பிரகாசிக்கும். மனதில் நல்ல எண்ணங்கள் வேர் விடும். அவை நிறைவேறவும் சந்தர்ப்பம் சாதகமாக அமையும். உயர்ந்த அந்தஸ்தில் உள்ளவர்கள் உங்கள் முன்னேற்றத்திற்காக உதவி புரிவார்கள். பொருள்வரவு திருப்திதரும். குடும்பத்தில் குதூகலம் கூடும். மக்கள்நலம் மகிழ்ச்சி தரும். பெற்றோரால் மக்களுக்கும், மக்களால் பெற்றோருக்கும் அனுகூலங்கள் உண்டாகும். இயந்திரப்பணியாளர்கள், இஞ்சினீயர்கள் ஆகியோர் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். சட்டம், காவல், இராணுவம் போன்ற இனங்கள் ஆக்கம் தரும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் துறைகளில் ஈடுபாடு உள்ளவர்கள் ஆதாயம் கூடப்பெறுவார்கள். வியாபாரம் அபிவிருத்தி அடையும்.

எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும், ஓவியர்களுக்கும், சிற்பிகளுக்கும் செழிப்பான பாதை புலப்படும். ஆன்மிகவாதிகள் மதிப்பு உயரப் பெறுவார்கள். தெய்வப்பணிகளிலும் தருமப்பணிகளிலும் ஈடுபாடு கூடும். செய்துவரும் தொழிலில் வளர்ச்சி காணமுடியும். பதவி உயர்வு, இட மாற்றம், ஊதிய உயர்வு ஆகியவை பெறவும் சந்தர்ப்பம் சாதகமாக அமையும். வெளிநாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். ஜன்மத்தில் ராகுவும் 4 இல் சனியும் உலவுவதால் அலைச்சல் சற்று அதிகரிக்கும். 7 இல் உள்ள கிரகங்கள் கணவன், மனைவியிடையே சலசலப்பை உண்டுபண்ணக் கூடும் என்றாலும் குரு பார்ப்பதால் மோசமான நிலை ஏற்படாது. ஜூலை 27 ஆம் தேதி முதல் கலைஞர்களுக்கு வெளிச்சம் தெரியவரும். மாதர்நலம் கூடும். ஆகஸ்ட் 2 ஆம் தேதி முதல் வெற்றி வாய்ப்புகள் அதிகரிக்கும். ஜூலை 21,22, 23,25,28,30 ஆகஸ்ட் 1,2,4,6,7,8,13 தேதிகள் சிறப்

| | |
|---|---|
| 42 பெண்மைக்குச் சம உரிமை - வி. கோபாலன் | சிவ பெருமான் அர்த்த நாரீச்வரராக அவதரித்த காரணத்தை விளக்கும் ஆன்மீக உண்மை |
| 44 தை நாகி - தங்கமணி | எக்குடி பிறப்பினும் எத்தரமாயினும் தாலிச்சரட்டின் மேன்மையே மேன்மைதான் என்பதைச் சித்திரிக்கும் சிறுகதை |
| 50 ராயர் கோபுரம் - வாசவன் | கலைஞனை அன்பால் பிடிக்கலாம்; அதிகாரத்தால் வளைக்க முடியாது என்பதை ஆணித்தரமாக வலியுறுத்தும் சரித்திரச் சித்திரம் |
| 55 என்னுடைய பிரயாண அனுபவம் - விமலா கிருஷ்ணகோபால் | யானைகளிடம் மாட்டிக் கொண்ட அனுபவத்தைச் சொல்லும் (சொந்த டைரி) குறிப்பு |
| 56 அவனுக்காகப் பிறந்தவள் - ராஜ்யஸ்ரீ | அவளுக்காகப் பிறந்தவன் மற்றவளுக்கு என்று மாறிவிட முடியுமா? சிந்திக்க வைக்கும் சிறுகதை |
| 62 என்றும் எங்கும் எப்பொழுதும் | இன்று முத்திரைப் பதிக்கும் "கோல்ட் ஸ்பாட்" குளிர் பானத்தின் வளர்ச்சிக்கு உதவிய கட்டுரை |
| 65 வில்லிபுத்தூரார் மகாபாரதம் - புலவர் கீரன் | தெளிவான விளக்கங்களால் -புரியாத சூட்சுமத்தைப் புலப்படுத்தும் தெய்வீக திருவிழாவின் முதல் அத்தியாயம் |
| 75 உங்கள் இம்மாத பலன் - பி.வி.ராவ் | எல்லா வயதினரையும் - தரத்தினரையும் அடுத்த பக்கத்தைப்புரட்டவிடாமல் செய்யும் ஜோதிட ரகசியம் |
| 84 வளரும் இசைப் புலவர்கள் - கீதப்ரியா | அறிமுகமாகியுள்ளவர்கள், நாகூர் அம்பி அய்யரும், திருமதி ப்ரேமா ஹரிஹரனும். |
| 86 ஆயிரம் ஆண்டுகளில் தமிழகம் - விக்கிரமன் | ஆயிரம் ஆண்டுகளின் தமிழக வரலாற்றைக் கோவையாக இளைஞர்களுக்குச்சொல்லும் சரித்திர விசித்திரம்! |

- மாலதி நாகராஜ்

பானவை. தெற்கும், வடகிழக்கும் அனுகூலமான திசைகளாகும். சிம்ம, கன்னியா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

மொத்தத்தில் விசேடமான மாதமிது.

## தனுசு : (மூலம், பூராடம், உத்திராடம் 1 ஆம் பாதம் முடிய)

சனிபலம் கூடியிருப்பதால் உங்கள் ஆற்றல் பிரகாசிக்கும். எதிர்ப்புகள் என்பவை குறைவடையும். முன்னேற்றத்திற்கான வாய்ப்புகள் கூடிவரும். சிறுசிறு பயணங்களை அவ்வப்போது மேற்கொள்ள நேரலாம். அதன்மூலம் நலம் பெறவும் சந்தர்ப்பம் உருவாகும். சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் எதிர்ப்புகளுக்கிடையேயும் ஓரளவு வளர்ச்சி காண்பார்கள். கடிதப் போக்குவரத்து நற்செய்தி கொண்டுவரும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் செலுத்திவருவது நல்லது. வீண் அலைச்சலைத் தவிர்ப்பது அவசியமாகும். சூரிய பலம் குறைந்திருப்பதால் தந்தை நலனில் அக்கறை தேவைப்படும். அரசியல்வாதிகள், அரசுப்பணியாளர்கள் ஆகியோர் விழிப்புடன் செயல்படுவது நல்லது. நிர்வாகத்துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு முன்னேற்றம் தடைப்படும்.

மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வளர்ச்சி காண அரும்பாடுபடவேண்டிவரும். கணவன், மனைவி இடையே சலசலப்புகள் கூடும். விட்டுக் கொடுத்துப் பழகி வருவது நல்லது. திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்குச் சந்தர்ப்பம் குறைவு. மாதர்கள் நலம் சீராக இராது. உத்தியோகஸ்தர்கள் தங்கள் பொறுப்புகளைச் சரிவர ஆற்றிவந்தால் சோதனைகளுக்கு ஆட்படாமல் தப்பலாம். வியாபாரிகள் தங்கள் திறமைக்குரிய வளர்ச்சியைக் காண்பார்கள். ஆகஸ்ட் 2 ஆம் தேதி முதல் செவ்வாய் பலம் கூடுவதால் வெற்றி வாய்ப்புகள் அதிகரிக்கும். தேங்கிக் கிடந்த காரியங்கள் புத்துணர்வு பெறும். செயலில் ஒரு வேகம் தென்படும். நிலபுலங்களால் அனுகூலம் உண்டாகும். இயந்திரப் பணியாளர்களும், இஞ்சினீயர்களும் செழிப்புப் பெறுவார்கள். ஜூலை 17,22,23, 25,28,30 ஆகஸ்ட் 1,2,4,6,7,8,13,14 தேதிகள் சிறப்பானவை. மேற்குத் திசை நலம் தரும். கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 8,9 எண்கள் அனுகூலமானவை.

மொத்தத்தில் மாதப் பின்பகுதி சிறப்பானதாகும்.

## விண்வெளிப் பாதையிலே...



விண்வெளிப் பாதையிலே...
நிலவு
படகானபோது–
அதில் ஏறிப்
பயணம் செய்யப் புறப்பட்டேன்!

வானம்–
குறைப் பிரசவத்தில்
ஈன்றெடுத்த
விண்மீன்கள் கைதட்ட...
சுகப்பிரசவத்தில்
வெளிவந்தவை
எனக்கு வழிகாட்டியது!

படகைச் செலுத்தினேன்–
நீர் குடித்துவிட்டு
நிதானம் இன்றியே...
கருமேகம் ஒன்று
தன் கால்களால் தள்ளாடி வந்தது!

நிலவுக்கோ... கோபம்!
அழைத்தது மேகத்தை!
"சாலைவிதிகளைச் சரியாகப்
பின்பற்றாது...
சங்கடம் கொடுத்த மடையனே!"

அரண்டது மேகம்
அறைந்தது நிலவு
விளைவு...
இடியும் மின்னலும்
பயந்து ஓடிட
அரண்ட மேகமோ...
அழுதுகொண்டே சென்றது!

–எ. விஜயசுந்தரம்.

### மகரம் : (உத்திராடம் 2 ஆம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2 ஆம் பாதம் முடிய)

குருவானவர் 9 இல் உலவுவதால் உங்கள் செல்வாக்கும், மதிப்பும் உயரும். முக்கியஸ்தர்களது தொடர்பால் நலம் பெறுவீர்கள். பணநடமாட்டம் திருப்திகரமாக இருந்துவரும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கும் இடமுண்டு. தெய்வப்பணி களிலும், தருமப்பணிகளிலும் ஈடுபாடு கூடும். அதனால் மனதில் அமைதியும் உண்டாகும். குடும்ப நலம் சீராக இருந்துவரும். மக்களால் ஓரிரு நன்மை களைப் பெற வாய்ப்பு உண்டாகும். பிறமொழி, மதங்களைச் சேர்ந்தவர்கள் உதவ முன்வருவார்கள். வெளிநாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்த வர்கள் சுபிட்சம் காண்பார்கள். வியாபாரம் அபி விருத்தி அடையும். அலுவலகங்களில் பணிபுரி பவர்கள் முன்னேற்றமான சூழ்நிலையைக் காண் பார்கள்.

ஆசிரியர்கள், பேராசிரியர்கள், ஆன்மிகவாதிகள், அமைச்சர்கள், சட்ட வல்லுநர்கள் ஆகியோருக்கெல் லாம் முன்னேற்றமான போக்கு நிலவிவரும். மாணவர்கள் படிப்பில் முழுமையான அக்கறை செலுத்தினால் வளர்ச்சி காணமுடியும். உடன்பிறந் தவர்கள் நலனில் அக்கறை தேவைப்படும். 8 இல் செவ்வாய் உலவுவதால் வீண் சண்டை, சச்சரவு களில் ஈடுபட வேண்டாம். பயணத்தின் போதும், இயந்திரங்களில் பணியாற்றும்போதும் பாதுகாப்புத் தேவை. நிலபுலங்கள் சம்பந்தப்பட்ட இனங்களில் விழிப்புடன் ஈடுபடுவது நல்லது. உற்றார், உற வினர்கள், நண்பர்களிடம் பக்குவத்துடன் பழகி வருவது அவசியமாகும். ஆகஸ்ட் 2 ஆம் தேதி முதல் செவ்வாய் 9 ஆமிடம் மாறுவதால் பிரச்னைகள் குறைவடையும் குடும்பநலம், சகோதர நலம் யாவும் சீர்பெறும். ஜூலை 17,19,25,28,30 ஆகஸ்ட் 1,2,4,6,7,8; 13,14,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தென் கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. ரிஷப, கன்னியா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,4,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

மொத்தத்தில் மாதப்பின்பகுதி முன்பகுதியைக் காட்டிலும் விசேடமானதாக அமையும்.

### கும்பம் : (அவிட்டம் 3 ஆம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3 ஆம் பாதம் முடிய)

முக்கியமான கிரகங்களான குரு, சனி, செவ்வாய் ஆகியோர் கோசாரப்படி அனுகூலமான நிலையில் சஞ்சரிக்காததால் உங்கள் அபிலாஷைகள் ஈடேறத் தடைகளும் குறுக்கீடுகளும் உண்டாகும். சூழ்ச்சிக் காரர்களால் சோதனைகளுக்கு ஆட்படுவீர்கள். அலைச்சலும், உழைப்பும் அதிகரிக்கும். மனதில் சலனம் குடிகொள்ளும். கணவன், மனைவி உறவு நிலை சீராக இராது. கூட்டுத் தொழிலில் ஈடுபாடு உள்ளவர்கள் பங்குதாரர்களிடம் விழிப்புடன் பழகுவது நல்லது. வீண்சண்டை, சச்சரவுகளில் ஈடு படவேண்டாம். நூதன முயற்சிகளை ஒத்திப்போடு வது அவசியம் ஆகும். செய்து வரும் தொழி லில் அபிவிருத்தி காண அரும்பாடுபடவேண்டி வரும். உத்தியோகஸ்தர்கள் விரும்பத்தகாத இட மாற்றத்தையோ நிலைமாற்றத்தையோ காண நேரும். பொருளாதாரநிலையில் ஏற்றம், இறக்கம் இரண்டுமே காணப்படும். சிக்கன நடிவடிக்கை அவசியம் தேவை.

ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங் களில் எச்சரிக்கையுடன் ஈடுபடுவது அவசியமாகும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் அளவோடு வளர்ச்சி காண்பார்கள். ஜூலை 27 ஆம் தேதி முதல் மக்கள்நலனில் அபிவிருத்தி தெரியவரும். ஓரிரு எண்ணங்களும் ஈடேறும். மாதர்கள் நலம் கூடப் பெறுவார்கள். சமுதாய நலப்பணியாளர்களுக்கு வரவேற்பு கூடும். ஆகஸ்ட் 2 ஆம் தேதி முதல் செவ்வாய் 8 ஆமிடம் மாறுவதால் எதிலும் விழிப்புடன் ஈடுபடுவது நல்லது. அலட்சியப் போக்கு அடியோடு கூடாது. பயணம் தவிர்ப்பது அவசியம். இயந்திரப் பணி யாளர்களும், இஞ்சினீயர்களும் பொறுப்புணர்ந்து

பணியாற்றினால் சோதனைகளுக்கு ஆட்படாமல் தப்பலாம். ஆகஸ்ட் 5 ஆம் தேதி முதல் புதன் 6 ஆமிடம் மாறுவதால் வியாபாரிகளுக்கு வெளிச்சம் தெரியவரும். நிறுவன, நிர்வாகத்துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். அரசியல்வாதிகள் இம் மாதத்தில் ஒரு சில இனங்களில் நலம் கூடப் பெறு வார்கள். கடல் வாணிபம் லாபம் தரும். ஜூலை 17,19,21,22,28,30 ஆகஸ்ட். 1,2,4,6,7,8,13,14,15 தேதிகள் சிறப்பானவை. தென்கிழக்கு, கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. ரிஷப, மிதுன, கடக ராசிக் காரர்கள் உதவுவார்கள். 1,5,6 எண்கள் அனுகூல மானவை.

மொத்தத்தில் சாதாரணமான மாதமிது.

## மீனம் : (பூரட்டாதி 4 ஆம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

ராசிநாதன் குரு 7 இல் அமர்ந்திருப்பதாலும், செவ்வாய் பலம் கூடியிருப்பதாலும் உங்கள் அறி வாற்றலும், செயல் திறமையும் கூடும். எடுத்த காரியங்களைத் திறம்பட ஆற்றி மற்றையோரின் நல்லெண்ணங்களுக்குப் பாத்திரமாவீர்கள். மனதில் உற்சாகம் வேர்விடும். முக்கியஸ்தர்களுடைய தொடர்பு ஆக்கம் தரும். பொருளாதாரநிலையில் வளர்ச்சிக்கு இடமுண்டு. சட்டம், காவல், இராணு வம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றி நடை போடுவார்கள். மாணவர்களது திறமை பளிச் சிடும். சினிமா சங்கீதம் போன்ற கலைத்துறை களைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். நல்ல தகவல் வந்து சேரும். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் வரவேற்பு கூடும். நிலம், மனை, வீடு, வாகனங்கள் ஆகியவற்றின் சேர்க் கையோ அல்லது அவற்றால் ஆதாயமோ பெற வாய்ப்புண்டாகும்.

உற்றார், உறவினர்கள், நண்பர்கள் ஆகியோரது சேர்க்கை நலம் உண்டாக்கும். கேளிக்கை, உல்லா சங்களில் ஈடுபடச் சந்தர்ப்பம் கூடிவரும். மக்கள் நலம் ஒருநாள்போல் மறுநாளிராது. கணவன், மனைவி உறவுநிலை சீராகவே இருந்துவரும். திருமணம் ஆகாதவர்கள் அதற்கான வாய்ப்பைப் பெறுவார்கள். திருமணம் ஆனவர்களுக்கு இல்லறத் தில் இன்பம் சூழும். ஜூலை 27 ஆம் தேதி முதல் நூதனப் பொருட் சேர்க்கை உண்டாகும். விருந்து உபசாரங்களில் ஈடுபடவும் சந்தர்ப்பம் கனிந்து வரும். ஆகஸ்ட் 2 ஆம் தேதி முதல் அலைச்சல் சற்று அதிகரிக்கும். செய்தொழிலில் வளர்ச்சி காணச் சந்தர்ப்பம் சாதகமாக அமையும். தெய்வப் பணிகளிலும், தருமப்பணிகளிலும் ஈடுபாடு அதி கரிக்கும். வெளிநாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். ஆகஸ்ட் 5 ஆம் தேதி முதல் வியாபாரிகள் விழிப் புடன் இருப்பது நல்லது. ஜூலை 17,19,21,22,23,28,30 ஆகஸ்ட் 1,2,4,6,7,8,13,14,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தெற்குத் திசைகள் நலம் தரும். ரிஷப, மிதுன, கன்னியா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,5,6,7 எண்கள் அதிர்ஷ்டமானவை. ೆ

நூறு கோடி மைல் களுக்கு அப்பால் இருக்கும் சூரியன் இதோ, பக்கத்தில் வந்து நிற்பது போன்ற தகிப்பு. எதை நினைத்தாலும் ஒரு சலிப்பு. வேலை செய்ய மனம் ஒப்பவில்லை. கோடையின் உக்கிரம் கொடுமையாய் குத்தியது. என் வயதைக் கணக் கிட்டேன். அப்படியொன்றும் அதிகமில்லை. ஐம்பத்து சொச் சம்தான். ஆபீஸுக்கு லீவு போட்டுவிட்டு வீட்டுக்குச் சென் றால் என்ன? செய்தேன். மணி இரண்டு. பொடி நடையாய் பஸ் டெர்மினஸ். வெறிச்சென்றிருந் தது. அமர்ந்தேன். மணி இரண்டு பத்தாகியும் பஸ் வர வில்லை. பார்வை நுழைவாயி லிலேயே நிலைகுத்தி நிற்க தூரத்தே கேட்டையும் அதை அடுத்த ரோடையும் தாண்டிக் கண்ணில் பட்டார்கள் அவர்கள். கணவன் - மனைவியோ? இருக் காது. நெருக்கத்தில் சுகம் கண்டு கொண்டிருந்தார்கள். அடுத்த சில விநாடிகளில் என்னை நோக்கி வர - புரிந்து விட்டது எனக்கு. நிச்சயம் காதலர்கள்தான். கூச்சமின்றி கேட்டார்கள், "கோல்டன் பீச் போகணும். எங்கே பஸ் ஏற ணும்? நாங்கள் வெளியூர்க் காரர்கள் - காதலிக்கிறோம் - அடுத்த வாரம் கல்யாணம் - அதற்கு முன் ஊரைச் சுற்றிப் பார்க்க வந்தோம். உதவ முடியுமா எங்களுக்கு?"

கவி முற்றி கக்கத்தில் வந்ததை உணர்ந்தேன். அந்தக் காலம் என்றால் இப்படியா? மூச். தொட்டால் குற்றம். பட் டால் பாவம். உதட்டைப் பிதுக்கி னேன். என் முக பாவத்தை அறிந்து, "உங்களை தொந் தரவு படுத்தியதற்கு மன்னிக் கவும். வருகிறோம்".

பழைய துள்ளல் குறைந் ததை உணர்ந்தேன். கொஞ்ச நேரம் அவர்களைப் பார்த் தேன். தப்பு செய்கிறோமோ நாம் துள்ளலுடன் வநதவர் களைத் துவள விட்டு விட் டோமோ? பழையதைப்பேசியே காலம் கடத்துகிறோம்! அவர் களது தற்காப்பு - அவர் களுக்குத் தெரிந்திருக்காதா என்ன? இன்றைய இளைஞர் கள் சீக்கிரம் புரிந்து நடக்கி றார்கள். நல்லது கெட்டதை அறிந்திருக்கிறார்கள். நம்மை விடவும் புத்திசாலியாக ஏன் அவர்கள் வளரக் கூடாது? அவர்களது இளமைத்துள்ளல் தானே என்னைப்பெரய் பேசச் சொன்னது? நிச்சயம் அதுவே தான். நாமும் ஏன் அவர் களுடன் அந்த துள்ளலைப் பகிர்ந்து கொண்டிருக்கக் கூடாது?

செய்தேன்.

"ஹலோ... உங்களைத் தான்!"

பார்த்தார்கள், "ஸார்"...

''எதிர்ப் பக்கம் கோவளம் போகிற பஸ் இரண்டரை மணிக்கு வரும். வழியில்தான் கோல்டன் பீச். மணமக்களுக்கு அட்வான்ஸ் வாழ்த்துகள்". அவர்கள் முகத்தில் தோன் றிய பிரகாசம் என்னையும் தொற்றிக் கொண்டது.






'அமுதசுரபி' சென்ற (ஜூன்) மாத அட்டைப் பட விளக்கப் போட்டிக்கு ஏராள மான வாசகர்கள் தங்கள் கருத்தை எழுதியிருந்தார்கள்.

அவற்றை மேலட்டை வரைந்த ஓவியர் திரு.ஜெய ராஜ் அவர்களிடமே கொடுத்து, சிறந்த ஒன்றைத்தேர்ந்தெடுத் துத் தரக் கேட்டுக் கொண் டோம். ஏகப்பட்ட வேலைப் பளுக்கிடையே மகிழ்ச்சியுடன் சம்மதம் தெரிவித்தார்.

சென்னை 32 ஐச் சேர்ந்த செல்வி மகேஸ்வரி எழுதிய விளக்கத்தைத் தேர்ந்து எடுத்து அதற்கான காரணத்தையும் சொன்னார்.

"உங்களுக்கு இளமை வேண்டுமானால் நீங்கள் இளமையாகத்தான் இருக்க வேண்டுமென்று கட்டாய மில்லை என்ற கருத்தைச் சொல்லி என் ஓவியத்தை இன்னும் இளமையாக்கி விட் டார், செல்வி மகேஸ்வரி!" என்று ஓவியர் திரு. ஜெயராஜ் பாராட்டிய - ரூ. 100/ பரிசு பெறும் அட்டைப் பட விளக்கம் இதோ...

# சங்கப் பலகை

## கர்ம – ரஹஸ்யம்

(ஆசிரியர் – சுவாமி ராம்ஸுக தாஸ். வெளியீடு – கோவிந்த பவன் காரியாலயம் (கோரக்பூர்). கிடைக்குமிடம் – கோபால் சேவா டிரஸ்ட், 82, கிருஷ்ணா டாக்கீஸ் ரோடு, ஈரோடு – 638 001. விலை – ரூ. 3.00).

"உனக்கு விதித்துள்ள கர்மத்தைச் செய்" என்று கூறுகிறது கீதை. இதை நால்வகைக் கர்மங்களாக இந்த நூலில் விவரித்து, பகவத் கீதை, ஸ்ரீபாகவதம் முதலிய நூல்களிலிருந்து ஆசிரியர் விளக்கியுள்ளார். நிகழும் நிலையில் உள்ள கர்மம் (க்ரியமான கர்மம்) ஸஞ்சித கர்மம், ப்ராரப்த கர்மம், ஸமத்துவம் என்று குறியீட்டுக் கட்டங்களுடன் விளக்கப்பட்டுள்ளது. கீதா வாசகனின் உரையைத்தெளிவாக அறிவதற்குக் பயன்படும் நூல்.

## நஞ்சு மருத்துவம்

(ஆசிரியர் – டாக்டர் எஸ். சிதம்பர தாணுப்பிள்ளை. வெளியீடு – சித்த மருத்துவ ஆராய்ச்சி நிலையம், தபால் பெட்டி எண் 7162, இ–32, அண்ணாநகர் (கிழக்கு), சென்னை – 600 102. விலை – ரூ 50.00).

நம் நாட்டுக்கே சொந்தமான சித்த மருத்துவ முறையின் சிறப்பை விளக்கும் ஆசிரியர், அதே சமயம் சித்த மருத்துவத்தில் தனிப்பட்ட பகுதியான நஞ்சு மருத்துவத்தின் சிறப்பை விரிவாக விளக்குகிறார். தாது வகுப்பு நஞ்சு, தாவர வகுப்பு நஞ்சு, நோய்க்கடிகளுக்கு உரிய சிகிச்சை முறைகளையும் விரிவாகச் சொல்லியிருக்கிறார். உடன் சிகிச்சை முறை உள்ளது. வீட்டில் உள்ளோர் அனைவரும் அவசியம் பயன்பெறலாம்.

## பசு பராமரிப்பின் நற்பயன்கள்

(தொகுப்பாசிரியர் – ஸ்ரீஹநுமான் பிரசாத் போத்தார். தமிழில் – ர. சௌரிராஜன் (சௌரி). கிடைக்குமிடம் – கோபால் சேவா டிரஸ்ட், 82, கிருஷ்ணா டாக்கீஸ் ரோடு, ஈரோடு – 638 001. விலை – ரூ. 3.50).

பசுவைத் தெய்வமாகப் போற்றி வருவது நம் பண்பாடு. ஆதிரைச் செல்வத்தைக் காப்பாற்றுவது எத்துணை முக்கியமானது என்பதை விளக்கும் நூல். கறவை இனப் பாது காப்பின் முக்கியத்துவத்தை ஆங்காங்கே கதைகள் உருவமாகவும் சொல்லி விளக்கப்பட்டிருக்கிறது. கோமாதாவின் சிறப்பை உணர்த்தும் சிறிய நல்ல நூல், எளிய, நல்ல மொழிபெயர்ப்பு.

## விஞ்ஞானத்திற்கு அப்பால்...

(ஆசிரியர் – கே. சரவணன், பி.இ., வெளியீடு – மேகதூதன் பதிப்பகம், 7. சின்னப்ப ராவுத்தர் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை – 600 005. விலை – ரூ. 15.00).

விஞ்ஞானத்திற்கு அப்பால் மெய்ஞானத்திற்கும், மனித மனத்துக்கும் உள்ள தொடர்பு, பல்லாண்டுகளுக்கு முன்பாகவே நம் நாட்டுச் சித்தர்கள் மூன்று காலங்களையும் உணர்ந்து பேசிய அருமை ஆகிய அரிய செயல்களை அருமையான, எளிமையான மொழியில் நூலாசிரியர் விளக்கியுள்ளார்.

19 சிறிய அத்தியாயங்களும் 120 பக்கங்களுமே உள்ள இந்த நூலில் டெலிபதி அல்லது மனத் தொடர்பு, தொலைவில் இருந்தாலும் மனிதர் ஒருவருடன் ஒருவர் மனத்தொடர்பு கொள்ளுதல்—ஏன் – செடி, கொடிகளுடன் கூடப் பேசும் முறை, கல்லும் பேசக்கூடிய அற்புதம் என்று ஆசிரியர் உதாரணங்களுடன் விளக்குவது வியப்பூட்டுகிறது.

நம் நாட்டு அக்காலப் புராண நாயகர்கள், சித்தர்கள் விட்டுச் சென்ற மனஇயல் முறைகளையும் இன்று ரஷ்ய, அமெரிக்க உளவியல் நிபுணர்கள் தொடர்ந்து ஆராய்ந்து வருவதைக் குறிப்பிடுகிறார்.

குறிப்பாக 'காலம்', 'காலத்தின் தன்மைகள்', 'கால அடர்த்தி' என்ற அத்தியாயங்களில், நாம் கற்பனையோ என்று நினைக்கக்கூடிய புராண கதாபாத்திரங்களையும் அவர்கள் செயல்பாடுகளையும் மேற்கோள் காட்டி, அவை நடப்பு விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளுடன் ஒப்பு நோக்கின் உண்மை என்றே தோன்றுகிறது என்று ஆசிரியர் ஆராய்ச்சியோடு விளக்குகிறார்.

ஜோதிடத்தை விஞ்ஞானமாக அணுகும் முறையை வலியுறுத்தி, ஆனால் இது இப்போது மாறி 'ஆதரவானாலும், எதிர்ப்பானாலும் அரசியல் சார்புடையதாகவே இன்றைய ஜோதிடம் காணப்படுகிறது' என்பதை ஆதாரங்களுடன் காட்டுகிறார்.

புற உளவியல் (Para Psychology) பற்றி நூல் நெடுக விளக்குகிறார். மொத்தத்தில் விஞ்ஞானம் மற்றும் உளஇயல் ஆய்வாளர்களுக்கு மிகப் பயனுள்ள நூல். அதோடு சாதாரண வாசகர்களும் படித்து வியப்படையக் கூடிய நூல்.

—க.பா.

## அதே வருடம் அதே மாதம்

(ஆசிரியர் – லட்சுமி ரமணன். வெளியீடு – பூங்கொடிப் பதிப்பகம், 14, சித்திரைக் குளம் மேற்கு வீதி, மயிலாப்பூர், சென்னை – 600 004. விலை – ரூ. 24.00).

ஆசிரியரின் இரு புதினங்கள் அடங்கியது இந்த நாவல். முதலில் இடம் வகிக்கும் "அதே வருடம் அதே மாதம்" என்ற நாவல் ஆவியுலகம் மற்றும் திகிலுடன் கூடிய மர்ம நாவல். இரண்டாவதாக இடம் பெறுகிற "மாட்டேன் மீரா" பாசத்துக்கு முதலிடம் தருகிறது. மொத்தத்தில் ஒரே கனியில் இரு சுவைகள்.

## யசோதா கொடுத்து விடு

(ஆசிரியர் – லட்சுமி ரமணன். வெளியீடு – – பூங்கொடிப் பதிப்பகம், 14, சித்திரைக் குளம் மேற்கு வீதி, மயிலாப்பூர், சென்னை – 600 004. விலை – ரூ. 24.00).

"யசோதா கொடுத்துவிடு" மற்றும் "கொலைக்குப் பிறந்தவன்" ஆகிய இரு புதினங்கள் அடங்...

யுள்ளன. கதைப் பிடிப்போடு, சுவையான சம்பவங்கள் எளிமையான நடையில் சித்திரிக்கப்பட்டுள்ளன. வழக்கமான மர்மங்களுடன் பாசம் மற்றும் தாய்மையின் மேன்மை, வலியுறுத்திக் கூறப்பட்டுள்ளது.

— சிவகுமார்

## ஆரோக்கிய வாழ்வுக்கு வழிகாட்டும் யோகாசனங்கள்

(ஆசிரியர் - டாக்டர் ஏ.எஸ். அசோக்குமார். வெளியீடு - யோகா புக்ஸ் பப்ளிகேஷன், 8, யோகாம்பாள் தெரு, தி.நகர், சென்னை - 17. விலை - ரூ. 60.00).

ஆசனம், பிராணாயாமம், கிரியா, முத்ரா, தியானம் ஆகியவற்றைப் பட விளக்கங்களுடன் எளிய முறையில் விவரிக்கிறது இந்நூல். யோகாசனத்தைப் பற்றி தெளிவாக எல்லாரும் புரிந்து கொள்ளும்படியும், ஆரம்ப நிலைப் பயிற்சியாளருக்குத் தெரிய வேண்டிய விஷயங்கள் அனைத்தையும் இந்நூலில் அடக்கியுள்ளார் ஆசிரியர், டாக்டர் ஏ.எஸ். அசோக்குமார்.

## வாரிசு

(ஆசிரியர் - செ. ஞானன். வெளியீடு - பூங்கொடிப் பதிப்பகம், 14, சித்திரைக்குளம் மேற்கு வீதி, மயிலாப்பூர், சென்னை - 4. விலை - ரூ. 18.00).

பலவேறு பத்திரிகைகளில் வெளியான 18 சிறுகதைகளின் தொகுப்பு இந்நூல். ஒரு வித்தியாசமான பார்வையோடு வாழ்க்கையையும், மனிதர்களையும், அவர்களது இயல்புகளையும், செயல்பாடுகளையும் கவனித்து - அவற்றின் மீது தன் சிந்தனையை ஒளிபரப்பி எழுத்தில் பதிவு செய்திருக்கிறார் ஆசிரியர், செ.ஞானன்.

## திரை

(ஆசிரியர் - பிரபஞ்சன். வெளியீடு - பூஞ்சோலைப் பதிப்பகம், 58, துளசிங்கப் பெருமாள் கோயில் தெரு, திருவல்லிக்கேணி, வி. இல்லம், சென்னை - 600 005. விலை - ரூ. 20.00).

சிற்றிதழ்களிலிருந்து பிரபலமான வார மாத இதழ்கள் வரை அவ்வப்போது இந்நூல் ஆசிரியர் எழுதி வரும் சிறுகதைகளில் 14 சிறுகதைகளைத் தேர்ந்தெடுத்து தொகுக்கப்பெற்ற சிறுகதைத் தொகுப்பு. மனிதன் படும் அல்லல்களை அவனுக்கே எடுத்துணர்த்தி நயம்பட அவனுக்குப் பாதை காட்டும் பணியைச் செய்திருக்கிறார் பிரபஞ்சன், தன் சிறுகதைகள் சிலவற்றில்.

## பொட்டு

(ஆசிரியர் - நீலவன். வெளியீடு - நீலமணி பதிப்பகம், 11, கிருஷ்ண பிள்ளை தெரு, சாயிநாதபுரம், வேலூர் - 632 001. விலை - ரூ. 24.00).

25 சிறுகதைகள் அடங்கிய 'பொன்மலர்' என்றே இந்நூலைக் கூறலாம்.

மனித மனதின் பல்வகைப்பட்ட உணர்ச்சிகளையும், வேட்கைகளையும், விழைவுகளையும் - அடிமட்ட நிலையிலும் நடுத்தர வகுப்பினரிடையிலும் காண முற்பட்டிருக்கிறார்; முடித்துக் காட்டியும் உள்ளார் நீலவன்.

## யந்திரங்கள்

(ஆசிரியர் - அகிலன் கண்ணன். வெளியீடு - தாகம், 58, துளசிங்கப் பெருமாள் கோயில் தெரு, திருவல்லிக்கேணி, வி.இல்லம், சென்னை - 600 005. விலை - ரூ. 23.00).

15 சிறுகதைகளின் தொகுப்பு அகிலன் கண்ணனின் 'யந்திரங்கள்'. நம் எதிரில் நின்று வாய்வழியாய்க் கதை சொல்வது போன்ற பாதிப்பை ஏற்படுத்தியுள்ளார். 'கச்சிதமான வடிவமைப்பு, நேர்த்தியாகக் கதை சொல்லும் திறன், குறிப்பாகவும் தொனிப் பொருளாகவும் உணர வைக்கும் கலை நுட்பம், சரியான உணர்ச்சி வெளிப்பாடாக அமைந்தவை இக்கதைகள்' என்று டாக்டர் சு. வேங்கடராமன் சொல்வது மிகப் பொருத்தம்.

## சந்தனக்காவியம்

(ஆசிரியர் - சரயு. வெளியீடு - சரயு பதிப்பகம், பி.4, பிரசாத் அபார்ட்மெண்ட்ஸ், 1, கமலாபாய் தெரு, தி. நகர், சென்னை - 17. விலை - ரூ. 15.00).

உண்மைச் சம்பவங்களைக் கருவாகக் கொண்டு எழுதப்பட்ட 12 சிறுகதைகளின் தொகுப்பு, சந்தனக்காவியம்.

ஒவ்வொரு கதையையும் வெவ்வேறு கோணத்தில் படைத்து ஒரு தனித் தன்மையைப் படைத்திருக்கிறார் நூலாசிரியர் சரயு. எக்காலத்துக்கும் படிக்கத் தகுந்த நூல் இது.

—நாகு

## நிகழ்ச்சிகள் சில நினைவுகள்

(ஆசிரியர் - கே.ஜெகதீசன். பதிப்பகம் - விஜயா பதிப்பகம், 20, இராஜவீதி, கோயம்புத்தூர் - 641001. பக்கங்கள் - 132. விலை - ரூ. 20.00).

ஆசிரியர் தாம் கேட்ட, படித்த, பங்கேற்ற செறிவான நிகழ்ச்சிகளைப் பலரும் பயன் கொள்ளும் வகையில் 21 கட்டுரைகளாக்கித் தந்துள்ளார். தம் கட்டுரைகளை ஆசிரியர் தொகுத்துள்ள பாங்கிலிருந்து, மக்கள் மகிழ்ச்சியாக வாழ்வதற்கு உழைப்பே மருந்தாகும் என்னும் அவர்தம் உள்ளத்திலிருந்து வெளிப்படும் மையக்கருத்தை, நூலைப் படிப்போர் நன்கு புரிந்து கொள்ளலாம்.

## சாக்ரடீஸின் நம்மை மேம்படுத்தும் எண்ணங்கள்

(ஆசிரியர் - டாக்டர் சோ. சேசாசலம். பதிப்பகம் - பாரதி நிலையம், 108, உஸ்மான் சாலை, தியாகராயர் நகர், சென்னை - 600 017. பக்கங்கள் - 96. விலை - ரூ. 10.00).

சாக்ரடீஸ் என்றாலே 'உன்னையே நீ எண்ணிப் பார்' என்னும் அவரது தாரக மந்திரச் சொல் எல்லோரது எண்ணத்திலும் நிழலாடும். எதையும், ஏன்? எப்படி? என்று கேள்வி கேட்க வேண்டும் என்ற கருத்துடையவர் அவர். அவருடைய சீரிய கருத்துகள் அரசியல், சமுதாயம், பொருளாதாரம் என்னும் துறைகளில் பொதிந்துள்ளவற்றை நூலின் ஆசிரியர் தொகுத்துக் கூறியுள்ளது வாசகர்களைப் பெரிதும் கவரும் என்பதில் ஐயமில்லை.

— ப. இராமலிங்கம்

# விக்கிரமன்

## மூன்றாம் பாகம்

### 1. சோழநாட்டில் கங்கை

கங்கையைக் கொண்டு வரவேண்டும் என்ற புனித நோக்கத்துடன் பயணம் மேற்கொண்ட சக்கரவர்த்தி இராசேந்திர சோழ தேவர், முதல் நாள் பயணத்திற்குப் பிறகு தில்லைச் சிற்றம்பலத்தை அடைந்தார். அங்கு மாளிகையில் தங்கி ஒய்வு எடுத்த பிறகு, வீரநாராயணபுரத்துக்கருகே கடல் போல் காட்சியளித்த ஏரியைக் காணச் சென்றார்.

பல முறை அந்த ஏரிக் கரையைச் சுற்றி வந்திருக்கிறார். அக்கரை தெரியாது பரந்து விரிந்திருக்கும் ஏரியைக் காணும் போது அவர் மெய் சிலிர்க்கும். தன் முன்னோர்களின் திறமையை எண்ணி மகிழ்வார்.

இராசேந்திரன் தன் அருகே படைத் தலைவர்கள், வீரர்கள் சூழ்ந்திருப்பதை விரும்பவில்லை. அந்தப் பரிவாரத்தினைச் சற்று முன்னதாகச் சென்று தங்குமாறு கட்டளையிட்டார். இராசேந்திரனுடன் பல இரதங்களிலும்,நான்கு காளைகள் பூட்டப் பட்ட பெரும் கூண்டு வண்டிகளிலும் அறிஞர்கள் பலர் உடன் வந்தனர்.

வீரநாராயணபுரம் ஏரியைக் கண்டு மகிழ்ந்து வீரநாராயணர் திருக்கோயிலில் திருமாலை வழிபட வந்த இராசேந்திரன்தன் அருகே இருந்த ஈசானசிவ பண்டிதரிடம் கேட்டார்:

"குருநாதரே! என் முப்பாட்டனார் பராந்தக சோழரின் நீண்டகால நோக்கத்தைக் கவனித்தீர்களா? அழகிய கோயிலுக் கருகே நீர்நிலை ஒன்றை ஏற்படுத்தினார். அந்த ஏரிக்கு இறைவன் திருப்பெயரைச் சூட்டினார். நூறு ஆண்டுகளுக்குப் பிறகு வீரநாராயணபுரம் ஏரி சுற்றுப்புற மக்களுக்கு வாழ்வளிக்கிறது" என்று வியப்புடன் கூறும்போது, பண்டிதர் புன்முறுவலுடன், "பேரரசரே! பராந்தக சோழர் மாவீரர். தம் பெயர் நிலைக்க அவர்தம் வீரத்தை மட்டும் நம்பி இருக்கவில்லை. திருக்கோயிலும், குளமுமே மக்களின் அன்றாட வாழ்க்கை உயர்வுக்கு உறுதுணையாயிருக்கும் என்று முடிவு செய்தார். திருச்சிற்றம்பலத்து விமானத்துக்கு பொற் தகடு வேயவேண்டும் என்ற எண்ணம் அவருக்கு உதித்தது. சைவத் தத்துவத்தை விளக்கும் மெல்லிய பொற் தகடுகள் கோயில் விமானத்தில் பதிக்கத் திட்டமிட்டுப் பணியைத் தொடங்கினார். மெய்யாகவே பொன்னம்பலத்தைப் பொன் ஒளி வீசச் செய்ய முயன்றார். அவர் காலத்தில் அந்தப் பணி ஈடேறவில்லை. கண்டராதித்தன் அந்தப் பணியை முடிக்கத் தன்னையே தியாகம் செய்து கொண்டார். பராந்தக சோழ தேவர் மறைந்து பல ஆண்டுகள் ஆகின்றன. அவர் புகழை இன்றும் நிலை நாட்டிக் கொண்டிருக்கின்றன தில்லை பொன் விமானமும், வீரநாராயண புர ஏரியும். அதனால் அவருக்கு வீர நாராயணர் என்ற பெயரும் ஏற்பட்டது. பேரரசரே! தாங்களும் முப்பாட்டனார் வழி நடப்பதற்காக மகிழ்கிறேன், பாராட்டுகிறேன் பகீரதன் கங்கையைக் கொண்டுவர மிகப் பெரிய முயற்சியைக் கொண்டது போல் தாங்களும் திட்டமிட்டுள்ளீர்கள், என் பரிபூரண ஆசிகள்" என்றார்.

பண்டிதரைப் பார்த்துக் கை கூப்பிய இராசேந்திரன்,'பேரறிஞரே! பல வழிகளில் எனக்கு நல்லுரைகள் கூறி நற்பணிகள் செய்யத் தூண்டி விடுகிறீர்கள். பயணம் மேற்கொண்டு விட்டேன் கங்கை நீரைக் கொண்டு வர. சிவபெருமானுக்குக் கங்கை நீரை அபிஷேகம் செய்யுமாறு இலகுளீச பண்டிதர் கூறியுள்ளார். புதிய நகரம் ஒன்றையும், புதிய கோயில் ஒன்றையும் நிர்மாணிக்கத்→

# கங்காபுரிக் காவலன்

திட்டமிட்டுவிட்டேன். கோயில் கட்டும் பணியை வீரமாதேவியிடம் ஒப்படைத்து விட்டேன். எனக்குப் பெரும் கவலை. கங்கை நீரைக் கொண்டு வரும்போது கோயில் கட்டி முடிக்கப்பட்டிருக்க வேண்டும். கோயில் பணி முடியாவிட்டால், கொண்டு வரப்படும் கங்கைப் புனித நீரை என்ன செய்வது? ஒருவேளை கோயில் கட்டி முடிக்கப்பட்டு, கருவறையிலுள்ள சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு, குறித்த முகூர்த்ததில் திருமுழுக்காட்ட கங்கை நீர் வராது போனால்? கருவூர்ச் சித்தர் கோயில் குடமுழுக்கு விழாவை முடித்து விட்டு பொதிகைமலைச் சாரலுக்குச் சென்றால் மீண்டும் திரும்புவதில்லை என முடிவெடுத்திருக்கிறார். கோயில் திருப்பணி இடையூறின்றி முடிவடைய வேண்டுமே, என்று மற்றொரு கவலை" - பெருமுச்சுவிட்டார் இராசேந்திரன்

ஈசான சிவ பண்டிதர் இராசேந்திரனுக்குப் பலவகையிலும் யோசனை வழங்கி வழிநடத்தி வந்தவர். இராசேந்திரனின் மனக் கவலைக்குத் தக்க சமாதானம் கூற விரும்பினார். ஆனால் புதிய கோயில் கட்டுவதில் தன் யோசனையைக் கேட்கவில்லை என்ற மனக் குறை அவருக்கு உண்டு. ஆனால் அதைப் புலப்படுத்திக் கொள்ளாமல் இராசேந்திரன் எடுத்திருக்கும் முயற்சிகள் இரண்டும் மகத்தானவை என்பதை அவர் அறிவார். அவரால் தக்க ஆலோசனைகளே கூற முடியும். விரைவில் நிறைவேற்றி வைக்க அவரால் முடியுமா!

அவர் மெல்லிய புன்னகையுடன், "என் அருமை சோழ தேவரே! தங்கள் மனக் கவலையை நான் அறியேன். த்ங்கள் முயற்சி இடையூறின்றி விரைவில் முடிய வாழ்த்துவதைத் தவிர என்னால் வேறு என்ன செய்ய முடியும்? சிவ பெருமான் அருள் தங்களுக்குப் பரிபூரணமாக உண்டு. அதை வேண்டிப் பிரார்த்திக்கவும் நான் சித்தமா யிருக்கிறேன். ஒரே போதில் இரண்டு மாபெரும் பணிகளை நீங்கள் மேற்கொள்ளத் தங்களுக்கு ஆலோசனை வழங்கியவர் யார் என்று நான் அறியவில்லை" என்றார்.



தான் மிகவும் மதிக்கும் பண்டிதரின் மறுமொழி இராசேந்திரனுக்கு மன நிறைவை அளிக்கவில்லை.

"குருநாதரே! கங்கையில் நீராட வேண்டும் என்பது என் தந்தையின் வாழ்நாளில் இறுதிக் கால ஆசை. அவரால் கங்கை கரைக்குச் செல்ல முடியவில்லை. ஆனால் அவர் நினைவாக எழுப்பப்படும் ஆலயத்தில் நிர்மாணிக்கப்படும் சிவலிங்கத்திற்குக் கங்கை நீரைக் கொண்டு புனித அபிஷேகம் செய்யவேண்டும் என்று முடிவு செய்தேன். தஞ்சைப் பெரிய கோயிலைப் போன்று பெரிய கோயிலைக் கட்ட வேண்டும் என்பது என் இலட்சியம். அதற்கு வீரமாதேவி பேராதரவு அளித்தாள். அங்கு சிற்பக் கூடமே நிறுவ வேண்டும் என்ற ஆவல் அவளுக்கு. அந்தப் பணிக்காகத் தன்னைத்தியாகம் செய்யத் துணிந்திருக்கிறாள். நெடுந்தொலைவுப் பயணம்



வரக் கூடிய உடல் வாகுடன் உள்ள இளம் வயதினளான அவள் கங்கை நீரைக் கொண்டு வரும் அந்தப் புனிதப் பய ணத்தில் என்னுடன் வராமல் காட்டுப் பகுதியிலேயே தங்கி, கோயில் திருப் பணியை விரைவில் முடிக்க அல்லும் பக லும் பாடுபடத் துணிந்துவிட்டாள். இப் பொழுது புரிந்ததா என் முயற்சிக்கு அடிப்படையானவர்கள் யார் யார் என்பது?" என்று இராசேந்திர சோழ தேவர் கூறவும் பண்டிதரால் மறுமொழி கூற இயல வில்லை.

இராசேந்திரனிடம் மிக அன்பும், மதிப் பும் கொண்டு அவருக்கு அரிய யோசனை களை அவ்வப்போது வழங்கி வரும் பண்டிதருக்கு, கங்காபுரி யாத்திரையைத் தன்னைக் கேளாமலேயே இராசேந்திரன் மேற்கொண்டதில் மனக்குறை ஏற்பட்டது. அதை வெளிப்படையாகப் புலப்படுத்த விருப்பமில்லை.

இராசேந்திரன் மேற்கொண்ட இந்தக் கடுமையான பணிகளுக்குக் காரணம் இல குளீச பண்டிதர் என்ற முடிவுக்கு வந்திருந் தார். சோழநாட்டுத் திருக்கோயில்களை மேற்பார்வையிட்டு அவற்றின் நிர்வாகத்தை மேற்கொண்டிருப்பவர் இலகுளீசர். அவர் யோசனையாகத்தான் இருக்கவேண்டும் என்று பண்டிதர் முடிவு செய்தார். இராச ராசன் நினைவாக மேற்கொண்டுள்ள பணியைப் பற்றிக் குறை சொன்னால் இராசேந்திரன் ஏற்கமாட்டார் என்பது பண் டிதருக்குத் தெரியும். அதனால் இலகுளீ சரைச் சந்தித்துத் திட்டத்தில் மாறுதல் செய்வதென முடிவு செய்தார்.

"என்ன, பண்டிதரே மௌனமாகி விட் டீர்கள். என்னுடன் கங்கைக்கரைக்கு வரு கிறீர்களா?" என்று இராசேந்திரன் கேட் டார்.

கங்கை யாத்திரைக்கு இலகுளீசரையும் அழைத்துச் செல்லும் முடிவு முன்பே செய் தது. 'பயணத்தில் உடன் வருபவர்கள் குழு வில் தன்னையும் இப்போது சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று அரசர் முடிவு செய்திருப்பது தன்னை ஒருவகையில் சமா தானப்படுத்தவே இருக்கலாம். ஊஹூம்' பண்டிதர் சிந்தனை சுழன்றது.

"பண்டிதரே! திடீரென சிந்தனையில் ஆழ்ந்து விட்டீர். தில்லையை விட்டு வெளியே வரச் சம்மதிக்க மாட்டீர்களே? தங்கள் நிர்வாகத்திலுள்ள வேத பாட சாலைகள், தேவார இசைப் பள்ளிகள், இலக்கணப் பயிற்சிப் பள்ளிகள் இவற் றைக் கவனிப்பதைவிட்டு கங்கைக் கரைக் குத் தங்களை அழைத்துச் செல்வது சரியா என நானே யோசித்தேன். தங்களால் பல திங்கள் சிதம்பரத்தை விட்டு வெளியே தங்கியிருக்க முடியுமா என்றும் எண்ணி னேன். தாங்களும் அதைத்தான் நினைக் கிறீர்களோ!" இராசேந்திரன் பண்டிதரைக் கூர்ந்து நோக்கிக் கேட்டார்.

பண்டிதர் திடுக்கிட்டார். எவ்வளவு காலம்தான் சிதம்பரத்திலும், மற்றும் கல்விக் கூடங்கள் உள்ள இடங்களிலும் மட்டுமே தங்கியிருந்து, வெளிஉலகை மறந் திருப்பது? அரசர் அழைத்தால் செல்லாமல் இருக்க முடியாது. ஆனால் அரசர் தன்னை அழைத்துச் செல்ல விரும்ப வில்லை. அதற்காக இப்படிப் பேசு கிறார்.

"ஆமாம்... ஆமாம்... என் மனத்திலுள் ளதைத் தாங்கள் எவ்வாறு புரிந்து கொண் டீர்கள்? அதனால்தான் பண்டித சோழர் என்று மக்கள் தங்களைப் பாராட்டு கிறார்கள். சகல கலையும் அறிந்தவர்கள் நீங்கள்..." என்று ஏதேதோ சொல்ல முற் பட்டார்.

"எல்லாம் குருநாதராகிய தங்கள் கருணைதான். தாங்கள் நல்லாசானாக எனக்கு அமைந்திராவிடில் நான் அத் தகைய பெருமைக்கும் பட்டங்களுக்கும் உரியவனாவதேது?" என்று கூறிக் கரங் கூப்பி வணங்கினார் இராசேந்திரன்.

"சக்கரவர்த்திகளே! கங்கையில் நீராட வேண்டும் என்று எனக்கும் ஆசைதான். ஆனால் இங்குள்ள பணிகளை விட்டுவிட முடியுமா? மாணவர்களை விட்டுப் பிரிய முடியுமா? தங்களுடன் பயணம் புறப்பட்டு சிதம்பரம் வரை வந்து விடைபெற்றுக் கொள்ள எண்ணினேன். வீரநாராயண ஏரிக் கரையில் தங்களுடன் இருந்து பேசும் வாய்ப்புக் கிடைத்தது இறைவன் கருணையே. வீரநாராயண ஏரிக்கரையில் ஒரு சிந்தனை எழுந்தது.

## எங்கிருந்து வந்தது

# இவ்வளவு துணிச்சல்!...

நான் ஒரு இன்ஷூரன்ஸ் கம்பெனியில் ஏஜெண்டாகப் பணியாற்றி வருகிறேன்.

நான் சந்திக்கும் நபர்கள் பலர் என்னிடம் ஆங்கிலத்தில் பேசுவார்கள்.



அவர்கள் பேசுவதை ஓரளவு புரிந்துகொண்டாலும், அவர்களிடம் ஆங்கிலத்தில் பேச எனக்கு மிகவும் பயமாக இருக்கும்.

இதனால் இன்ஷூரன்ஸ் திட்டத்தின் நன்மைகளை ஆங்கிலத்தில் விரிவாக எடுத்துரைக்க முடியாமல் திண்டாடினேன்.

"இந்த வேலை உனக்கு ஒத்து வராதுன்னு அப்பவே சொன்னேன் கேட்டியா?" என்று என் வீட்டிலுள்ளோர் முணுமுணுக்கத் துவங்கினார்கள்.

வேலையை விட்டுவிடலாமா என்று யோசித்துக் கொண்டிருந்த போது, என்னுடன் பணியாற்றும் என் தோழி நிர்மலா விவேகானந்தா கல்வி நிலையத்தின் தபால் முறை ஆங்கிலப் பயிற்சி பற்றி கூறினாள்.

அவளது ஆலோசனைப்படி நான் இப்பயிற்சியில் சேர்ந்தேன்.

பயிற்சி முறை மிகவும் எளிமையாக இருந்ததால், மாதா மாதம் அவர்கள் அனுப்பிய பாடங்களை ஆர்வமுடன் படித்து மூன்றே மாதங்களில் ஆங்கில இலக்கணத்தை முழுமையாகக் கற்றுக் கொண்டேன்.

அடுத்த மூன்று மாதங்களில் ஸ்போக்கன் இங்கிலீஷ் பயிற்சி பெற்றேன்.

இப்பயிற்சியை முடித்த என்னால் இப்பொழுது மிகச் சரளமாக ஆங்கிலத்தில் பேச முடிகிறது. இதனால், நான் ஈடுபட்டுள்ள பணியில் சிறப்பாகப் பணியாற்ற முடிகிறது.

ஆங்கிலத்தில் பேசினால் தவறாகப் பேசிவிடுவோமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டிருந்த நானா இவ்வளவு துணிச்சலாக பேசுகிறேன் என்று எனக்கே வியப்பாக இருக்கிறது.

எஸ். ஜான்சி

வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில், தபால் மூலம் இப்பயிற்சியினை நீங்களும் மேற்கொள்ளலாம்.

'நேர்முகப் பயிற்சியும் உண்டு'

பெண்களுக்கு தனி வகுப்புகள்.

ஒரு போஸ்ட் கார்டில் உங்களது முகவரியைத் தெளிவாக எழுதி கீழ்க்காணும் முகவரிக்கு இன்றே அனுப்பி வையுங்கள். பயிற்சிபற்றிய விபரங்களை உங்களுக்கு உடனே அனுப்பி வைக்கின்றோம்.




**விவேகானந்தா கல்வி நிலையம்**

9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை-600 017.



"சொல்லுங்கள் பண்டிதரே! நல்ல கருத்துகள் நாட்டுக்கும் பயன். எனக்கும் பெருமை..."

"சக்கரவர்த்திகளே! மாபெரும் திட்டத்தை மேற்கொண்டுள்ளீர்கள். காட்டை அழித்து பெரிய நகரம், பெரிய கோயிலும் நிர்மாணிக்கப் போகிறீர்கள். நகரத்தை அமைப்பதும் காடு திருத்தி நாடாக்குவதோடு பயிர் நிலங்களை வளர்க்க வேண்டும். பயிர் நிலங்களுக்குப் பாசனத்திற்குத் தண்ணீர் வேண்டும். நகரமக்களுக்குக் குடிநீர் வேண்டும். இந்தப்பெரிய கோயில் பெரியநகரம் போன்று பேரேரி ஒன்றை ஏற்படுத்த வேண்டும். வீரநாராயண ஏரியைப் போன்ற பேரேரி ஒன்றைத் தாங்கள் வெட்டிட வேண்டும்..."

பண்டிதர் சொல்லும்போது, இராசேந்திரன் மனதில் ஆயிரம் ஆயிரம் எண்ணங்கள் உதித்தன. பண்டிதரின் இருகரங்களையும் பற்றிக் கொண்டு, தன் கண்ணில் எடுத்து ஒற்றிக் கொண்டு, "பண்டிதரே பண்டிதரே அரிய பெரிய யோசனைகளைத் தெரிவித்து விட்டீர்கள். ஆகா! தெய்விக அறிவு படைத்த உங்கள் கருத்துக்குப் பல்லாயிரம் பொன் பரிசளித்தாலும் ஈடாகாது. நான் நிர்மாணிக்கப் போகும் நகரத்தின் அருகே பெரிய ஏரியை உடனே ஏற்படுத்துவேன். கொள்ளிட நீரையும் காவிரியையும் அதில் தேக்குவேன்..." என்று கூறிய இராசேந்திரன் சிறிது நேரம் ஏதோ சிந்தித்தவராக, "பண்டிதரே! பண்டிதரே! எனக்கு ஒரு யோசனை இப்போது உதித்து விட்டது. கங்கை நீரைக் கொண்டுவந்து புதிய ஏரியில் நிரப்புவோம். கங்கை நீரைக் கொண்டு நாள்தோறும் இறைவனுக்குத் திருமஞ்சனம் செய்விப்போம். ஆகா! என் வாழ்வின் பயன் அதுதான். வாழ்க பண்டிதர்! முப்பெருந்திட்டங்கள் முப்பெருந்திட்டங்கள்" என்று ஆனந்தக் கூத்தாடினார்.

அருகே இருந்த தன் மகனை அழைத்து, "மகனே! உனக்கு ஒரு மகத்தான பணி. பேரேரியை வெட்டும் பணியை நீ மேற்கொள்ள வேண்டும். பண்டிதர் மேற்பார்வையில் நடைபெற இருக்கும் அந்த ஏரியை விரைவில் அமைத்து முடிக்க வேண்டும்" என்று கட்டளையிட்டார்.

தந்தையுடன் கங்கைக் கரைக்குச் செல்லப் போகிறோம் என்ற ஆவலுடன் இருந்தவனுக்கு தந்தையின் கட்டளை ஓர் அதிர்ச்சி.

மகனின் தயக்கம் அறிந்த இராசேந்திரன், "மகனே! உனக்குக் குறையொன்று உண்டு என்பதை நானறிவேன்.

"உன் மூத்த சகோதரன் இராசாதிராசன் என்ற பட்டப்பெயருடன் இளங்கோவாக்கப் போகிறேன். உன் இளைய சகோதரன் சுந்தரன் மதுரையிலிருந்து பாண்டிய நாட்டை நிர்வகிக்கிறான் - அவனுக்கும் அங்கே முடி சூட்டப்போகிறேன். என் நிலை என்ன? என்று நீ கேட்டுக் கொண்டிருந்தாய். நீ இந்தக் காட்டுப்பகுதியை நாடாக்கும் முயற்சியில் ஈடுபடு. பண்டிதருடைய கருத்திற்கேற்பப் புதிய ஏரியை உருவாக்கு. அந்த ஏரியில் கங்கை நீர். சோழ நாட்டில்.... கங்கை! என்றுமே இறைவனுக்கு கங்கை நீரால் அபிஷேகம். வெற்றி வெற்றி வெற்றி! என்று சிறு குழந்தைபோல் இராசேந்திரன் இருகரம் கொட்டிக் கூத்தாடினார். (தொடரும்)

சென்னை - 2இல் உள்ள ஆர்.ஜே. பிராசஸ் ஆஃப்செட் அச்சகத்தில் அச்சிட்டவர் : ஆர். ஜனார்த்தனன், ஸ்ரீராம் டிரஸ்ட், சென்னை - 600 001 சார்பில் வெளியிட்டவர் : ஏ.வி.எஸ். ராஜா, ஆசிரியர் - கலைமாமணி விக்கிரமன், நிர்வாக அலுவலகம், 145, லிங்கச் செட்டி தெரு, த.பெ.எண் : 5043, சென்னை - 600 001. தொலைபேசி : 5228545, 510535. ஆண்டுச் சந்தா ரூ. 60.